# கர்நாடக அரசியலில் ஒரு கடிகாரப் புயல்!

சமீபத்தில் தம்முடைய பிறந்த நாளின்போது கையில் கட்டியிருந்த கைக்கடியாரத்தைத் தொலைத்துவிட்ட முன்னாள் கர்நாடக முதல்வர் ஜே.எச். பாட்டீல், போலீசில் வாய் மூலமாகப் புகார் கொடுக்க, வீட்டில் இருந்த வேலைக்காரர்களில் ஒருவன் குற்றத்தை ஒப்புக்கொண்டு, திருடியதை திரும்பக் கொடுத்துவிட, பாட்டீலுக்குத் தலைவலி ஆரம்பமானது.

வைரங்கள் பதிக்கப்பட்ட அந்த கைக்கடியாரத்தின் மதிப்பு பத்து லட்சமென்றும், காவிரி நீர்ப் பாசன வசதித் திட்டத்திற்காக மலேசிய நாட்டுடன் ஏற்படுத்திக் கொண்டுள்ள ஒப்பந்தத்துக்காக லஞ்சமாகப் பெற்றிருக்கிறார் என்றும், இதை விசாரிக்க கமிஷன் ஒன்றை அமைக்க வேண்டும் என்றும் சட்டசபையில் பாட்டீல் மீது சரமாரியான குற்றச்சாட்டுகள் எழுப்பப்பட்டன.

"அந்த கடியாரத்தின் மதிப்பு ஒரு லட்சம்கூட இல்லை. அதிலுள்ளவை நிஜ வைரங்கள் அல்ல. சாதாரண கற்கள்தான். காவிரி நீர்ப் பாசன வசதி திட்டத்திற்காக ஒப்பந்தம் செய்யப்பட்டுள்ள மலேசிய வர்த்தகக் குழுவிற்கும் எனக்கும் எந்தவிதமான சம்பந்தமும் இல்லை. உண்மையில் இந்தத் திட்டம் முன்னாள் முதல்வர் பங்காரப்பா ஆட்சியின்போது ஒப்பந்தம் செய்யப்பட்டதாகும். இந்தக் கைக்கடியாரம் என்னுடைய மலேசிய நண்பரொருவர் எனக்குக் கொடுத்தது. ஐந்து லட்சம் கொடுத்துவிட்டு யார் வேண்டுமானாலும் இதை விலைக்கு வாங்கிக் கொள்ளலாம்" என்று பத்திரிகையாளர்கள் கூட்டத்தில் சொன்னார் பாட்டீல். ஆனால் இதன் உண்மையான விலை என்ன என்பதை மட்டும் சொல்லவில்லை.

"சரி, நீங்கள் சொல்வதை ஏற்றுக் கொள்கிறோம். முதல்வராக இருந்தபோது பரிசாகக் கிடைத்தது அல்லவா? அதை முறைப்படி அரசாங்க கஜானாவில் ஏன் ஒப்படைக்கவில்லை?" என்று இப்போது கேட்கத் தொடங்கி விட்டார்கள்.

இது போன்ற பிரச்னை முந்தைய பிரதமர்கள் காலத்தில் எழுந்ததுண்டு. இந்திரா காந்தி பிரதமராக இருந்தபோது ரஷ்யக் குழுவொன்று அன்பளிப்பாகக் கொடுத்த கம்பளி கோட்டு பிரச்னைக்குள்ளாகி அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டது. நேரு பிரதமராக இருந்தபோது அதிகாரபூர்வமாக அவருடன் சென்ற இந்திராவுக்கு சவுதி மன்னர் ஃபாசல் வைர நெக்லஸ் ஒன்றை அன்பளிப்பாகத் தந்தார். பாராளுமன்றத்தில் ராம் மனோகர் லோகியா எழுப்பிய பிரச்னையால் இதுவும் அரசாங்க கஜானாவில் ஒப்படைக்கப்பட்டது. ஆனால் அதிலிருந்த உண்மையான வைரங்கள் மாற்றப்பட்டு விட்டன என்ற புகாரும் கூடவே எழுந்ததுண்டு!

கர்நாடகாவைப் பொறுத்தவரை இதற்கு முன்பு முன்னாள் மத்திய அமைச்சர் சி.எம். இப்ராகிம், எண்பதுகளில் கர்நாடக சட்டசபை எம்.எல்.சியாக இருந்தபோது அராபிய ஷேக் ஒருவர் ராடோ கைக் கடியாரமொன்றை அவருக்குப் பரிசாகக் கொடுத்தது பிரச்னையை எழுப்பியது. ஆனால் எந்த அரபு நாடுகளுக்கு வேண்டுமானாலும் போக இது எனக்களிக்கப்பட்டுள்ள பாஸ்போர்ட் போன்றது என்று கூறிய இப்ராகிம், அதை அரசாங்கத்திடம் ஒப்படைக்க மறுத்தது பழைய கதை!

— மகேந்திரன்

## முக்கிய முகி

மார்க்கெட்டுக்கு சென்று ஆப்பிள் வாங்கி வருவது போல் நம் அழகிகளெல்லாம் உலக அரங்குகளிலிருந்து க்ரீடங்களை தூக்கிக் கொண்டு வந்து விடுகிறார்களே! யுனிவர்ஸல் அழகி சுஷ்மிதாவை விட்டு விட்டாலும் கூட, உலக அழகிகள் லிஸ்டில் ஐஸ்வர்யா, டயானா ஹேடன்... இப்போது யுக்தா முகி! வெனிஸியலா வழியில் இந்தியாவும் அழகிகளை உற்பத்தி செய்ய ஆரம்பித்து விட்டதே! முகியின் வெற்றியில் முக்கிய பங்கு அவரது ஆடைக்கு; இந்த ஐஸ் ப்ளூ ஆடையை டிஸைன் செய்த ஹேமந்த் த்ரிவேதி, அந்த காலர் பகுதியில் ஆஸ்த்ரியன் க்ரிஸ்டல்களைக் கொட்டி ஒரு சுழுத்தமைத்திருக்கிறார் பாருங்கள்... அள்ளிக் கொண்டு போய்விடும்! அதைப் போட்டுக் கொண்டால் உங்களுக்கும் எனக்கும்கூட உலக அழகி 'லுக்' வந்துவிடும்; ஆறடி முகிக்கு சொல்லவா வேண்டும்? மணிமகுடத்துக்கென்றே டிசைன் செய்தது போலிருந்த இந்த உடையைப் போட்டுக் கொண்டார்; பாரீசைப் பிடிக்கும், ஆட்ரி ஹெப்பர்னைப் பிடிக்கும் (ஹாலிவுட் நடிகை) என்றார்; உலக அழகி பட்டத்தைப் பிடித்து விட்டார்! உடை பாதி, விடை பாதி!



• நடுவில் யுக்தா முகி

## காலம் பொன்னானது!

14 ஆண்டுகள் என்பது வேண்டுமானால் வனவாச காலமாக இருக்கலாம்; 14 நாட்கள் என்பது உண்ணாவிரத காலம்கூட இல்லையே? அதற்குள் துவண்டு விட்டார்களே ஸ்ட்ரைக் செய்து கொண்டிருந்த ரெஸிடெண்ட் டாக்டர்களெல்லாம்? மீடியா, ஸீனியர் டாக்டர்கள் எல்லோரும் ஆதரவளித்தும்கூட தாக்குப் பிடிக்க முடியவில்லையே? சொற்ப தொகையை போட்டுத் தருவதாக அறிவித்த ஹெல்த் மினிஸ்டர் திக்விஜய் கன்சில்கர், 'இதை வாங்கிக் கொண்டு வேலைக்கு வந்தால் வாருங்கள்; இல்லாவிட்டால் பெட்டி படுக்கையைச் சுருட்டிக்கொண்டு, ஹாஸ்டலை காலி செய்து விட்டு வீடு போய்ச் சேருங்கள்' என்று நிர்தாட்சண்யமாகக் கூறி விட்டார். ஒரு வருடப் படிப்பு வேறு போய் விடப் போகிறதே என்ற கவலையில் பாவம், ஸ்ட்ரைக்கை வாபஸ் வாங்கி விட்டார்கள்! பணத்தை எப்போது வேண்டுமானாலும் சம்பாதித்துக் கொள்ளலாம்; ஒரு நிமிடத்தை இழந்தாலும், திரும்பப் பெற முடியாதே?

## சேர்த்தது சேருமா?

ஒரிஸா புயல் நிவாரண நிதிக்கு அள்ளி அள்ளிக் கொடுத்தவர்கள் எத்தனையோ பேர் இருக்கலாம்; ஆனால் மும்பை CST (பழைய வி.டி) ஸ்டேஷனில், ஷூ பாலீஷ் போடும் ஒரு டஜன் சிறுவர்களின் மனித நேயமிருக்கிறதே... அது தனி ரகம்; தங்கள் ஒரு நாளைய வருவாயை தியாகித்த தோடல்லாமல், பக்கத்தில் ஓர் உண்டியல் வைத்து அதில் வாடிக்கையாளர்களை, அவர் களிஷ்டம் போல், 'கூலி'யைப் போடச் சொன்னார்கள்; 2 ரூபாய் கொடுக்க மூக்கால் அழுபவர்கள்கூட 'டச்'சாகி, 20 ரூபாய் கொடுத்தார்கள்; ஷூவுக்கு பாலீஷே தேவையில்லை என்று சத்தியம் செய்தவர்கள்கூட அன்று தங்கள் 'ஷூ'வை பளபளப்பாக்கிக் கொண்டார்கள். நல்ல கலெக்ஷன்தான். "எவ்வளவு?" என்று சொல்ல மறுத்த சிறு

வர்கள், '''தொகையா முக்கியம்? ஈகை அல்லவோ பாக்கியம்?'' என்று விட்டனர் "பாலிஷ்"டாக! அதுசரி, இந்த "ஷூ ஷைன்" சிறுவர்கள் கொடுத்ததெல்லாம், அங்கே "கிக் பாக்" இல்லாமல் சென்று சேர வேண்டுமே?

## ஹே ராம்!

முதலில் இதற்கு இசையமைத்தவர் எல். சுப்பிரமணியம்தானாம். பணத்தைப் பற்றி எதுவுமே பேசாமல், வேலையை முடித்துக் கொடுத்து விட்டாராம்; எல்லாம் முடிந்த பின், "உங்கள் மார்கெட் வால்யூவுக்கேற்ப 60 லட்சம் கேளுங்கள்" என்றாராம் அவரது காரியதரிசி; கமல் அரண்டு விட்டாராம். ''சரி 50 லட்சமாவது கொடுங்கள்'' என்பதில் ஆரம்பித்து, இன்னும் சில பல லட்சங்கள் இறங்கி வந்தார்களாம்; ஆனால் கமல் ஒரேயடியாக நிராகரித்துவிட்டு, இளையராஜாவை விட்டு முழுதுமாக இசையை மாற்றி அமைக்கச் சொல்லி விட்டாராம்! "அதனாலென்ன? இளையராஜாவும் என் தந்தையின் மாணாக்கர்தானே?'' என்கிறார் சுப்பிரமணியம். அட ராமா...!

# சில மிலெனியக் குழப்பங்கள்!

## பழைமையில் புதுமை

'ஷோலே' நினைவிருக்கிறதா? அதன் தொடர்ச்சியாக 'ஷோலே 2000' என்றொரு படத்தை எடுக்கப் போகிறாராம் ப்ரொட்யூசர் ஜி.பி. சிப்பி! பழைய ஆர்டிஸ்டுகள் அனைவருக்கும் இதில் இடம் இருக்குமாம். (பாவம், கப்பர் சிங்கை – அம்ஜத்கான் தவிர). டயலாக்குகளிலும் பழைய 'கிக்' இருக்குமாம்! ரசிகர்களுக்குப் பழைய ஆர்வம் இருக்குமா? பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்!

இன்னொரு பழைய கதையைக் கிளறி யிருப்பவர் மகேஷ் மதாய்; 16,000 மக்களைப் பலி கொண்டு, அதைப் போல் இரண்டு மடங்கானவர்களை ஊனமாக்கிய போபால் க்யாஸ் ட்ராஜிடியை மையமாக்கி "போபால் எக்ஸ்பிரஸ்" என்றொரு படத்தை இயக்கியிருக்கிறார். விஷ வாயுக் கசிவால் அவதிப்பட்ட இரு காதலர்கள், அவர்களது நண்பன் – இவர்களைச் சுற்றிச் சுழலும் கதை. யூனியன் கார்பைட் கம்பெனியை சாடியிருக்கிறார் படத்தில்! வேடிக்கை என்னவென்றால், இதே கம்பெனியின் தயாரிப்பான எவரெடி பாட்டரிக்கு விளம்பரப் படம் அமைத்துக் கொடுத்து, 'கிவ் மீ ரெட்'' என்ற கோஷத்தை பாப்புலராக்கியதும் இதே மகேஷ் மதாய் தான்! சிவப்பு அபாயகரமானது என்பதை இப்போதுதான் உணர்ந்திருக்கிறார் – பாவம்!

## மிலெனியக் குழப்பங்கள்

புது மிலெனியம் ஜனவரி 1, 2000 அன்று துவங்குகிறதா, ஓராண்டு கழித்து ஜன.1 – 2001 அன்று துவங்குகிறதா என்ற குழப்பமே தீர்ந்தபாடில்லை; அதற்குள் மிலெனியத்தை வரவேற்க 'எல்டன் ஜான்' நிகழ்ச்சியை ஏற்பாடு செய்திருப்பதாக புஜ்பல் அறிவித்து விட்டார். அவர்கள் கேட்டிருக்கும் ஆயிரத்தெட்டு கேள்விகளுக்கும், கோரியிருக்கும் பிரம்மாண்ட பாதுகாப்புக்கும் இவர்கள் ஒப்புக் கொள்வார்களா என்பது அடுத்த குழப்பம். இவர்கள் ஒப்புக் கொள்ளாமல் அவர்கள் வருவார்களா என்பது மூன்றாவது குழப்பம். "மிலெனியம் பேபி"களுக்கு ஆர்வப்படுபவர்கள் இங்கே குறைவாக இருக்கிறார்களே என்று குறைபடுபவர்கள் ஒரு புறமிருக்க, மிலெனியத்தில் கல்யாணமே செய்து கொள்ளக் கூடாது என்றொரு புதுக் குழப்பம். 2000த்தில் மூன்று கழிகள் உள்ளனவாம்; அது ஜோடி சேர்பவர்களின் வாழ்க்கையை சூன்யமாக்கி விடுமாம்! அப்படியாவது கல்யாணச் சத்திரம் எளிதாகக் கிடைக்காதா என்று அங்கலாய்ப்பவர்கள் நிரந்தரக் குழப்பவாதிகள்?

— ஜெயஸ்ரீ ராஜ்

# சில வித்வான்கள்; பல ரசிகர்கள்!

கிரிக்கெட் கோச்சிங், கம்ப்யூட்டர் கிளாஸ், ஃப்ரெஞ்ச்/ஹிந்தி வகுப்பு, ஓவியம், கைவேலைப் பயிற்சி... என்று பள்ளி விட்டதும் அவசரமாக உப்புமாவை அடைத்துக் கொண்டு சிறுவர்கள் ஓடி ஓடிக் கற்றுக் கொள்கிறார்கள். இந்த 'எக்ஸ்ட்ரா' வகுப்புகள் வரிசையில் இன்று பெருமை மிகு இடம் வகிக்கிறது கர்நாடக சங்கீதப் பயிற்சி வகுப்பு. சென்னையில் சில வகுப்புகளை 'விசிட்' அடித்துப் பார்த்ததில் தரமான இசையை ஆர்வமுடன் பயிலும் மழலைப் பட்டாளத்தின் உற்சாகமும் இசை அறிவும் அசத்தி விட்டன!

அபிராமபுரத்தில் சுகுணா புருஷோத்தமனின் வீட்டு டிராயிங் - கம் - டைனிங்கில் இருபது சிறுவர் சிறுமியர் சுருதி சுத்தமாக பந்துவராளி வர்ணத்தை இரண்டு காலம் (மெதுவாகவும், துரிதமாகவும்) பாடுகிறார்கள்.

''சாரங்காவுக்கு ஆரோகணம் அவரோகணம் தெரியுமா?'' சுகுணா கேட்டால் சின்னக் கைகள் வேகமாக உயர்கின்றன.

ஒரு மாணவி பாடிக் காட்டுகிறாள்.

''இது எதோட ஜன்யம்?''

''கல்யாணி!'' வகுப்பே பதில் சொல்கிறது.

''அப்படியானால் சுத்த மத்யமம் ஏன் வருகிறது?''

''அது அந்நிய ஸ்வரம்...''

பளிச் பளிச்சென்று வரும் பதில்கள் பயிற்சியின் முழுமையை வெளிப்படுத்துகின்றன.

கலையை மட்டுமின்றி அதன் இலக்கணங்களையும் நுணுக்கங்களையும் புரிந்து கொண்டு பாடும் சிறுவர்கள் எட்டிலிருந்து பதின்மூன்று வயதுக்குட்பட்டவர்கள்.

சீனியர் மாணவிகள் சிலரும் இந்த வகுப்பில் அமர்ந்து பாடுகிறார்கள்.

''இது எங்களுக்கும் நல்ல பயிற்சி'' என்கிறார்கள்.

வாரத்தில் மூன்று நாள், நாளொன்றுக்கு ஒரு மணி நேரம் - இந்தக் குறுகிய கால அவகாசத்திலேயே நிறைய கற்றுக் கொண்டு விடும் சிறுவர்களைக் கேட்கிறோம்; ''மற்ற நாட்களில் வீட்டில் பாடிப் பார்ப்பீர்களா...?''



• 'ஆனந்த நடன பிரகாசம்...'

பெரும்பாலானோர் அசட்டுச் சிரிப்புடன் தலையசைத்து 'இல்லை' என்கிறார்கள்.

''பாடச் சுமை அதிகம். இவர்களிடம் ரொம்ப கடுமையாக இருக்க மனம் வருவதில்லை. அது நியாயமும் இல்லை'' என்கிறார் சுகுணா புருஷோத்



• சுகன்யா

• சுகுணா புருஷோத்தமன் வகுப்பில்.

தமன்.

"ஒன்பதாம் வகுப்பு வரையில் ரொம்ப வேகமாகப் பாட்டில் முன்னேறிவிட்டு அப்புறம் படிப்புக்கு முழுக்க முழுக்க திசை மாறி விடுகிறார்கள். கச்சேரி செய்யும் அளவுக்கு திறமையை வளர்த்துக் கொள்பவர்கள் மட்டும் கஷ்டப்பட்டு படிப்போடு பாட்டு பயிற்சியையும் சீரியஸாகத் தொடர்கிறார்கள். பாட்டு கற்றுக் கொள்வது ஓர் அனுபவம் என்றால் அதைக் கேட்டுக் கேட்டு அறிவையும் ரசனையையும் வளர்த்துக் கொள்வது இன்னொரு அனுபவம். நிறைய கச்சேரிகளுக்குப் போய்க் கேட்க வேண்டும் என்று எடுத்துச் சொல்லி வருகிறேன். இதற்குப் பெற்றோர் மனம் வைக்க வேண்டுமில்லையா?" என்கிறார்.



• ருக்மிணி ரமணி

சுகுணா புருஷோத்தமனின் கருத்தையே எதிரொலிக்கிறார் முப்பது வருடங்களாக இசை வகுப்புகள் நடத்தி வரும் அகிலா சிவா.

"இதற்காகவே நான் டிசம்பர் மாதம் வகுப்புகளுக்கு 'லீவ்' விட்டு விடுவேன். குழந்தைகள் எத்தனை கச்சேரிகள் கேட்க முடிகிறதோ போய்க் கேட்கட்டும் என்று... ஆனால், ஹோம் ஒர்க், பாடம் மட்டுமின்றி டீ.வி.யும் இன்று குழந்தைகளின் நேரத்தைக் கணிசமாக எடுத்துக்கொண்டு விடுகிறது. எனினும் டீ.வி.யிலே பாட்டு கிளாஸ் நோக்கிச் சிறுவர்களை அனுப்பி வைக்கும் விநோதமும் இன்று நடக்கிறது" என்கிறார்.

தொண்ணூறுகளில் அதிகரிக்க ஆரம்பித்த மாணவ - மாணவிகளின் எண்ணிக்கை, டீ.வி.யில் சப்த ஸ்வரங்கள், ராகம் சங்கீதம் போன்ற நிகழ்ச்சிகள் வர ஆரம்பித்த பிறகு மேலும் பெருகியிருக்கிறதாம். (சப்த ஸ்வரங்கள் நடத்தும் ஏ.வி. ரமணனும் இதை ஆமோதித்தார்.)

"எங்க குழந்தை டீ.வியில பாடணும், போட்டியில பிரைஸ் வாங்கணும்" என்று 'ஆசை'யுடன் அனுப்பி வைக்கும் பெற்றோர் உண்டு என்கிறார் அகிலா சிவா.

"கற்போரின் திறம், தரம் எப்படி....?" என்று கேட்டால்; "நீங்களே கேட்டுப் பாருங்கள்" என்று வகுப்பைப் பாடச் சொல்கிறார். அந்த தி.நகர் வீட்டின் மொட்டை மாடியை

'கேதாரம்' நிறைக்கிறது.

"ஆனந்த நடன பிரகாசம்..." - சிரத்தையுடன் சின்னக் குரல்கள் பாடுகின்றன. நுணுக்கமான ஒரு ராகத்தை அதன் ஜீவன் மாறாமல் அவர்களால் வழங்க முடிகிறது.

"இந்தக் குழந்தைக்குப் பாட வராது என்று நாம் தீர்மானித்தால்கூட, 'பாதகமில்லை வகுப்பில் அமர்ந்து கேட்கட்டும். அதன் மூலம் தெரிந்து கொள்வது போதும்' என்று அனுப்பி வைக்கும் பெற்றோரும் உண்டு..." என்கிறார் அகிலா சிவா.

"பாட்டு வருமா? வராதா? என்று நான் பார்ப்பதில்லை. ஆர்வத்தை மட்டுமே தகுதிக்கு அளவுகோலாகக் கொள்கிறேன்" என்கிறார் ஆழ்வார்பேட்டையில் வகுப்புகள் நடத்தி வரும் சுகன்யா. வித்வான் டி.கே. ஜெயராமனின் மகளான இவர் குருகுல வாச முறையே இசை கற்க உகந்தது என்று தீர்மானமாகச் சொல்கிறார்!

"ஒரு மணி நேர வகுப்பென்பது காலத்தின் கட்டாயம். அதற்கும் வராமல் வெறுமே காஸெட் மூலமாகக் கற்றுக் கொள்வதெல்லாம் எனக்கு ஏற்புடையதில்லை... ஓரளவுக்குக் கற்றுக் கொண்டு விட்ட 'பாட்டுத் திறம்' படைத்தவர்கள்கூட அலுவலகம் போய்க் கொண்டு பாட்டு கிளாஸ், வீடு என்று எல்லாவற்றையும் சமாளித்து வருகிறார்கள். இசை வகுப்புகளுக்கு வரும் ஆபீஸ் - கோயர்ஸின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது" என்கிறார்.

"எங்கள் மாணவர்களுக்கு இது இன்னொரு ஸ்கூல்" என்பவர் ருக்மிணி ரமணி. 'சிவன் ஆர்ட்ஸ் அகடமி' என்ற கலைப் பள்ளி நடத்தி வரும் பாபநாசம் சிவனின் மகள். இவர் சிலபஸ் வகுத்து, தியரி, பிராக்டிகல் என்று பரீட்சை நடத்தி மதிப்பெண் போட்டு, சான்றிதழே தந்துவிடுகிறார் மாணவர்களுக்கு!

'இங்கேயும் பரீட்சையா?' என்று முகம் சுளிக்காமல் 450 மாணவ - மாணவிகள் இந்த அகடமியில் பயில்கிறார்கள்! மூன்றாண்டுகளுக்கு முன் முப்பது மாணவர்களுடன் ஆரம்பிக்கப்பட்டதாம் இந்த அகடமி!

சென்னையில் மட்டுமின்றி தமிழகம் முழுவதிலும் முக்கிய நகரங்களில் இத்தகைய வகுப்புகள் நடந்து வருகின்றன. இந்தியாவிலும் உலகெங்கிலும் தமிழர் வாழ் இடங்களிலெல்லாமும் அவை நடக்கின்றன. கூட்டமாகக் கற்றாலும் அனுபவம் மிக்க ஆசிரியர்கள் தனிக் குரல்களை அடையாளம் கண்டுகொண்டு திருத்துகிறார்கள். குழுவாக இசைக்கும்போது கூச்சம் தகர்ந்து போய் சேர்ந்திசைக்கும் உற்சாகத்தில் உதடுகளோடு உள்ளங்களும் பாடுகின்றன. அடுத்த நூற்றாண்டின் சில வித்வான்களும் பல ரசிகர்களும் இந்த வகுப்புகளில் தயாராகி வருகிறார்கள்.

— டி.என். சித்ரா

படங்கள்: ஸ்ரீஹரி

---



"தலைவரோட பிறந்த நாள் அன்னிக்கு ஜெயில் கைதிகளுக்கு லட்டு கொடுக்கும்போது என்ன ஒரே தகராறு...?"

"ஏதோ ஞாபகத்துல தலைவருக்கும் ஒரு லட்டை கொடுத்துட்டாங்களாம்!"

— வி. சாரதிடேச்சு

"எந்தப் பத்திரிகையிலும் நான் ஜோக்ஸே படிக்கிறதில்லை."

"ஏன் அப்படி?"

"டாக்டர் என்னைக் கோபப்படக் கூடாதுன்னு சொல்லியிருக்கார்!"

— சீர்காழி வி. ரேவதி



# கற்பகம் மாமி கச்சேரிக்குப் போகிறாள்!




















ESTIVAL


ஆர் யூ நாட் ஒளவை சண்முகி?
பிரபல சங்கீத விமர்சகர்.. அவர்தான்! இன்னிக்கு விமர்சனம் கார சாரமா இருக்கும்.. காண்டீன்ல மிளகாய் பஜ்ஜி சாப்பிட்டிருக்கார்!


CANT
அபத்தமா பாடற வித்வான்களுக்கு மட்டும் உங்க காண்டீன் அல்வாவையும் கொடுங்கோ!..


..வாயைத் திறக்கமாட்டா பாருங்கோ!






இந்த கடம் வித்வான் ஏன் இப்படி ஓடறார்.. புளி வைக்கறதுக்கு இது மாதிரி பானை ஒண்ணு வேணும்னுதானே சொன்னேன்!



"எம்.பி.யா டெல்லிக்குப் போனதுல இருந்து நம்ம தலைவருக்கு ரொம்பவும்தான் பந்தா...!"

"எப்படிச் சொல்றீங்க...?"

"கையெழுத்தைக்கூட இப்போ 'கேபிடல் லெட்டர்ஸ்ல'தான் போடறாரு...!"



"இதுக்கு முன்னாடி பத்துக் கொலை பண்ணியிருக்கேன்னு சொல்றே... அப்புறம் ஏம்ப்பா அரிவாளைத் தூக்கினதும் உன் கை இப்படி நடுங்குது...?"

"சே! இது பய நடுக்கமில்லேங்க... 'கொலை நடுக்கம்'...!"

— கே.ஜி.எஸ். கோவிந்தன்



"நம்ம தலைவர் 'நான் உங்க வீட்டுப் பிள்ளை'ன்னு அடிக்கடி பேசறப்பவே நினைச்சேன், இப்படி ஏதாவது ஏடாகூடமா நடக்கும்னு..."

"ஏன்...என்னாச்சு?"

"சொத்துல பங்கு கேட்கிறாரு..."

— மலர் சூர்யா

**மா** நகரில் ஆங்காங்கு வெள்ளம் வடிந்த பின்னர் நடைபெற்றது திருச்சி மாநகராட்சி மன்ற உறுப்பினர் கூட்டம். அதில் வீசியது ஓர் அரசியல் புயல்! அதுவும் சற்று அநாகரிகமாய்.

நடந்தது இதுதான். அனைவரும் தீண்டாமை ஒழிப்பு உறுதிமொழி எடுத்துக் கொண்ட பின்னர் பேசுவதற்கு எழுந்தார் மேயர் புனிதவள்ளி பழனியாண்டி. அவரைப் பேச விடாமல் சுயேச்சை உறுப்பினர் வெங்கட்ராஜ், தமது பகுதிகளுக்கு மேயர் வந்து வெள்ளச் சேதங்களைப் பார்வையிடவில்லை எனச் சொல்லிக் கூச்சல் போட்டார். துணைக்கு தி.மு.க. உறுப்பினர்களும் இணைந்து கொள்ள மன்றத்தை தாற்காலிகமாக ஒத்தி வைத்திருக்கிறார் மேயர்.

சற்று நேர இடைவெளிக்குப் பின்னர் கூட்டம் ஆரம்பித்தது. திருச்சிக்கு வந்த முதல்வர் வெள்ள நிவாரணப் பணிகளுக்காக ஐம்பது கோடி ரூபாய் நிதி ஒதுக்கித் தந்ததற்குப் பாராட்டி, நன்றி தெரிவித்து வெள்ளை அறிக்கை வாசிக்க எழுந்தார் மேயர். தி.மு.க. பெண் உறுப்பினர் திருமதி விஜயலெட்சுமி கண்ணன் தமது இருப்பிடம் விட்டு எழுந்து வந்து, மேயரின் கையிலிருந்த அறிக்கைத் தாள்களைப் பறித்துக் கிழித்துப் போட்டிருக்கிறார். ஒரு தி.மு.க. உறுப்பினர் மேயர் பேச வைத்திருக்கும் மைக்கைப் பிடுங்கி விட்டெறிந்துள்ளார். இன்னொரு தி.மு.க. உறுப்பினரோ தமது மேஜை மீது இருந்த மைக்கைக் கழற்றித் தரையில் போட்டு நசுக்கி இருக்கிறார்.

செய்வதறியாது திகைத்துப் போன மேயர் மறு தேதி குறிப்பிடாமல் மன்றத்தை ஒத்தி வைத்திருக்கிறார்!

அறிக்கை கிழிப்பு –

# சென்னையில்

மைக் உடைப்பு!

அடுத்து வரும் கூட்டங்களில் என்னவோ என்கிற அச்சம் பொதுமக்கள் மத்தியில் எழுந்துள்ளது.

இதுகுறித்து தகவல்கள் தெரிந்து கொள்ள நாம் மேயரை சந்தித்தோம்.

"குறிப்பா அந்தக் கவுன்சிலர் விஜயலெட்

# எதிர்ப்பு; திருச்சியில் பதிலடி!



• மேயர் புனிதவள்ளி பழனியாண்டி

சுமி சாதுவாத்தாங்க இருப்பாங்க. அன்றைக்கு என்னமோ அப்படி நடந்துக்கிட்டாலும் முதல்வருக்கு நன்றி சொல்ற அறிக்கையை என்னோட கையில இருந்து பறிச்சி கிழிச்சிப் போட்டாங்க. பத்தாதுக்கு உறுப்பினர்கள் ரெண்டு பேரு மைக்கை கழற்றிப் போட்டுட்டாங்க. என்ன இப்பிடி நடந்துக்கிறாங்கன்னு திகைச்சுப் போய்ட்டேன். அரசியலுக்கு வர்ற பெண்கள் இந்தளவுக்குப் போறது வேதனையான விஷயம். பெண்களிடமிருந்து உயர்ந்த நிலையைத்தான் இந்தச் சமுதாயம் எதிர்பார்க்குது. இதுபோன்ற நிகழ்வுகள் அருவருப்பைத்தான் தருது'' என்றார் திருச்சி மாநகர மேயர் திருமதி புனித வள்ளி பழனியாண்டி (த.மா.கா.).

சம்பந்தப்பட்டவர் என்ன சொல்கிறார் என அறிந்திட தி.மு.க உறுப்பினர் விஜயலெட்சுமி கண்ணனை சந்தித்தோம். அவரோ, ''மேயரின் கையிலிருந்து அறிக்கையை நான் பறிக்கலே. 'வெள்ளை அறிக்கையைக் கொடுங்கம்மா' என்று கேட்டேன். மேயரே என்னிடம் கொடுத்தாங்க. அதை வாங்கி நான்தான் கிழித்துப் போட்டேன். மேயர் மீதுள்ள பொது மக்கள் அதிருப்தியைக் காட்டவே நான் அப்படி நடந்து கொண்டேன்!'' என்றார்.



• கவுன்சிலர் விஜயலெட்சுமி கண்ணன்

மார்க்சிஸ்ட் கட்சியைச் சேர்ந்தவரும், நாற்பதாவது வார்டு உறுப்பினருமான பாலசுப்ரமணியன், ''அ.தி.மு.க. உள்பட எல்லா எதிர்க்கட்சி உறுப்பினர்களும் அமைதியாத் தான் இருந்தாங்க. அந்த தி.மு.க. பெண் உறுப்பினர்தான் மேயர் கையிலேர்ந்து அறிக்கையைப் பறிச்சி கிழிச்சுப் போட்டாங்க. மத்த தி.மு.க. உறுப்பினர்களும் கூச்சல் போட ஆரம்பிச்சிட்டாங்க. திட்டமிட்ட செயலுங்க இது. சென்னை மாநகர மன்றக் கூட்டத்துல த.மா.கா. உறுப்பினர்கள் காட்டிய எதிர்ப்பு உணர்வுக்கு திருச்சியில் தி.மு.க. கொடுத்த பதிலடி இது!''

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

# சரிகமப ஒற்றுமை

அத்தனை பேரும் வந்து சேர்ந்தார்களா என்று 'அடென்டன்ஸ்' எடுப்பதற்குள்ளாகவே களைத்து விடும்! ஐந்நூறு பள்ளிச் சிறுவர்கள், எண்பது இளம் இசைக் கலைஞர்கள், சில பல பெரிய, மூத்த தலைமுறை வித்வான்கள்... இவ்வளவு பேரையும் மியூசிக் அகாடமி அரங்கில் வைத்து நள்ளிரவு நிகழ்ச்சி நடத்துவது என்பது நிர்வாகத் திறனுக்குப் பிரும்மாண்டமான சவால்.

ஆனால், சளைக்காத உழைப்பும் உற்சாகமும் இருந்தால் என்னதான் முடியாது? என்று கண் துஞ்சாமல் உழைத்துக் கொண்டிருக்கிறது ஓர் இளைஞர் படை.

இளம் கர்நாடக சங்கீதக் கலைஞர்களை ஒருங்கிணைக்க 14 வருடங்களுக்கு முன் தொடங்கப்பட்ட அமைப்பு ஒய்.ஏ.சி.எம். டிசம்பர் சீசனில் எந்த வேலையையும் இழுத்துப் போட்டுக் கொள்ளாமல் அவரவர் கச்சேரிகளுக்கு உழைப்பது என்ற தங்கள் முடிவை இவ்வாண்டு 'மிலெனிய' விசேஷம் கருதி மாற்றிக் கொண்டது. 'ஏதேனும் மிகப் பெரிதாகச் செய்தாக வேண்டும். அதையும் மியூசிக் அகாடமியில் செய்தாக வேண்டும்' என்று தீர்மானித்து அகாடமி நிர்வாகத்துக்குக் கடிதம் அனுப்பியது. 'டிசம்பர் 31 இரவு உங்கள் அரங்க மேடையை எங்களிடம் ஒப்படைக்க முடியுமா?'

ஜூலை மாதம் நடந்த நிர்வாகக் கூட்டத்தில் மியூசிக் அகாடமியின் தலை நரைத்த நிர்வாகம், 'சின்னப் பயல்கள் ஏதோ ஆர்வக் கோளாறில் கேட்டு விட்டார்கள்' என்று மன்னித்து

• மாலா சந்திரசேகர்

• டி.எம். கிருஷ்ணா

• சுதா ரகுநாதன்



• சௌம்யா









• பங்கேற்கும் பெரியோர்களுள் சிலர்: செம்மங்குடி

• லால்குடி ஜெயராமன்

• கே.வி. நாராயணசாமி

• பட்டம்மாள்

ஒதுக்கி விடாமல் கடிதத்தை சீரியஸாகப் பரிசீலித்து புரட்சிகரமான 'ஓ.கே.' சொன்னது!

இதிலென்ன புரட்சி...? பொதுவாக இசை விழாவின் போது வெளிநபர்களுக்கு அரங்க மேடை தரப்படுவதில்லை. அகாடமி இசை விழாவின் ஓர் அங்கம் என்று இந்த On a Musical Track நிகழ்ச்சியை ஏற்காவிட்டாலும் அகாடமியின் பரிபூரண ஆசி, ஆதரவுடன் நிகழ்ச்சி நடக்கவிருக்கிறது. பல நூதனமான நிகழ்ச்சிகளை வெற்றிகரமாக நிகழ்த்திக் காட்டிய பெருமை ஒய்ரசிளம்முக்கு உண்டு என்பதும் காரணமாயிருக்கலாம்.

"ஏன் மியூசிக் அகாடமியைத் தேர்வு செய்தீர்கள்?" என்று கேட்டோம். ஒய்ரசிளம் சார்பில் நம்மிடம் பேசிய சஞ்சய் சுப்ரமண்யன், ஆனந்த் சிவா ஆகியோரிடம்.

"பழைமையும் பாரம்பர்யமும்மிக்க அமைப்பு. அங்கு பாடுவதும் அவர்கள் தரும் விருதைப் பெறுவதும் இன்றளவும் மிகப் பெரிய கௌரவமாகக் கருதப்படுகிறதே!"

"உங்கள் நிகழ்ச்சி பற்றிய விவரங்களைப் பார்க்கும்போது இன்றைய முன்னணி வித்வான்கள் பலருக்கு வாய்ப்புத் தரப்படவில்லை என்பது தெரிகிறது. அது பெரிய சர்ச்சையாகி விடாதா? உதாரணமாக, பாலமுரளி, டி.வி. சங்கரநாராயணன், குன்னக்குடி, பெண்களில் வேதவல்லி, மணி கிருஷ்ணசாமி இன்னும் நிறைய பெயர்கள் இல்லையே!"

"இரண்டரை மணி நேர நிகழ்ச்சியில் எல்லாருக்குமே பாட வாய்ப்புத் தந்து விட முடியாது. இந்த நிகழ்ச்சியில் ஏதேனும் ஒருவகையில் பங்கேற்கும்படி எல்லா கலைஞர்களையுமே அணுகியிருக்கிறோம். ஒருசிலர் நேரடி பங்கேற்பையே மறுத்தனர். சிலருக்கு அன்று வேறு நிகழ்ச்சியிருந்தது.

• பாம்பே ஜெய்ஸ்ரீ





• ஹரிப்ரியா-சண்முகப்ரியா

# ஓங்குதப்பா!

பலர் வாழ்த்துச் செய்தி அளித்தும் நிகழ்ச்சி பற்றிய முன்னோட்டக் கருத்துச் சொல்லியும் உதவியிருக்கிறார்கள். அதையெல்லாம் வீடியோ பதிவு எடுத்துள்ளோம். அகாடமியின் இசை விழாவில் ஒவ்வொரு கச்சேரிக்கு முன்பும் அவை திரையிடப்படும்."

"இந்த நிகழ்ச்சியில் கர்நாடக இசைக்கு முக்கியமாக பங்களித்தவர்கள் பற்றிய செய்தித் தொகுப்பு வீடியோ - ஆடியோ வடிவில் இடம்பெறும் என்று சொல்லியிருக்கிறீர்கள். இசை வரலாற்றில் குறிப்பிடும்படி ஆயிரம் பேர் இருப்பார்களே! யார் யாரைப் பற்றியெல்லாம் நிகழ்ச்சியில் எடுத்துச் சொல்வது என்பதை எந்த அடிப்படையில் தீர்மானித்தீர்கள்? யார் முடிவெடுத்தார்கள்?"

"திணறித்தான் போனோம்... எத்தனை மீட்டிங், எவ்வளவு விவாதம்... தினமும் சண்டைதான்! ஆனால் எல்லா முடிவுகளுமே ஒரு குழுவாக இணைந்து எடுக்கப்பட்டவை. தனி ஒருவரிடம் எந்த முடிவும் விடப்படவில்லை என்பதால் தப்போ, சரியோ அதற்கு எல்லோருமே பொறுப்பேற்றாக வேண்டும். எதையெல்லாம் நிகழ்ச்சியில் எடுத்துச் சொல்வது என்று பார்த்தபோது, இன்றைய கச்சேரி அமைப்புக்கு முக்கியக் காரணம் அரியக்குடி ராமானுஜ அய்யங்கார். அவரைப் பற்றிச் சொல்லியாக வேண்டும்; பெண்களுள் சிறப்பிடம் எம்.எஸ்ஸுக்குத்தான் என்பதில் சந்தேகமேயிருக்கவில்லை; ஜனரஞ்சகம் புகுத்தியவர் என்ற வகையில் ஜி.என்.பி., ஜீனியஸ் என்கிற வகையில் மாலி, பாலக்காடு மணி. நாதஸ்வரம், வீணை ஆகிய வாத்தியங்கள் வாய்ப்பாட்டுப் பாரம்பரியத்துக்கு வள்ளன்மையுடன் வழங்கியிருக்கின்றன. அவற்றில் தலைசிறந்த வித்வான்களான ராஜரத்தினம் பிள்ளை, எஸ். பாலசந்தர். நிறுவனங்கள் என்று எடுத்துக் கொண்டால் அகில இந்திய வானொலி, மியூசிக் அகாடமி, அண்ணாமலை பல்கலைக்கழகம், பாடத்திட்டத்தை முறைப்படுத்தியவர் என்கிற வகையில் பேராசிரியர் சாம்பமூர்த்தி, மீடியாவில் ஹிந்து, சுதேசமித்திரன், கல்கி... இப்படி யோசித்துத்தான் ஒரு பிரும்மாண்ட பட்டியலை கையடக்கமான எண்ணிக்கைக்குக் கொண்டு வந்தோம். இறுதிப் பட்டியலில் இடம்பெறுவோரின் திறமை குறித்து ஒரு சதவிகிதம் கூட விமர்சனமோ சந்தேகமோ இருக்கக் கூடாது என்பதுதான் எங்கள் தேர்வுக்கு அடிப்படை."

"இந்த மாதிரி ஒரு கதம்ப நிகழ்ச்சியில் பங்கேற்க மூத்த வித்வான்கள் எப்படி ஒப்புக் கொண்டார்கள்...? ரேட்டெல்லாம் பேசவில்லையா?"

"பங்கேற்கும் எல்லோருமே முழு மனத்துடன் 'சரி' சொன்னவர்கள்தான். யாருமே ரேட் பேசவில்லை. மூன்று பேர் மட்டும்தான் 'என்ன கிடைக்கும்' என்று கேட்டார்கள். அதுவும் ஒப்புக் கொண்டு சில தினங்களுக்குப் பிறகுதான். நிகழ்ச்சிக்கு ஸ்பான்ஸர்கள் ஆதரவு பலமாக இருக்கிறது என்பதால் சன்மானம் குறித்துக் கவலையும் இல்லை."

"சத்யம் ஆன் லைன் ஐந்து லட்சம் தருகிறது. இதில் நிகழ்ச்சி செலவுகள் அடங்கிவிடுமா? டிக்கெட்டுகளுக்கு நாநூறு இருநூறு என்று விலை வைத்திருக்கிறீர்களே?"

"ஒய் ஏ சி எம் முக்கு இந்த நிகழ்ச்சி மூலம் லாபம் வரும் என்று எதிர்பார்த்து நாங்கள் செயல்படவில்லை. இதுவரை எங்கள் நிகழ்ச்சி எதற்குமே டிக்கெட் போட்டது கிடையாது. ஆனால் இது பிரும்மாண்டம்! பல உதவிக் கரங்கள் எங்களை நோக்கி நீள்வதைப் பார்த்து நெகிழ்ந்திருக்கிறோம்.

"ஹ்யூண்டாய் நிறுவனம் அன்றைய தினம் எங்களுக்கு பத்து சான்ட்ரோ கார்களை டிரைவர், பெட்ரோல் சகிதம் தரவிருக்கிறது; நிகழ்ச்சி வழங்கவிருக்கும் தொகுப்பாளர்களுக்கு நல்லி உடைகள் தருகிறது; சேகரித்த தகவல்களையெல்லாம் தொகுத்து வடிவமைக்க கம்ப்யூட்டர்கள் கொடுத்திருக்கிறது இன்டெல் நிறுவனம்... இவ்வளவும் போதாது



• ஒத்திகைக்...



என்பதால்தான் டிக்கெட் விற்பனை. இது ஒரு பக்கமென்றால் ஆய்வுக்கும் தகவல் சேகரிப்புக்கும் எங்கு சென்றாலும் மகிழ்ச்சியுடன் உதவி செய்கிறார்கள். அண்ணாமலை பல்கலைக் கழகத்தின் இசைப் பிரிவில் ராஜமரியாதை; ஹிந்துவில் அவர்கள் குடும்ப போட்டோ ஆல்பத்திலிருந்து கூட படங்களைக் (அரியக்குடி கச்சேரி) கொடுத்திருக்கிறார்கள்; தெரிந்தவர் தெரியாதவர் என்று பலர் உழைப்பை வழங்கி உதவ முன்வருகிறார்கள். அப்புறம் இந்த நிகழ்ச்சியைத் தொகுப்பதில் நாங்கள் சேர்ந்து உழைக்கும் அனுபவம்- தினமும் இரவு பன்னிரண்டு ஒரு மணி வரை ஆகிறது. ஒன்றாகச் செலவிடும் நேரங்கள்- அதெல்லாம் தனிக்கதை."

"நிகழ்ச்சியை சுதா ரகுநாதன் தொகுத்து வழங்கப் போவதாகச் சொல்லியிருக்கிறீர்கள்... இணைப் புரையை எழுதியிருப்பது யார்? ஆங்கிலமா? தமிழா?"

"இணைப்புரை ஒருவருடைய தயாரிப்பு இல்லை. அதுவும் கூட்டு முயற்சி. ஆங்கிலம் கலந்த தமிழ் அல்லது தமிழ் கலந்த ஆங்கிலம் எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். கல்கியில் வரும் சுமி தமிழ் மாதிரி!"

"இந்த நிகழ்ச்சித் தயாரிப்பில் உங்களுக்கு ஏற்பட்ட மிகச் சிறந்த அனுபவம் என்ன...?"

"நிறைய! நிறைய அனுபவங்கள்... முக்கியமாக பழைய விஷயங்களைத் தோண்டிப் பார்க்கும் போது பிரமிப்பு ஏற்படுகிறது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் இசைக்கு இருந்த மீடியா ஆதரவு இப்போது இல்லை என்று தோன்றுகிறது. வாய்ப்புகள் அதிகமாகியுள்ளன. ஆனால் மீடியாவின் ஆதரவு குறைந்திருக்கிறது. வளர்ச்சி என்று பார்த்தால், சர்வதேச தரத்தைத் தொட்டு உலகளாவிய கவனத்தைப் பெற இன்னும் நிறைய செய்ய வேண்டியிருக்கிறது."



.... சில! .... காட்சிகள் ...



• சஞ்சய் சுப்ரமண்யன், ஆனந்த் சிவா



"நிகழ்ச்சிக்கென்று செய்த ஆராய்ச்சியில் பெற்ற தகவல்கள், படங்கள், இசைத் தொகுப்புகளையெல்லாம் என்ன செய்யப் போகிறீர்கள்?"

"எல்லாவற்றையும் டிஜிடைஸ் செய்து சேமித்துள்ளோம். பாதுகாக்கக்கூடிய வடிவில் பத்திரமாக இருக்கும்...."

"வீடியோ தொகுப்புகள், ஒலி அமைப்பு இவற்றுக்கு யார் பொறுப்பு?"

"தனியார் வீடியோ நிறுவனங்கள் சில இவற்றைச் செய்கின்றன. எடிடிங் செய்து இறுதி வடிவை நாங்கள்தான் கொண்டு வரப் போகிறோம். ஒலி அமைப்புதான் பெரிய பிரச்னையாகி விட்டது. 31.12.99 என்பதால் சென்னையில் மிக்ஸர் கிடைப்பதே பெரும்பாடாக இருக்கிறது. பெங்களூரிலிருந்து வரவழைக்க வேண்டியதாகி விட்டது!"

"இந்த நிகழ்ச்சிக்கு மீடியாவில் பலத்த விளம்பரம் கிடைத்திருக்கிறது. அத்தனை எதிர்பார்ப்பையும் அது பூர்த்தி செய்யுமா?"

"உங்களைத் தவிர வேறு யாரும் இப்படி



## வந்தாச்சு விருது

**ம**துரை கிருஷ்ணன் சங்கீத கலா சிகாமணியாவது இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடியில் (இவ்வளவு பெரிய ஆங்கிலப் பெயரைத் தமிழ்க் குடிமகன் எப்படி இன்னும் கவனிக்காமல் இருக்கிறார்?) மேடைக் கச்சேரியைப் புரட்சிகரமாக மாற்றி இன்றைய அமைப்புக்குக் கொண்டு வந்த அரியக் குடியிடம் 18 வருட குருகுலவாசம் செய்தவர் கிருஷ்ணன். நாட்டிய இசைக்கு மதுரை கிருஷ்ணனின் பங்களிப்பு கணிசமானது.

— டி. என். சித்ரா

யொரு கேள்வி கேட்கவில்லை! வெற்றிகரமாக அமைந்தே ஆக வேண்டும் என்ற வெறியுடன் ஆரம்பிக்கப்பட்ட முயற்சி இது. இந்த உத்வேகம் இதைப் போல் இன்னும் இரண்டு நிகழ்ச்சிகள் செய்கிற அளவுக்கு நீடிக்கும் என்று நாங்கள் நம்புகிறோம். அதற்குள் எங்கள் உத்வேகத்தைப் புதுப்பித்துக் கொள்வோம்."

"ஒய்.ஏ.சி.எம். உறுப்பினர்கள் என்று ஒருசில பிரபலங்களின் பெயர்களே இந்நிகழ்ச்சியைப் பொறுத்தவரையில் அடிபட்டு வருகின்றன. மற்ற உறுப்பினர்கள், அடுத்து தலைமைக்கு வரவிருப்பவர்களின் பங்களிப்பு எதுவும் கிடையாதா...?"

"கொள்ளை கொள்ளையாக இருக்கிறது. ராம்பிரசாத், அஷ்வின், முராரி இன்னும் நிறைய பேர் ஓடி ஆடிக் கொண்டிருக்கிறார்கள். லலிதா என்ற உறுப்பினர் தாமே முன்வந்து சில நிறுவனங்கள் ஏறி இறங்கி ஸ்பான்ஸர்ஷிப் ஏற்பாடு செய்திருக்கிறார். நிகழ்ச்சியில் பங்கேற்கும் பள்ளி மாணவர்களுக்குப் பயிற்சி அளிக்க ஒரு குழு ஸ்கூல் ஸ்கூலாகப் போய் வருகிறது. எல்லோருமே உற்சாகமாக உழைக்கிறார்கள்."

"ஐந்நூறு குழந்தைகளை அரங்கத்தில் அமரச் செய்தால் மற்றவர்களெல்லாம் எங்கே உட்காருவதாம்...?"

"குழந்தைகளின் பங்களிப்பு பத்து நிமிடங்களுக்குள்தான் இருக்கும். அதனால் அந்தச் சமயத்தில் மட்டும் அவர்களை உள்ளே வரச் செய்வோம். மேடையில் சிலரும் அரங்கின் பாதைகளில் ஆங்காங்கே பலரும் நின்று கொண்டு பாடுவார்கள்..."

"என்ன பாடுவார்கள்? தேசிய கீதமா? சர்வதேச கீதமா...?"

"ஐயோ! ப்ளீஸ்! அதை இப்போது சொல்ல வேண்டாமே!"

**ப**ள்ளி வட்டாரங்களில் விசாரித்ததில், மாணவ இசைக் குழுக்கள் எம்.எஸ்ஸின் ஆசியுடன் மாய்ந்து மாய்ந்து பயிற்சி செய்து வருவதாகத் தெரிகிறது.

அவர்கள் 'பஜி'க்கப் போவது எந்தப் பாடல் என்று இன்னுமா புரியவில்லை!

**— ஸ்ருதி கீர்த்தி**

அட்டை, இதர படங்கள் :

**பிரவீண்குமார், ஸ்ரீஹரி**






1999 டிசம்பர் 19
பிரமாதி மார்கழி 4
மலர் : 58
இதழ் : 21

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## ராஜினாமா நாடகம்!

பப்ரி மஸ்ஜித் தகர்க்கப்பட்ட டிசம்பர் ஆறாம் தேதி இந்திய சரித்திரத்தில் ஒரு கரும்புள்ளிதான். ஆனால் நமது தலைவர்கள் அந்தச் சம்பவத்தை அரசியலாக்கி ஆதாயம் தேட முயற்சி செய்வது என்பது அதைக் காட்டிலும் பேரிழிவு!

அத்வானியும் முரளி மனோகர் ஜோஷியும் உமாபாரதியும் அமைச்சர்களாக நியமிக்கப்படும் போது பேசாமல் இருந்துவிட்டு, சரியாக டிசம்பர் ஆறு அன்று அந்த நியமனங்களைச் சாடினர் எதிர்க்கட்சியினர். பப்ரி மஸ்ஜித் தகர்ப்பு வழக்கில் இம்மூவர் பேரிலும் குற்றப் பத்திரிகை தாக்கலாகியிருப்பதால் அவர்கள் உடனடியாக ராஜினாமா செய்ய வேண்டும் என்று வலியுறுத்தினர். வழக்கு மிகவும் தாமதமாக நடப்பதாகவும் வேண்டுமென்றே இழுத்தடிக்கப்படுவதாகவும் குற்றம்சாட்டினர். அதிலும், அத்வானி உள்துறை அமைச்சர் என்பதால் வழக்கின் போக்கை அவர் தமது செல்வாக்கினால் சாதகமாக திசைதிருப்பிக் கொள்ளக்கூடும் என்பது முக்கிய புகாராகச் சொல்லப்பட்டது.

இந்த விஷயம் அத்வானி பதவியேற்கும்போதே எதிர்க்கட்சியினருக்குத் தோன்றியிருக்காதா என்ன! எனினும் டிசம்பர் ஆறு வரை காத்திருந்து அவர்கள் எதிர்ப்பு தெரிவித்திருப்பதைப் பார்க்கையில், மக்களின் உணர்வுக் கொந்தளிப்பைப் பயன்படுத்தி அரசியல் லாபம் காண்பதற்காக அவர்கள் செயல்படுவது தெளிவாகத் தெரிகிறது.




அத்வானி அண்ட் கோவும் இலேசுபட்டவர்களல்லர். டிசம்பர் 22 அன்று, கூடுதல் செஷன்ஸ் நீதிபதி, இந்த மூவர் பேரிலான குற்றப்பத்திரிகைகளின் மீது முடிவெடுக்க வேண்டும் என்கிற நிலையில், ராஜினாமா கடிதம் வழங்கி, நாடகம் நடத்தத் தீர்மானித்திருக்கிறார்கள் அத்வானியும் ஜோஷியும். பிரதமர் அலுவலக ஆசியுடன் இத் திட்டம் தீட்டப்பட்டதாக இப்போது செய்திகள் வெளியாகியுள்ளன!

ஆளுங்கட்சியின் திட்டம் தெரியாமல் நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சியினர் தங்கள் ரகளையை நடத்தியிருக்கின்றனர். அச்சமயம் எதிர்க்கட்சியினருக்குப் பதில் சொன்ன பிரதமரோ, தம்மிடம் தரப்பட்ட ராஜினாமா கடிதங்கள் பற்றி மூச்சு விடவில்லை! எதிர்க் கட்சியினரின் வாயை அடைக்க நொண்டிச் சமாதானங்களை மட்டுமே கூறியுள்ளார் பிரதமர்.

"இந்த வழக்கு கிரிமினல் வழக்காக இருக்கலாம். ஆனால், லஞ்ச - ஊழல் தொடர்பான வழக்கு அல்ல. எனவே இவர்கள் ராஜினாமா செய்ய அவசியம் இல்லை..." என்று அவர் பேசியது நாட்டுக்கே தலைகுனிவு.

பப்ரி மஸ்ஜித் தகர்ப்பு தொடர்பான வழக்கு, இந்தியாவின் பாரம்பர்ய சகிப்புத்தன்மைக்கு ஏற்பட்டுள்ள சோதனை. அதைப் பிரதமர் இவ்வாறு குறைத்து மதிப்பிட முயற்சி செய்வது அரசியல்ரீதியில் பார்த்தால் வடிகட்டிய அசட்டுத்தனம்; தார்மிகரீதியிலோ அதிர்ச்சியூட்டும் அலட்சியம்.

அமைச்சர்கள் தயாராய் ராஜினாமா கடிதங்கள் வைத்திருந்தனர் என்பது எதிர்க்கட்சி யினரிடமிருந்து மறைக்கப்பட்டிருக்கிறது. நாடாளுமன்றத்துக்கு வெளியே, பத்திரிகையாளர் களிடம் பிரதமர் ராஜினாமா கடிதங்கள் குறித்துத் தெரிவித்தது உரிமைப் பிரச்னையாகி மேலும் பலத்த எதிர்ப்பை ஏற்படுத்தியிருக்கிறது. லேட்டஸ்டாக, 'ராஜினாமா கடிதமே கிடையாது. வாய் வார்த்தையாகக் கூறப்பட்டது, அவ்வளவுதான்' என்றும் ஒரு நழுவல் வாக்குமூலத்தைப் பிரதமர் வெளியிட்டுள்ளார்.

குற்றப் பத்திரிகை பதிவாகியுள்ள நபர்கள் அமைச்சரவையில் இடம்பெறலாமா? என்ற




தார்மிகக் கேள்விக்குப் பிரதமரிடம் பதில் இல்லை.

'முந்தைய ஆட்சியில் சேடப்பட்டி முத்தையாவும் பூடாசிங்கும் ராஜினாமா செய்துள்ளனரே. அவர்கள் பேரில் கிரிமினல் குற்றம் பாதிவானதனால்தானே ராஜினாமா செய்தனர். அதே அடிப்படையில் அத்வானி, ஜோஷி, உமாபாரதி ஆகியோர் பதவி விலகட்டுமே!' என்று சொல்லும் எதிர்க்கட்சியினருக்குப் புதில் சொல்வதையே தவிர்த்திருக்கிறார் பிரதமர்.

வாக்குவாதம், வெளிநடப்பு என்று வழக்கமான அமளி பாராளுமன்றத்தின் இரு அவைகளிலும் நடந்தேறியிருக்கின்றன.

இத்தனைக்குப் பிறகும், சம்பந்தப்பட்ட அமைச்சர்கள் ராஜினாமா செய்வதை பிரதமர் ஏற்கவில்லை.

போஃபர்ஸ் குற்றப் பத்திரிகையில் ராஜீவ் காந்தி பெயரை இடம்பெறச் செய்வதில் பி.ஜே.பி. காட்டும் தார்மிக உணர்வு, இந்த பப்ரி மஸ்ஜித் வழக்கில் மட்டும் எங்கே ஓடிப் போய் ஒளிந்து கொள்கிறது என்பது புரியாத புதிர் அல்ல!

அத்வானியின் ஆளுமையும் தனிச் செல்வாக்கும் அவரைத் தாற்காலிகமாகக் கூட பதவி நீக்க விடாமல் பிரதமரை அச்சுறுத்துகிறது.

ஆனால் அத்வானியின் ராஜினாமாவை ஏற்க மறுப்பது பிரதமர் செய்யும் மிகப் பெரிய தவறு.

குற்றப் பத்திரிகையில் இடம்பெறும் அமைச்சர்களின் ராஜினாமாக்களைப் பெற்றுக் கொள்வது, வழக்குகளை துரிதப்படுத்தி நடத்தி முடிக்க நேரடியாக மட்டுமின்றி மறைமுகமாகவும் உதவும். முக்கிய அமைச்சர்களின் பதவிகள் பாதிக்கப்பட்டுள்ளன என்ற காரணத்தால் அவை விரைவில் ஆராயப்பட்டு முடிவு தெரிவிக்கப்பட கோரலாம்.

நேர்மையின்றி, யதார்த்த நோக்குமின்றி பிரதமர் இவ்விஷயத்தில் பிடிவாதம் பிடிப்பது, அவருக்கும் அவரது கௌரவத்துக்கும் பெருமை சேர்ப்பதாக இல்லை. மாறாக, 'என் அப்பன் குதிருக்குள் இல்லவே இல்லை' என்று அவர் முழங்குவதாகவே தோன்றுகிறது. ●



• வேலுச்சாமியின் மனைவி ராஜம்மா



• லெட்சுமணப் பெருமாள்

# ஒரு மந்திரவாதியின் 'பய-டேட்டா!'

**ரா**த்திரி ஒன்பது மணி ஆயிட்டா எல்லா டீவிக்களி லும் "மர்ம நேரம்... திகில் நேரம்'' என்று போட்டுக் கொண்டிருப்பதன் விளை வாகவோ என்னவோ, இப் போது நிஜத்திலும் திகில் நேரங்கள்.

திண்டுக்கல் மாவட்டம் அய்யலூருக்கு அடுத்துள் ளது களத்தூர். வேலுச்சாமி என்ற தனி மனிதனால் இன்று களத்தூர் தமிழ் நாடு முழுக்கத் தெரிந்த ஊராகி விட்டது.

''கட்ன் கொடுத்த அபராத பணத்தை வாங்கி வருகிறேன் என்று போன என் அப்பா கரிக் கால கவுண்டரைக் காணவில்லை!'' என்று வேலுச்சாமியின் மச்சினன் லெட்சுமணப் பெருமாள் போலீஸில் புகார் கொடுத்ததுதான் விதை. இப்போது விஸ்வரூப விருட்சமாக வளர்ந்து விட்டிருக்கிறது.

• வேல், சூலாயுதத் தோட்டம்



ஒரு சின்ன பிளாஷ் பேக். "ஏம்பா வேலுச்சாமி தீபாவளியும் அதுவுமா கோடித் துணி போட்டுக்காம திரியுறே... என்ன விஷயம்?''

"ஏன்... கோடித்துணி போட்டாத்தான் தீபாவளியா? சரி... நீ இப்பக் கோடித்துணி போட்டுருக்கறதால கோடி ரூபா வந்து கொட்டப் போகுதா?''

– இதுதான் வேலுச்சாமி! யாரிடமும் பேசுவதே இல்லை. பேசினால் விதண்டாவாதம்தான்.

முதலில் அருள்வாக்கு சொல்ல ஆரம்பித்த வேலுச்சாமி, சொன்ன ஒன்றிரண்டு அருள்வாக்கு பலித்துவிட... கூட் டம் கூடி குறி கேட்க, ஒரு மந்திரவாதி லெவலுக்கு



• வேலுச்சாமி

உயர்ந்து விட்டான். தன்னை இனி தனித்துக் காட்டிக் கொள்ள(ல்ல!) வேண்டும் என்ற எண்ணத்தில் ஊரோடு ஒட்டாமல் இருக்கும் சோளக் காட்டில் பாழடைந்த கிணறு, பத்துப் பதினைந்து தென்னை மரம் என்று 'மந்திர' சூழலுக்கு மாற்றினான் இருப்பிடத்தை! அந்தக் குடிசைக்குள் வேலுச்சாமி, அவனுடைய தாய், வேலுச்சாமியின் இரண்டாவது மனைவி ராஜம்மாள் மட்டும்தான் இருந்தார்கள். வேலுச்சாமி குறி, ஜோதிடம் என்று சொல்வதால் ஊர்க்காரர்கள் 'பில்லி, சூன்யம்' வைத்து விடுவானோ என்று பயந்தே வாழ்ந்திருக்கிறார்கள்.

வேலுச்சாமிக்கு 'பண ஆசை' வந்ததற்கு தனி 'பிளாஷ்பேக்' இருக்கிறது. வேலுச்சாமி சம்பந்தம் பண்ணிய புதுமணியக்காரன் பட்டியில் சூன்யம் வைக்க வந்ததாக வேலுச் சாமியையும் அவனுடைய மாமனாரையும் பஞ்சாயத்தில் நிற்க வைத்து தலைக்கு 25 ஆயிரம் என்று 50 ஆயிரம் ரூபாய் கட்டச் சொல்ல, பணம் இல்லாத வேலுச்சாமிக்கும் சேர்த்து மாமனாரே தண்டத் தொகை கட்டி இருக்கிறார். 'பணம் பணம்' என்று அலைய ஆரம்பித்தது அன்றிலிருந்துதான்.



• போலீஸ் விசாரணையின்போது...

வேலுச்சாமிக்காக 25 ஆயிரம் அபராதம் கட்டிய மாமனார் திடீரென்று அவனிடம் பணத்தை திருப்பி கொடுக்கச் சொல்லி கட்டாயப் 'படுத்த' ஆரம்பித்தார். பண விஷயமாக வந்துபோனபோது வேலுச் சாமியின் தாயார் லட்சுமி அம்மாளோடு 'அபூர்வ ராகங்கள்' ஆகிவிட, இது தெரிய வேயில்லை வேலுச்சாமிக்கு. ஒரு வாரத்திற்கு முன் மாமனார் கரிக்கால கவுண்டரையும் தனது தாயாரையும் கண்டதும் 'கண்ட துண்ட'மாக்கித் தனது குடிசை வீட்டுக்கு முன்னால் புதைத்து விட்டான்.

எப்படி மாமனாரையும் தாயாரை யும் கொலை செய்திருப்பான் வேலுச் சாமி? என்பதற்கு ஊர் மக்கள் பலவாறு சொல்கிறார்கள். அரளி விதையை அரைத்து அதை எண்ணெய் கலந்து இந்த 'மாந்திரிக மருந்து' உடம்புக்கு நல்லது என்று இரண்டு பேருக்கும்

• சடலங்களைத் தேடும் பணியில் மக்கள்...



• வேலுச்சாமியின் வீடு!



கொடுத்து, மாமனார் உடம்பை மறைத்து தாயாரின் சாவை 'இயற்கை மரண' நாடகம் நடத்தி முடித்து விட்டான் வேலுச்சாமி என்கிறார்கள்.

சடலங்களைப் புதைத்த இடத்தில் வேல் ஊன்றிச் சாமி கும்பிடுவானாம் வேலுச்சாமி. கிட்டத்தட்ட 'சிவப்பு ரோஜாக்கள்' கமல் மாதிரி... அங்கே ரோஜாத் தோட்டம்... இங்கே 'வேல்' தோட்டம்... இவன் பெயரும் 'வேலு'ச்சாமி. வேலுச்சாமியின் தந்தை பொன்ராம் கூட மர்மமான முறையில் இறந்து, இதே 'வேல் தோட்டத்தில்'தான் புதைக்கப்பட்டாராம்.

புதையலுக்காகக் கொடுக்கப்பட்ட நரபலி என்று சிலரும், அவனை எதிர்ப்பவர்களைக் கொல்கிறான் என்று சிலரும்




கட்சி கட்டி பட்டிமன்றம் போடுகிறார்கள். மர்மமான இந்த வேலுச்சாமி எப்போதும் களத்தூருக்குக் கொஞ்சம் தள்ளி உள்ள 'மிருக கருப்பசாமி கோயிலில்'தான் தனியாக உட்கார்ந்திருப்பானாம். அதே போல வீட்டுக்குப் பக்கத்திலுள்ள பாழடைந்த கிணற்றுக்கு அருகிலேயே வெகுநேரம் நின்று கொண்டிருக்கும் வழக்கமும் வேலுச்சாமிக்கு உண்டாம்.

கொலை நடந்த அன்று வேலுச்சாமியின் அக்கா பெண்ணான பதினொரு வயது பூங்கோதையை வேலைக்காகக் கூட்டி வந்திருக்கிறான். கொலை செய்த பிறகு பெங்களூரில் யாரிடமோ டெலிபோனில் பேசியிருக்கிறான் வேலுச்சாமி. இதிலிருந்தே புதையலுக்காக நிறைய நபர்கள் அலைந்திருக்கிறார்கள் என்ற விவரம் தெரிகிறது. காவல்துறையும் நிறைய விஷயங்களை மறைப்பதால் வேலுச்சாமிக்குப் 'பின்னால்' பெரிய கூட்டமே இருக்கலாம் என்கிறார்கள்.

"ராமனை நான்தான் கொன்றேன். அவனை இங்கேதான் புதைத்தேன் என்று வேலுச்சாமியே சொல்லியும்கூட இன்ஸ்பெக்டர் ராஜ்குமார், 'கொஞ்சம் தோண்டி விட்டு' ஒண்ணும் இல்லே என்று சொல்லி மேலும் தோண்ட மறுத்து விட்டார். வேலுச்சாமி, தான் கொலை செய்தவர்களை 10 அடி குழி தோண்டிப் புதைப்பதை வழக்கமாகக் கொண்டிருந்திருக்கிறான். வேலுச்சாமியின் மாமனார், தாயாரை அப்படித்தான் எடுத்திருக்கிறார்கள். ராமனின் மனைவி முத்துலெட்சுமி, வேலுச்சாமியின் மனைவி ராஜம்மாள், ஏன் வேலுச்சாமியே ஒப்புக் கொண்டும் இன்ஸ்பெக்டர் ராஜ்குமார் தோண்ட மறுத்தது ஏன்? அவர் எடுக்காத சடலத்தை ஊர் மக்களே தோண்டி எடுத்து விட்டனர். இப்போது மதுரை தடய அறிவியல் துறை வரும்வரை அந்தச் சடலம் அங்கேயே இருக்கட்டும் என்று மூடி வைத்திருந்திருக்கிறார்கள் களத்தூர் மக்கள். இப்போது விழுப்புரத்துக்கு மாற்றல் செய்யப்பட்டுள்ள இன்ஸ்பெக்டர் ராஜ்குமார் இந்த வேலுச்சாமி விஷயத்தில் ரொம்ப சாவகாசமாக இருந்திருக்கிறார்.

எனவே போலீஸார் மீது களத்தூர் மக்களுக்குச் சந்தேகம் வர, டி.ஐ.ஜி, ஜாங்கிட்டிடம், 'போலீஸார் விசாரணையில் திருப்தி இல்லை' என்று குறை சொல்லி இருக்கிறார்கள். அதனால் டி.ஐ.ஜி. ஜாங்கிட் இந்த வழக்கை மாவட்ட குற்றப் புலனாய்வுப் பிரிவுக்கு மாற்ற உத்தரவிட்டுள்ளார். களத்தூரைச் சுற்றியுள்ள முப்பது கிராமங்களில் யார் யார் காணாமல் போயிருக்கிறார்களோ அவர்கள் எல்லோர் பெயரையும் தெரிவிக்கும்படி தண்டோரா போட்டுள்ளார்கள்.

விசாரணைக்கு வந்த எஸ்.பி. கார்மேகத்திடம், வேலுச்சாமி ஏழு கொலைகள் செய்துள்ளதாக ஊர் மக்கள் சொல்லி இருக்கிறார்கள். வேலுச்சாமி மட்டுமல்ல ஊர் மக்களும் புதிரானவர்களாகவே இருக்கிறார்கள். சடலத்தைத் தோண்டி எடுத்ததால் மட்டுமல்ல; வேலுச்சாமி ஏழு கொலைகள் செய்தான் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்? 'அந்த ஏழு பேர் யார், யார்?' இதுதான் கேள்வி!

**— வியூவ்ஸ் நியூஸ்**

# “கட்சிக்கு மட்டும் வந்து

ஒரு ஊதுபத்திப் பெட்டி மாதிரி இருக்கிறது காஞ்சிபுரம் உப்பேரி குளத் தெரு. இந்த வருஷத்து இசைப் பேரறிஞர் விநாயக முதலியார் அங்குதான் வாழ்ந்து கொண்டிருக்கிறார். ஏழைமையின் விளைவ்வான விலைமதிப்பற்ற எளிமை அந்த வீட்டின் கூரையிலிருந்து வாசல் வரை குடிகொண்டிருக்கிறது. பழைய கட்டில். மிகப் பழைய டேபிள் ஃபேன். மிக மிகப் பழைய ரேடியோ. இவைதான் இந்த இசைப் பேரறிஞரின் இன்றைய சொத்து.

“நல்ல வசதியாத்தாங்க இருக்கறேன். ஒரு கிரை. ஒரு ரசம். ஒரு மோரு. இது போதாதா தின்னுட்டு உயிர் வாழ? தேவார ஓதுவாருங்களுக்கு கவர்மெண்டு மாசா மாசம் ஐந்நூறு ரூவா தருதுங்க. நல்ல சந்தோசமாத்தாங்க இருக்கறேன். ஒரு விசயம் தெரியுங்களா? ஓதுவாருங்க மொத்தம் சுமார் நூறு பேருங்க இருப்பம். இதுல நானும் தருமபுரம் சுவாமிநாதனும்தாங்க சொந்த வூட்ல இருக்கோம். மத்தவங்க எவ்ளோ கஷ்டப்படறாங்க தெரியுமா?'' என்று தம் ஏழைமையை ஒரு பொருட்டாகக் கருதாமல் பேசும் விநாயக முதலியார், “நம்ம சொத்தே சங்கீதம்தாங்க. தேவாரத்தை நினைச்சாலே – இந்தா பாருங்க – உடம்பு சிலுத்துக்குது பாருங்க! அத்தினி அழகு அது. என்னா தமிழு! என்னா அழகு! என்னா அர்த்தம்! அந்த நாலு பேருக்கு நிகரே இல்லீங்க உலகத்துல!'' என்கிறார் கண்கள் நீர்த் திரையிட.

விநாயக முதலியாருக்கு வயது எண்பத்தி ஒன்று. பார்வைக்கு மிக இளமையாகவே இருக்கிறார். அதைக் குறிப்பிட்டுக் கேட்டால் அபாரமான சந்தோஷம் வந்து விடுகிறது.

“வயசு தெரியல இல்ல? அதான்! சின்ன வயசுல குஸ்தி போடுவேன். கர்லா கட்டை சுத்துவேன். அப்பால யோகாசனம் கத்துக்கிட்டேன். அரை அவர் சிரசாசனம் போட்டு தலைகிழா நிப்பேன்னா நம்புவீங்களா? 'அறுவது வயசுக்கு மேல சிரசாசனம் போடக் கூடாது'ன்னு நேரு ஒரு வாட்டி சொன்னாரு. அப்பத்தான் நிறுத்திட்டேன். நம்மளை மாதிரி சங்கீதத் தொழில்ல இருக்கறவங்க சரீரத்தையும் பார்த்துக்கணும்; சாரீரத்தையும் பார்த்துக்கணும். ரெண்டுத்துக்கும் பொதுவான விசயம் – ஒழுக்கம் தானுங்களே! எத்தினியோ மகா வித்வானுங்க, தனி வாழ்க்கைல கொஞ்சம் அப்பிடி இப்பிடி இருந்து அழிஞ்சி போனதைப் பார்த்தவன்தானே நான்? அது சின்ன வயசுலயே மனசுல பதிஞ்சி போச்சுங்க.''

பாண்டிச்சேரியிலுள்ள கதிர்காமத்தில் பிறந்தவர் விநாயக முதலியார். நெசவுத் தொழில்தான் குடும்பத்தின் ஜீவாதாரம். ஆனால் இவருக்கு மிக இளம் வயதிலேயே இசையார்வம். வேரூன்ற, நாகஸ்வர வித்வான் சைதை முனுசாமி பண்டிதரிடம் ஆரம்பப் பாடம் பயின்றிருக்கிறார். பள்ளிப் படிப்பு?

''அது எங்கங்க! பாண்டிச்சேரில கொஞ்ச நாள் திண்ணைப் பள்ளியோடத்துல இருந்தேன். அவ்ளதான். சங்கீதப் பித்து பிடிச்சிக்கிச்சி. அப்ப திருநெல்வேலி சுந்தரமூர்த்தி ஓதுவார்தான் தேவார இசைல பெரிய ஆளு! என்னா பாடாந்தரம்! என்னா கொரலு! நெனைச்சாலே எனக்கு கண்ணு தளும்பிடும். பெரிய வித்வான். அவுரும் தண்டபாணி தேசிகரும் மெட்ராசுக்கு வருவாங்க. வருசத்துல ஆறு மாசம் இங்க கபாலி கோயிலு, கந்தகோட்டம், சைதாப்பேட்டை காரணீஸ்வரர் கோயிலு,' குன்றத்தூர் முருகன் கோயிலு – இப்படி கோயில் கோயிலா போயி பாடுவாங்க. தேவார கோஷ்டின்னுவாங்க அப்ப அதை. சாமி ஊர்வலம் வந்திச்சின்னா, பின்னால இவங்க பாடிட்டு வருவாங்க. அந்தக் காலத்துல ஒரு மைக் உண்டா? ஸ்பீக்கரு உண்டா? கணீர்னு குரல் எடுத்துப் பாடினாங்கன்னா நாயனம் அமுங்கிடும். அப்படிப் பாடுவாங்க. அந்த சுந்தரமூர்த்தி ஓதுவார்தான் நம்ம குரு. அவுருகிட்டதான் அஞ்சு வருஷம் இருந்து தேவாரம் பாடக் கத்துக்கிட்டேன்.''

விநாயகமுதலியாரின் சாதகம் (பயிற்சி) கண்டு சுந்தரமூர்த்தி ஓதுவார், 'நீ என்னை மாதிரியே வந்துடுவ பாரு' என்று சொன்னதில் முதலியாருக்கு இன்று வரை தீராத

ாதீங்க!"



பெருமை.

"அவரோட ஆசிர்வாதம்தாங்க. தேவாரம், தேவாரம்னு வாழ்க்கையே அதுக்குன்னு விட்டுட்டேன்" என்பவர், பாடுவது தவிர, பண் ஆராய்ச்சியிலும் கவனம் செலுத்தி வருகிறார், தமிழிசைச் சங்கம் மூலமாக.

''தேவாரப் பண்'ணுன்னா என்னவோன்னு நெனச்சிக்கறாங்க மக்கள். வடமொழில ராகம்னுவாங்க. தமிழ்ல பண். அவ்ளோதான். மொதல்ல தமிழ்ப் பண் 104 இருந்ததுக்கான ஆதாரங்கள் இருக்குது. புழக்கத்துல மறைஞ்சி போனது தவிர, இப்ப இருவத்தி நாலு பண்தான் இருக்குது. இதுக்குள்ளாறதான் தேவாரங்களைப் பாடறது வழக்கம். பண்ணுலயே பகல் பண், ராப்பண், பொதுப் பண்ணு மூணு விதம் இருக்குதுங்க. அந்தந்த நேரத்துக்கு அந்தந்த பண்ணுல பாடறது. பண் ஆராய்ச்சின்னா, நம்ம தமிழ்ப் பண் எது எது, எந்தெந்த கர்நாடக சங்கீத ராகத்தை ஒத்திருக்குதுன்னு ஒப்பு நோக்கறது. இப்ப மாயாமாளவகௌளைன்னு ஒரு ராகம். அதுக்கு இணையா, அதே சுவரஸ்தானங்கள் உள்ள தமிழ்ப் பண் எதுன்னு, பாடிப் பாடிப் பார்த்துக் கண்டுபிடிக்கறது!'' என்று டெக்னிகலாக விளக்க ஆரம்பித்தவர், "எல்லாம் சமணருங்க பண்ண வேலை" என்றார் சலிப்புடன்.

"திருஞானசம்பந்தர் காலத்துல தமிழும் இசையும் எத்தினியோ ஒசத்தியா இருந்ததுங்க. சமணர்கள் வந்தப்புறம்தான் இசைக் கலைக்கு நலிவு வந்தது. சங்கீத ரத்னாகரம் மாதிரி பல அருமையான இசைக் கலை நூல்களையே அவுங்க அழிச்சாங்க. என்ன காரணம்னா, சங்கீதம் ஒரு லாகிரி. காமத்தைத் தூண்டற விசயம்ங்கறது அவங்க கட்சி. அப்பிடி அழிஞ்ச விசயங்களைத் தேடறதும் எங்களை மாதிரியானவங்களுக்குக் கடமை இல்லீங்களா?'' என்கிறார்.

**வி**நாயக முதலியார் காஞ்சிபுரத்துக்காரரல்லவா? அண்ணாவுடன் நல்ல பழக்கம் இருந்திருக்கிறது.

"அண்ணாதுரை மாதிரி ஒரு ரசிகரை நான் பார்த்ததில்லீங்க. தமிழ் இசை மேல

# மிலெனிய வாசிப்பு!

**வ**யலின் இரட்டையர்கள் லலிதா, நந்தினிக்கு இந்த வருடம் தமிழக அரசின் கலைமாமணி



வழங்கப்பட்டது. மிக இளைய வயதில் கலைமாமணி பெற்ற வயலினிஸ்ட் இவர்கள்தான். இந்த டிசம்பரில், சென்னை சங்கீத மழையில் நனைந்து கொண்டிருக்க, இந்த சகோதரிகள் மட்டும் மிலெனியம் ஸ்பெஷலாக, ஆஸ்திரேலியாவில் நடைபெறவிருக்கும் இசை விழாவில் வாசிக்கப் போகிறார்கள். உலகின் பல்வேறு நாடுகளையும் சேர்ந்த இசைக் கலைஞர்கள் பங்கு கொள்ளும் இந்த இசை விழாவில் இந்தியாவிலிருந்து கலந்து கொள்ளுகிறவர்கள் இந்த இருவர் மட்டுமே!

— பாரதி

அவ்ளோ மதிப்பு அவருக்கு. திருமந்திரம் படிச்சித்தான் எனக்குத் தமிழ் ஆர்வமே வந்ததுன்னு சொல்லுவாருங்க! எங்கிட்ட அவர் எப்பவும் சொல்றது இதான்: 'விநாயக முதலியார்! தேவாரம் பாடறதை விட்றாதீங்க. பாரதிதாசன் பாட்டுங்களைப் பாடுங்க. ஆனா கட்சிக்கு மட்டும் வந்துராதீங்க.' – நினைவுகூர்ந்து சிரிக்கிறார்.

"அவுரு ஏன் அப்பிடி சொன்னாருன்னு தெரியலீங்க. நெருக்கமா பழகறோம். இவன் எங்க கட்சி அரசியல்னு வந்து சங்கீதத்தை விட்ருவானோன்னு நினைச்சாரோ என்னவோ. நமக்கு அதுல எல்லாம் ஆர்வமே கிடையாது. தினம் நாலு மணி நேரம் சாதகம். கச்சேரி இருந்தா போறது. இல்லாட்டி சும்மா கெடக்கறது. தேவாரத்தைப் பாடக் கூட வேணாங்க. சும்மா நெனைச்சிட்டிருந்தாலே சொகம்தான்!" என்பவர், தம் மகன்களுக்கு, திருநாவுக்கரசு, திருஞானசம்பந்தன், சுந்தரன், மாணிக்கவாசகம் என்றே பெயர் வைத்திருக்கிறார். ஐந்தாவது மகனுக்கு, ஏகாம்பரம்.

"மூணு பொண்ணுங்களும் உண்டுங்க. மொத ரெண்டுத்துக்கு மங்கையர்க்கரசி, திலகவதின்னு வெச்சேன். அண்ணா சிநேகிதமானதும் மூணாவதுக்குத் தமிழரசின்னு பேரு வெச்சேன்" என்கிறார் புன்னகை செய்தபடி.

**த**மிழிசைச் சங்கத்துக்கு இது 56வது ஆண்டு. அவர்களது பண் ஆராய்ச்சிக்கு வயது 50.

"நாலு வருசம் முன்னதான் தருமபுரம் சாமிநாதனுக்கு இசைப் பேறறிஞர் பட்டம் குடுத்தாங்க. இப்ப எனக்கு. அதிக வருமானம் இல்லாம, மத்த சங்கீதக்காரங்க மாதிரி வாய்ப்புகளும் இல்லாம, நாங்க கோயில்களை மட்டும் நம்பியே பாடிட்டு வர்றோம். பரிசு பாராட்டெல்லாம் என்னங்க? ஒரு சந்தோசம்தானே? கச்சேரிதான் குடுக்க மாட்டாங்க. இதுலயாவது குறையில்லாம செய்யக் கூடாதா? நூத்துக்கணக்கான ஓதுவாருங்க அடையாளந்தெரியாமலே இருக்காங்க. அவங்களையெல்லாம் எப்பங்க கவனிக்கப் போறாங்க?" என்கிறார் வருத்தமுடன். கூடவே ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் சில வருடங்கள் முன்பு நூறு ஓதுவார்களை அழைத்து கௌரவம் செய்ததையும் மறுபடி 12 ஓதுவார்களுக்கு பொற் பதக்கம் அளித்து மகிழ்ந்ததையும் சொல்கிறார்.

"ரெண்டுத்தையும் சொல்லணுமில்லே?"

விநாயக முதலியாரின் மூத்த மகனுக்கும் தேவார இசையில் ஆர்வமிருக்கிறது.

"பிரம்மாதமா பாடறாரு. சீர்காழி கோவிந்தராஜன் மாதிரி குரல் இருக்குது. நல்லா வருவாருன்னுதான் நெனைக்கிறேன்!" என்கிறார் நம்பிக்கையுடன்.

— கிருஷ்ணன்

படம் :- வெங்கடேஷ்



# தமிழ்நாடு போக்குவரத்து வளர்ச்சி நிதி நிறுவனம் லிமிடெட்.

(தமிழ்நாடு அரசு நிறுவனம்)

பதிவு அலுவலகம் : 99, கிரீம்ஸ் சாலை, எம்.என். அலுவலக வளாகம், சென்னை-6.
தொலைபேசி : 8292059, 8292917, 8293351, தந்தி :TAFCON. P.B.No.719.
E-mail:tdfc@giasmd01.vsnl.net.in

## உங்கள் எதிர்கால கனவுகளுக்கு என்றும் துணை நிற்பது TDFC முதலீடே



**13.14%**

36 மாதம் அதற்குமேல்
13% மாதாந்திர வட்டி உண்டு
1வருடம் 12.12% மற்றும்
25 மாதங்கள் 12.63% காலாண்டிற்கு



**18.18%**

60 மாதங்களுக்கு
வருடவட்டி 13% மாதந்தோறும்
கூட்டுவட்டி முறையில் கணக்கிடப்படும்.

- Rating from CRISIL FA(+) indicates adequate safety.
- Registered with RBI as NBFC vide Regn. No.: 07.00403

- உள்ளூர் காசோலைகள் மற்றும் சென்னை வரைவோலைகள் மட்டுமே பெற்றுக்கொள்ளப்படும்.
- காசோலைகளும், வரைவோலைகளும், சனி மற்றும் ஞாயிற்றுக் கிழமைகளிலும் சென்னை அலுவலகத்தில் ஏற்கப்படும்.

**உங்களது முதலீடு "டிடிஎப்சி" யில் பாதுகாப்பானது - பத்திரமானது**

இந்த விளம்பரம் கம்பெனியால் 29.9.99 தினசரியில் வெளியிடப்பட்ட சட்ட பூர்வ விளம்பரத்தின் தொடர்ச்சியாகும்.

DIPR/1560/DIS/99/ELEGANT

**1999 தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு**

# கல்கி படத்தில் எம்.ஜி.ஆர்.!

ஆஸ்திக சமாஜத்தில், சினிமா காட்டுவார்களா? உம்! காட்டினார்களே! அரங்கம் நிறைந்த காட்சியாக ரசிகர்கள் திரண்டிருந்தனர். காட்டப்பட்ட திரைப்படம் : ஸ்ரீமதி எம்.எஸ். நடித்த பக்த மீரா.

இந்த வருடம் டிசம்பர் ஐந்தாம் தேதி, கல்கி கிருஷ்ண மூர்த்தி நினைவு அறக்கட்டளை சார்பில் நடந்த அமரர்

* நிறைந்த அரங்கம்



கல்கி நினைவு நாள் நிகழ்ச்சியின் அங்கமாகத்தான் மீரா திரைப்படம் திரையிடப்பட்டது. சமயச் சொற்பொழி வாளர்கள் அமரும் மேடையில் முப்பத்தைந்து எம்.எம். திரை நின்றிருந்தது வித்தியாசமாக இருந்தது.

சென்னை நகரமே சங்கீத சீசன் வெள்ளத்தில் மூழ்கத் தொடங்கிவிட்ட நேரத்தில், இங்கே திரளாக கல்கி அன்பர் கள் கூடியிருந்ததற்கு, மீரா திரைப்படமே காரணம். இசை யின் சக்தியை உணர்த்தியவர்தானே மீரா– அதுவும் மீரா வாக இசைக் கலையின் தவப் புதல்வியான எம்.எஸ். அல் லவா நடித்திருக்கிறார்!

மாலை ஆறு மணிக்கு, கடம் வித்வான் விக்கு விநாய கராமின் வாரிசான மகேஷ் 'கஜவதனா' என்று கணீரென்று இறைவணக்கம் பாட, நிகழ்ச்சி ஆரம்பமானது. வரவேற் புரை நிகழ்த்திய கி. ராஜேந் திரன், சிறப்புரையாற்ற வந் திருந்த 'ராண்டார்கை'யை 'மதிப்புக்கும் மரியாதைக்கும் உரிய ராண்டார்கை அவர் களே' என்று குறிப்பிட்டதற் குக் காரணத்தையும் குறிப் பிடத் தவறவில்லை. 'ராண் டார்கையின் ரத்தினச் சுருக்கமான பயோடேட்டா ஏழு பக்கம் நீளமானது. ''இங்கே மட்டுமின்றி ஹாலிவுட் படங்களிலும் பணியாற்றிவரும் ராண்டார் கையின் இயற்பெயர் ரங்க துரை; அதை ஆங்கிலத்தில் எழுதி எழுத்துக்களை மாற்றிப் போட்டு உருவாக் கப்பட்ட புனைபெயர்தான் ராண்டார்கை என்று சொல்லி, மர்மக் கதைகள் பல எழுதியுள்ள ராண்டார் கையின் புனைபெயர் மர்மத்தை வெளியிட்டார், கி.ரா.

ராண்டார்கை சட்டம் படித்தவர் மட்டுமில்லை. பிரபல வழக்கறிஞர் வி.வி.கோபால ரத்தினத்திடம் ஜூனியராக இருந்தவர். தனி யார் நிறுவனம் ஒன்றில் பணி

யாற்றிக் கொண்டிருந்தபோது, எழுத்தா? உத்தியோகமா? என்ற கேள்வி எழுந்தபோது, 'எழுத்து' என்ற பெண்ணை சந்தோஷமாய்க் கைப்பிடித்தார் ராண்டார்கை.

வாழ்க்கையில் ராண்டார்கை காதலித்துக் கைபிடித்த பெண்மணி கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவர் என்பது விசேஷமில்லை. இருவரும் தத்தம் மதத்தை விட்டு மாறாமல், இணக்கத்துடன் வாழ்வது, ராண்டார்கை, மர்மக் கதை மட்டுமின்றி குடும்பக் கதை எழுதுவதிலும் வல்லவர் என்பதற்கு உதாரணம்.

அன்றைய சிறப்புச் சொற்பொழிவின் தலைப்பான 'திரை உலகிற்கு அமரர் கல்கி ஆற்றிய தொண்டு' என்பது பற்றியும் கோடிட்டுக் காட்டினார் கி.ரா. அமரர் கல்கி, நேரிடையாகப் பணிபுரிந்த பக்தமீரா, தியாக பூமி இரண்டு திரைப்படங்களும், திரைப்பட காப்பகத்தில் பொக்கிஷமாய், பாதுகாக்கப்படுவதையும் குறிப்பிட்டார்.

"அமரர் கல்கியை நேரிடையாய்ப் பழக்கமில்லை" என்று ராண்டார்கை சொன்னாலும், நேரில் பார்த்து, நெருங்கிப் பழகியவர்களை யொத்த அனுபவம், அவருக்கு செட்டி நாட்டு நண்பர் ஒருவர் புண்ணியத்தில் கிடைத்ததாம். முதல் இதழ் முதல் கல்கி பைண்டு வால்யூமை அவர் கொடுத்து உதவ, அவற்றைப் படித்து விட்டு ஐம்பத்தைந்து வாரங்கள் 'மாம்பலம் டைம்ஸ்' என்ற இதழில் அவர்களுடைய விமர்சனங்கள் எல்லாம் தொகுக்கப்பட்டு புத்தகங்களாய் வெளியிடப்படுகின்றன. அந்தப் புத்தகங்கள், பல்கலைக்கழகங்களில் பாடப் புத்தகமாக வைக்கப்படுகின்றன. இங்கே அப்படிப்பட்ட ஒரு சூழ்நிலை இல்லையென்றாலும் கூட, கல்கி என்ற விமர்சகருக்கு உலகிலேயே ஈடு இணை யாருமில்லை.

சிலப்பதிகாரம் திரைப்படமான போது, பட்த்தில் மாதவிக்கு ஒரு மாமா உண்டு. அவர் தங்க பிரேம் போட்ட மூக்குக் கண்ணாடி அணிந்து சினிமாவில் தோன்றுவார். கோவலன் படம் வெளியான போது, கல்கி, கோல்டு பிரேம் கண்ணாடி அணிந்து வரும் மாமாவைப் பற்றிக் குறிப்பிடுகையில் அந்த ஸ்டில்லையும் போட்டு, எதையுமே தமிழன் முன்னாலேயே கண்டுபிடித்து விடுவான் என்பதற்கு உதாரணம், இந்தப் படத்தில் வரும் மாதவியின்



• ராண்டார்கை சிறப்புரை



• மீரா படத்திலிருந்து...

அமரர் கல்கி பற்றிய தொடரை எழுதியிருக்கிறார் ராண்டார்கை! அவரது சிறப்புச் சொற்பொழிவின் சாரம் இது தான் :

அமெரிக்காவில் திரைப்பட விமர்சனம் ஒரு கலையாகவே வளர்ந்திருக்கிறது. திரைப்பட விமர்சனத்தை முழு நேரத் தொழிலாகக் கொண்டவர்கள் இருக்கிறார்கள்.

மாமா அணியும் கோல்டு பிரேம் மூக்குக் கண்ணாடி என்று கிண்டல் செய்திருந்தார்! - இப்படி நகைச்சுவையைப் புகுத்தி விமர்சனங்களுக்கு பலமும் புதுமையும் சேர்த்தார்.

கள்வனின் காதலி கதையை கல்கி முதலில் திரைக்கதையாகத்தான் எழுதினார். ஏனோ ஆரம்பத்தில் யாரும் அதைப் படமாக்க முன்வரவில்லை. பின் அது ஆனந்த விகடனில் தொடர்கதையாக வெளியிடப்பட்டது. அதற்குப் பிறகு, அண்ணா வசனத்தில், என்.எஸ். கிருஷ்ணன் படமாக்க விரும்பினார். அது இயலாமல் போக, சிவாஜி, பானுமதி நடிப்பில், பின்னர் படம் உருவாயிற்று. படம் வெற்றி பெறவில்லை.

கல்கி எழுதிய பொய்மான் கரடு, பொன் வயல் என்று சினிமாவாக எடுக்கப்பட்ட போதும் வெற்றி பெறவில்லை.

நட்சத்திரக் கூட்டமே பங்கேற்ற பார்த்திபன் கனவு, ரொம்ப சிரமப்பட்டு எடுக்கப்பட்டது. எதிர்பார்த்த வெற்றி கிடைக்கவில்லை.

இதனால், நாவலைப் படமாக்கினால் அது வெற்றி பெறாது என்றே திரைப்படத் துறையினர் நினைத்து விட்டார்கள். இது தவறு. எந்த ஒரு கதையையும் அப்படியே சினிமாவாக எடுத்து விட முடியாது. ஹாலிவுட்டில், ஒரு நாவலைப் படமாக்குவதற்குத் தேவையான ஸ்கிரிப்டை ஒரு வருடம் உழைத்து ரெடி பண்ணுகிறார்கள். அங்கே ஒருவர் படமெடுக்கப் போகிறேன் என்றால், 'திரைக்கதை' ரெடியா? என்றுதான் முதல் கேள்வி கேட்பார்கள். ஒரு கதையை, திரைக்கதையாக எழுதுகிற போது, அதை மீண்டும் மீண்டும் திருத்தி எழுதுவார்கள்.

தாம் எழுதிய ஹாலிவுட் தயாரிப்பான பெர்ஃப்யூம்டு கார்டன் படத்தின் திரைக்கதை ஏழெட்டு முறை திருத்தி எழுதப்பட்டது என்றும் தெரிவித்தார் ராண்டார்கை.

கல்கி திரைக்கதை எழுதிய தியாக பூமியும், பக்தமீராவும் திரையுலக வரலாற்றில் மைல் கற்கள். தியாக பூமி கதை விகடனில் வெளிவந்து கொண்டிருந்தபோது, படப்பிடிப்பும் கூடவே நடைபெற்றதால், தொடர்கதையுடன் ஓவியங்களுக்குப் பதிலாக, புகைப்படங்களே வெளியாயின.

தியாக பூமி படத்துக்குத் தடைவிதிக்கப் போகிறார்கள் என்ற செய்தி கிடைத்ததும், டைரக்டர் கே. சுப்ரமணியம், கல்கி, வாசன் மூவரும் ஒரு தந்திரம் செய்தனர். அந்தப் படத்துக்குத் தடைவருவதற்குள், அதிகபட்ச மக்கள் அதைப் பார்த்துவிட வேண்டும் என்ற நோக்கத்துடன் அப் படம் ஓடிக் கொண்டிருந்த கெயிட்டி தியேட்டரில், இலவசமாக இடைவிடாது தொடர்காட்சியாக தியாக பூமி திரையிடப்பட்டது.

தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டவுடன் போலீஸ் கெயிட்டி தியேட்டருக்கு வந்த போது, "உங்களிடம் தடை உத்தரவு இல்லையே! உத்தரவு பிரதி வரும் வரை படம் ஓடும்" என்று சமயோசிதமாகச் சொல்லி, தொடர்ந்து படத்தைக் காட்டினார்கள். தடையுத்தரவு பிரதி வந்து சேர்ந்த போது, "காட்சியை பாதியில் நிறுத்த முடியாது! படம் முடியட்டும்!" என்ற போது, பொறுமை இழந்த போலீசார் தியேட்டருக்குள் நுழைந்து, படம் பார்த்துக் கொண்டிருந்த மக்கள் மீது தடியடி நடத்தி வெளியேற்றினார்கள்!

## பிரதமர்களின் பாடகி : பத்மஜா!

இந்நாள் பிரதமர் வாஜ்பாய், முன்னாள் பிரதமர் வி.பி. சிங் இவர்களுடைய கவிதைகளை மெட்டு அமைத்துப் பாடியிருக்கிறார் புகழ்பெற்ற பாடகி பத்மஜா பினானி ஜோக்லேக்கர். (கீத் நயா காத்தா ஹெச்-ஹெச்.எம்.வி. வெளியீடு).

வாஜ்பாய் வெறும் எம்.பியாக இருந்தபோது கோபிநாத் முண்டே வீட்டில் பத்மஜா வாஜ்பாயைச் சந்தித்தபோது, அவரது கவிதைகளை இசையமைத்துப் பாட அனுமதி கேட்டார். ''என்னோடது எல்லாம் வசன கவிதை ஆயிற்றே. உங்களால் பாட முடியாதே!'' என்று சொல்லிவிட்டார் வாஜ்பாய். ஆனால், ''எங்கே, நாலுவரி பாடுங்கள்!'' என்றார். பத்மஜா பாடி முடித்ததும், கைதட்டிப் பாராட்டினார். ''கைதட்டல் கவிதைக்கு அல்ல. உங்கள் இசைக்கு!'' என்றார் வாஜ்பாய்.

குலு-மணாலி இயற்கை அழகு, இந்திய-பாக் நல்லுறவு, லெனின் நினைவக விஜயம் எல்லாம் இந்தக் கவிதைகளில் உள்ளன.

வாஜ்பாய்-வி.பி.சிங் கவிதைகளைப் பாடிய பத்மஜாவின் காசட்டுகள் விற்பனை மூலம் கிடைக்கும் தொகை முழுவதும் பிரதமரின் நிவாரண நிதிக்கு அளிக்கப்படுகிறது.

- சாருகேசி

தியாகபூமியில் எஸ்.டி. சுப்புலட்சுமி நடித்தார். பக்த மீராவில் எம்.எஸ். சுப்புலட்சுமி நடித்தார். இயக்குநர் அமெரிக்கரான எல்லிஸ் ஆர். டங்கனுக்கு, சதாசிவம், இந்துமத தத்துவங்களை விளக்கிச் சொல்ல, அவர் அவற்றை உள்வாங்கிக் கொண்டு, செயல்பட்ட விதம் பிரமிக்கத்தக்கது.

மீராவாக நடித்த எம்.எஸ். அவர்களை, எந்தக் கோணத்தில் காட்டினால் திரையில் மிக அற்புதமாக இருக்கும் என்பதைக் கண்டு பிடிக்க, டங்கன் கையாண்ட யுக்தி அபாரமானது. எம்.எஸ். அவர்களுடைய முகத்தைக் காகிதக் கூழில் செய்து அதற்குப் பல்வேறு கோணங்களிலிருந்தும் லைட்டிங் செய்து, பற்பல கோணத்திலும் படம் பிடித்து, அவற்றிலிருந்து மிகச் சிறப்பான ஒன்றைத் தேர்ந்தெடுத்து, அந்த லைட்டிங்கில், அந்தக் கோணத்தில் படம்பிடித்தாராம் டங்கன். இந்தப் பின்னணியைத் தெரிந்து கொண்டு, படத்தைப் பார்த்தபோது, அந்தக் காட்சியை இன்னும் கூடுதலாய் ரசிக்க முடிந்தது.



மீரா படத்தில், முதலில் பி.யூ. சின்னப்பா நடிப்பதாக இருந்தது. அப்புறம் பொன்னப்ப பாகவதர் பரிசீலிக்கப்பட்டார். கடைசியாக கல்கியின் ஆலோசனையின்படி தேர்வானவர்தான் நாகையா. அது போலவே, என்.எஸ்.கே. நடிப்பதாக இருந்து, பின்னர் டி.எஸ். துரைராஜ் தேர்வு செய்யப்பட்டார்.

எம்.ஜி.ஆர். கூட பக்த மீராவில் நடித்திருக்கிறார்! மிக மிகச் சிறிய வேடம். அடையாளம் கூடத் தெரிவது சந்தேகம்தான். சேனாதிபதியாக வரும் டி.எஸ். பாலையாவின் உதவியாளராக, தாடி வைத்த இளைஞர் ஒருவர் வருவார். அவர்தான் எம்.ஜி.ஆர்.

பக்த மீரா படப்பிடிப்பின் போது, வட இந்தியாவில் ஒரு கோவிலில், ஆங்கிலேயரான இயக்குநர் டங்கனை உள்ளே நுழைய அனுமதிப்பது பிரச்னையானது. டங்கனுக்கு பைஜாமா, ஜிப்பா, முண்டாசு கட்டி, காஷ்மீரத்து பிராமணர் என்று சொல்லி, சமாளித்தார் கல்கி சதாசிவம்!

திரைக்கதையில் அமரர் கல்கி செலுத்திய உழைப்பு, எம்.எஸ்.ஸின் நடிப்பு, எஸ்.வி. வெங்கட்ராமனின் இசை, கனுதேசாயின் ஆர்ட் டைரக்ஷன் என்று பல விஷயங்களையும் நினைவூட்டி ராண்டார்கை பேசி முடித்த போது, அமரர் கல்கியின் திரையுலக முகத்தின் மீது ஸ்பாட்லைட் போட்ட மாதிரியிருந்தது.

"எம்.எஸ். இந்தப் படத்தில் மீராவாக நடித்தாரா...? இல்லையில்லை. மீராவாகவே மாறிவிட்டார்" என்று கல்கி விமர்சித்து எழுதிய 'பக்த மீரா' திரைப்படத்தை அன்று ஒரு கச்சேரி போல் தலையாட்டி ரசித்து மகிழ்ந்தது கூட்டம்!

— எஸ். சந்திரமௌலி

படங்கள் : ஸ்ரீஹரி

## வந்தாச்சு விருது!

**பா**ர்த்தசாரதி சபாவில் சங்கீத கலா சாரதியாகவும் கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸில் தமிழிசை வேந்தராகவும் இரட்டை விருதுகள் குன்னக்குடியாருக்கு. இவர் வயலினுக்கு வயலின் ஓரமும் ரசிகர்கள் உண்டு வாஷிங்டனிலும் ரசிகர்கள் உண்டு.

— டி. என் சித்ரா

# KALKI SHOPPING PAGE

## PONNUH MAPILLAI MARRIAGE SERVICES (A GROUP OF S.V. HOME)

மிக விரைவில் திருமணம் நடத்திட உள்ளூர்/வெளியூர்/அயல்நாடு அனைத்து சாதி, மதத்திலும் மணமகன்/மணமகள்/விதவை மற்றும் விவாகரத்தானவர்கள் அணுகவும்.

பதிவு கட்டணம் ரூ. 250/-



பொண்ணு மாப்பிள்ளை மேரேஜ் சர்வீஸ்

(A GROUP OF S.V. HOME)
No. 6, Janaki Raman Colony,
(Near Arumbakkam Bus Stand)
Arumbakkam, Chennai - 600 106.
Phone: 4751356.
Pager: 9610 - 114668



## "கிருஷ்ணாஸ் திவ்யகீத்" இன்னிசை மழை

பெற்றோர்கள் ராமசாமி ஐயர், அலமேலு அம்மாள். பூர்வீகம் திருவையாறு என்பதால் கிருஷ்ணனின் ரத்தத்தில் கர்நாடக சங்கீதம் ஓடிக் கொண்டிருந்தது. கோவையில் 9 வருடங்கள் கர்நாடக சங்கீதத்தைக் கற்றபின் இசைக் கச்சேரிகள் நடத்தத் தொடங்கினார் கிருஷ்ணன்.

ஒருமுறை காஞ்சி சங்கராச்சாரியார் முன்பு இசை நிகழ்ச்சி நடத்தும் அரிய வாய்ப்பை பெற்ற கிருஷ்ணன், அதற்குத் தங்கக்காசும் வெள்ளிக்காசும் பரிசாகப் பெற்றார்.

இதுமட்டுமல்லாமல் திருவையாறு தியாக பிரும்ம ஆராதனை விழாவில் தொடர்ந்து 7 வருடங்களுக்குக் கச்சேரி செய்யும் வாய்ப்பையும் பெற்றிருக்கிறார்.

சினிமாவில் பாட ஆசை பிறந்ததனால் சென்னைக்கு விஜயம் செய்த கிருஷ்ணனுக்கு சினிமா உலகத்தின் கதவுகள் உடனடியாகத் திறக்கவில்லை. ஆனாலும் சோர்ந்து போகாமல் சில நண்பர்களின் உதவியால் பிரபல காமேஷ்-ராஜாமணி குழுவில் சேர்ந்து மேடையில் பாட ஆரம்பித்தார்.

'திவ்யகீத்' என்ற தனது சொந்த இசைக் குழுவின் மூலம் உள்ளூரிலும் வெளியூரிலுமாக சுமார் 2020 இன்னிசை நிகழ்ச்சிகள் நடத்தி சாதனை புரிந்துள்ளார் இவர்.

KRISHNA'S DIVYAGEET LIGHT MUSIC
NO. 48, VAITHIYA ANNAMALAI STREET,
MYLAPORE, CHENNAI - 600 004.
PH: 493 5172

## இன்றே வாங்கிடுவீர்!!!

# காமகோடி

தெய்வீக - பண்பாடு - மாத இதழ்
நவம்பர் '99 இதழிலிருந்து

பாலகுமாரன்

## 'தங்கக்குடிசை'

எனும் ஆன்மீகத் தொடரினை எழுதுகிறார்.



ஆண்டு சந்தா ரூ. 60 மட்டும். M.O. அல்லது D.D. மூலம் அனுப்பினால் உங்கள் வீடுதேடி மாதா மாதம் காமகோடி இதழ்கள் வரும்.



## காமகோடி

58/2, டி.எஸ்.வி. கோவில் தெரு, மயிலாப்பூர்,
சென்னை - 600 004. தொலைபேசி : 4943551



# "பழமையைத் தொலைத்து விட்டார்கள்!"

சீனாவில் பிறந்து, அமெரிக்க கொலம்பியா பல்கலைக் கழகத்தில் இசையில் மேற்படிப்புப் படிக்கப் போனவர் டான் டுன். இப்போது வயது 42. அமெரிக்கா போகும்போதே அவர் புகழின் உச்சியில் இருந்தார். இன்றைக்கு நியூயார்க்கில் நவீன இசையமைப்பாளர்களில் குறிப்பிடத்தக்க முன்னணிக் கலைஞர் டான் டுன். பழைய சீன இசைக் கருவிகளையும், இன்றைய சிம்ஃபொனி அமைப்பையும் கலந்து இசை அமைப்பதில் இவர் வல்லவர். 97 ஜூலையில், ஹாங்காங் நகர மணிகளின் ஒலியை உபயோகித்து இவர் புதிய சிம்ஃபொனி ஒன்றை உருவாக்கினார். சமீபத்திய படைப்பு : 'சீன அலைகள்'. ஏழாயிரம் வருடத்துக்கு முந்தைய ஸன் வாத்தியத்தை இதில் உபயோகித்திருக்கிறார் டான்!



அவருடைய பேட்டியிலிருந்து —

**'சீன அலைகள்' மூலம் நீங்கள் என்ன சொல்ல வருகிறீர்கள்?**

இசைக் கலைஞர்களும் சரி, ரசிகர்களும் சரி – பழையவை பற்றி ரொம்பவும் குழம்பிப் போயிருக்கிறார்கள். எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையே இழந்து விட்டார்கள். கலைஞர்களோ காலத்தை மறந்து களைத்துப் போய்க் கிடக்கிறார்கள். ரசிகர்களுக்கு எதை வழங்க வேண்டும் என்றே அவர்களுக்குத் தெரியவில்லை. அதைத்தான் நான் சரிசெய்யப் பார்க்கிறேன்.

**இது ஏதோ அறிவுக் கெட்டாத புதிரான இசையாக இசைக் கலைஞர்கள் நினைக்கிறார்களோ?**

இசைக் கலைஞர்கள் முழுக் குரல் எழுப்பி, வாய் விட்டுப் பாட வேண்டும். இதை மறந்து வருகிறார்கள். ரசிகர்களை நேருக்கு நேராகப் பார்த்துப் பாட வேண்டும் – சாய்க்கோவ்ஸ்கி, மொசார்ட் மாதிரி. மொசார்ட் வாழ்க்கையையும் இசையையும் ஒரே மாதிரி நேசித்த அற்புதமான மனிதர். கத்திப் பாடுவார். நிறைய ஒத்திகைகள் பார்ப்பார். நான் அவரைத்தான் இப்போது நினைவுபடுத்த விரும்புகிறேன்.

**இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?**

சீனாவிலுள்ள ஹூனன் கிராமத்துக்குப் போய்ப் பத்து நாட்கள் இருந்துவிட்டு வந்தேன். அந்தக் கிராமம் நூறு வருஷமாக மாறவே இல்லை. செப்டெம்பர் 2000-ல், அங்கிருந்து 30 விவசாயிகளை லண்டன் பார்பிகன் விழாவுக்கு அழைத்துக் கொண்டு வரப் பார்க்கிறேன். அவர்களுடைய பாரம்பரிய வழக்கங்கள், திருமணம், சாவு, இசை, நாடகங்கள், அவர்கள் எப்படிக் காதல் வசப்படுகிறார்கள், பாட்டுப் பாடுகிறார்கள், காலணிகள் – ஆடைகள் – அரிசி உணவுகள் தயாரிக்கிறார்கள் என்று எல்லாவற்றையும் மேடையில் காட்டப் போகிறேன்!

**சீனாவுக்குப் போன போது என்ன பார்த்தீர்கள்?**

எனக்கு ரொம்ப வருத்தமாக இருந்தது. அவர்களுடைய கலை, இலக்கியம் பாரம்பரியப் பழக்க வழக்கங்கள் எல்லாவற்றையும்

தகர்த்துத் தரைமட்டமாக்கி வருகிறார்கள். புதுமை பிரமாதம்தான் என்றாலும், இன்னொரு பக்கம் பார்த்தால் வருத்தமாகத்தான் இருக்கிறது. நல்லதை ரசித்து அனுபவிக்க அவர்களுக்குத் தெரியவில்லை. எல்லாமே ரொம்பவும் தாற்காலிகமானதாகவும், அற்பமானதாகவும் இருக்கின்றன. அதுதான் வருத்தம்.

**கிராமத்தில்...?**

நான் விவசாயிகளைப் பாராட்டுகிறேன். பழையதை அவர்கள் மறந்து விடவில்லை. ஆனால் அவற்றைப் பார்த்துப் பணக்காரர்கள், 'ஐயோ, அசிங்கம்! நன்றாகவே இல்லை' என்று முகத்தைச் சுளிக்கிறார்கள். அவர்கள் குடிப்பதும், டிரஸ் செய்து கொள்வதும், அவர்கள் வாழ்க்கை முறையும் வேதனையாய் இருந்தது. ஆன்மீகத்தின் சாயலே துளியும் இல்லாத, இந்தப் படாடோப ஆடம்பரத்தை தூக்கி வீசிப் போடுங்கள் என்று கூச்சலிட வேண்டும் போல் இருந்தது. செயற்கையைத்தான் மக்கள் மதிக்கிறார்கள். உண்மையானதை அல்ல. நல்ல பருத்தி ஆடைகளை யாராவது பாராட்டுகிறார்களா இப்போது? தொலைநோக்குப் பார்வையே இல்லை. இதுநாள்வரை அவர்களிடம் இருந்து வந்ததை உணர்ந்து பாராட்டச் சீனர்கள் மறந்து விட்டார்கள். கிராமங்களைச் சீரழித்து விட்டார்கள். இப்போது சீனா தன் பாரம்பரியத்தைப் பாதுகாத்துக் கொள்ளவில்லை என்றால், இனி எப்போதும் முடியாது. எப்போது பாடம் கற்கப் போகிறார்களோ!

**பிரமாதமான கலைப் படைப்பையோ, இசையையோ சீனா உருவாக்குகிறதா?**

எங்கள் கலாசாரத்தின் துயரமான காலகட்டம் இது. இன்னும் 5 – 10 வருடங்களில் இதே வழியில் சீனா தொடர்ந்தால், பொருளாதாரம் வேண்டுமானால் பிரமாதமாய் இருக்கலாம். ஆனால் கலாசாரத்தைப் பொறுத்தவரை நிலைமை தர்மசங்கடமாகி விடும். தங்கள் கலாசாரத்துக்குப் புதிதாக எதுவும் பெருமை சேர்த்து விடவில்லை என்று புரிந்துக் கொள்வார்கள்.

**இன்னமும் நீங்கள் சீன இசைக் கலைஞராகத்தான் உங்களை நினைத்துக் கொள்கிறீர்களா?**

நான் சீனாவை நேசிக்கிறேன். என்னவெல்லாமோ செய்ய வேண்டும் என்று மனசு கிடந்து அடித்துக் கொள்கிறது. ஆனால் எப்படி என்ன செய்வது என்று புரியவில்லை. வெளிநாடுகளில் உள்ள சீனர்களையும், சீன தேசத்து அறிவு ஜீவிகளையும் சேர்த்துக் கொண்டு, உரக்கக் கத்திப் பாடிக் கொண்டே போக வேண்டும் என்று தோன்றுகிறது. சீனர்கள் அவர்களது வேர்களைத் தேட வேண்டும். பாதுகாக்க வேண்டும். நல்ல எதிர்காலம் வேண்டும் என்றால் பழையதைத் தொலைத்து விடாமல் பாதுகாக்கவும் வேண்டும்.

'நியூஸ்வீக்'கிலிருந்து : **எஸ்.வி.என்.**

**சு**தா ரகுநாதன் குழுவினரோடு ஐரோப்பா பயணம். 95ம் வருட தொடக்கம் அது. அங்கே 'லக்சம்பர்க்' மாநிலத்தில் சேர்ந்தாற் போல பல கச்சேரிகள். ஒரு நாள் திடீரென எனது வலது தோள்பட்டையில் இருந்து கை முழுவதும் பயங்கரமான வலி! கச்சேரிக்குச் செல்கிற இடமெல்லாம் வாத்தியத்தைத் தூக்கிக் கொண்டு செல்வதால் வந்த வலியாக இருக்கும் என்று நினைத்தேன்.

அன்று மாலையில் நடந்த கச்சேரியில் மனத்தில் நினைத்த சொல் ம்ருதங்கத்தில் பேச வில்லை. ஒரு தயக்கம் ஏற்பட்டது. அந்த ஐரோப்பா பயணத்தை ஒரு வழியாக சமாளித்து சென்னைக்குத் திரும்பியதும் மருத்துவரை சந்தித்ததில் 'இது பக்க வாதத்தின் தொடக்க நிலையான இராம்ப்' என்று சொல்லி சிகிச்சை தொடங்கினார்.

வலி குறையவில்லை.

ஒரு கட்டத்தில், வாசிக்கற நேரம் என்று இல்லாமல் எப்போதுமே வலது கை முழுக்க வலி இருக்க ஆரம்பித்தது!

வைத்தியத்தில் எத்தனை விதமான முறைகள் உண்டோ எல்லாம் பார்க்க ஆரம்பித்தோம். மருந்து, மாத்திரை, பிசியோதெரபி... பணம் தான் குறைந்தது. வலி குறைந்தபாடில்லை! கச்சேரிக்கு வாசிக்க முடியாத சூழ்நிலை. இந்த நேரத்தில் சங்கீத வித்வான் திரு. டி.எம். தியாகராஜனின் சிடர் திரு. சீதாராமன், கே.எஸ். வெங்கட்ராமன், வைரமங்கலம் லக்ஷ்மி நாராயணன்– இவர்களிடம் வாய்ப்பாட்டு கற்றுக் கொள்ள ஆரம்பிச்சேன்.

'கடவுள் கிருபையால் நமக்குக் கொஞ்சம் சங்கீத ஞானம் இருக்கிறது. வாத்யம் வாசிக்க முடியாதபடி சோதனை. சரி, பாட்டாவது பாடலாமே' என்ற எண்ணத்தில்தான்!

ஒரு நாள் என் வாத்தியார்

**— ஷ்யாம் சுந்தரின் அபூர்வ அனுபவம்**

# மீண்ட ம்ருதங்கம்!

காரைக்குடி மணி சாரை சந்தித்து 'அய்யோ! நீங்க கத்துக் கொடுத்ததெல்லாம் வீணாப் போயிடும் போலிருக்கே. நான் என்ன பண்றது?'னு அழுதேன். மருத்துவ ரீதியாக என் கைக்கு ஏற்பட்ட குறை நீங்கவில்லை என்ற ஆதங்கத்தில் அழுதேன். அப்போது மணி சார் 'கத்துண்ட வித்தை எப்பவுமே நம்மை விட்டுப் போகாது. மருத்துவத்தை நிறுத்தாதே. மனுஷாளுக்கு மேல ஒருத்தர் இருக்கார். நம்பிக்கையும் வேணும். குரு சுராஜானந்தா சமாதி அடைஞ்ச ஆசிரமம் சென்னை நீலாங்கரைல இருக்கு. சமயம் கிடைக்கும் போதெல்லாம் அங்கே போய் நம்பிக்கையோட தியானம் பண்ணி ம்ருதங்கம் வாசிச்சுப்பார்'என்று சொன்னார். நானும் அங்கே சென்று தியானத்தோடு வாசிக்கவும் பழக ஆரம்பித்தேன். வலி இருந்தாலும் தெய்வத்தின் மேல பாரத்தை போட்டுவிட்டு வாசிக்க ஆரம்பித்தேன்.

கம்பெனி வேலை, மருத்துவ சிகிச்சை, தியானத்தோடு ம்ருதங்க பயிற்சி. இன்னொரு பக்கம் பாட்டு கிளாஸ்- இப்படி எல்லாவற்றிலும் மூணு வருஷம் கவனம் செலுத்தினேன்.

ஒரு நாள் மணி சார் என் வலது கை விரல்களைப் பிடித்து உருவி விட்டார். கிட்டத்தட்ட பத்து வருட காலம் அவரிடம் ம்ருதங்கம் கற்றுக் கொண்டதில் ஒரு நாள் கூட அவர் என் கையைப் பிடிச்சு பாடம் சொல்லிக் கொடுத்தது கிடையாது. முதல் தடவையாக அன்னிக்கு அவர் அப்படி என் கையை உருவி விட்டதும் என் கையை விட்டு ஏதோ ஒன்று இறங்கிப் போகிற மாதிரி ஓர் உணர்வு எனக்கு ஏற்பட்டது! அடுத்த நாளிலிருந்து கை வலி குறைய ஆரம்பிச்சு ஒரு மாதத்துல சுத்தமாக வலியே இல்லாம என்னால பழைய படி ம்ருதங்கத்தை வாசிக்க முடிஞ்சது!

சுமார் மூன்று வருட காலம் என் வலது கையில் குடி கொண்டிருந்த வலி என்னை விட்டு நீங்கியதில் என் மன வலிமை, நான் மதிப்பு வைத்திருக்கும் என் குரு காரைக்குடி மணியின் ஆசிர்வாதம், எல்லாவற்றுக்கும் மேலாக கடவுளின் கிருபை- இவற்றுக்குப் பெரும் பங்கு உண்டு!

சோதனையான கட்டங்களில் எனக்கு ஊக்கமும், ஒத்துழைப்பும் கொடுத்த எனது குடும்பத்தாருக்கும் எனது முன்னேற்றத்தில் பங்கு இருக்கிறது. எனது முதல் வாய்ப்பாட்டுக் கச்சேரியை 98 அக்டோபரில் மயிலை சாய்பாபா கோவிலில் நிகழ்த்தினேன்.

இப்போது வழக்கம் போல சபா கச்சேரிகளுக்கும், டீ.வி., ரேடியோ நிகழ்ச்சிகளுக்கும் ம்ருதங்கம் வாசித்துக் கொண்டிருக்கிறேன்.

சந்திப்பு:
**மடிப்பாக்கம் வெங்கட்**

47

# குறையொன்றுமில்லை

ஜிதந்தா ஸ்துதியிலே பகவானை ரூப மற்றவன் என்று வர்ணிப்பதாகச் சொன்னேன். ரூபம் உண்டு என்றும் திவ்யமங்கள ஸ்வரூபன் என்றும் சொல்லிவிட்டு இப்படி துதிப்பதன் தாத்பர்யம் என்னவென்றால், அவன் ரூபமானது அவன் பொருட்டு இல்லை. பக்தர்கள் சேவிப்பதற்காக அழகான ரூபமுடையவனாய் அவன் தோற்றமளிக்கிறான்.

அவன் ஏந்தியிருக்கும் ஆயுதங்கள், அவனுக்குக் கஷ்டம் ஏற்படுகிறபோது அந்த கஷ்டத்தைத் துடைத்துக் கொள்வதற்காக அல்ல. தன்னை ஆச்ரயிக்கக்கூடியவர்களைக் காப்பாற்றுவதற்காக ஆயுதங்கள் தாங்குகிறான்.

ஆதலால், 'ரூபம் இல்லை' என்றால் என்ன அர்த்தம்? அவன் பொருட்டு அவனுடைய ரூபம் இல்லை; பக்தர்களின் பொருட்டே அவன் ரூபம் என்று அர்த்தம்.

சில சமயங்களில் அவன் ரூபமானது அவனுக்கே பிச்சேற்றும்படியாக இருக்கிறதாம்!

ஒருநாள், வைகுண்டத்திலே பகவான் தன்னையே சற்றுத் திரும்பிப் பார்த்தானாம். பார்த்தவுடனே அவனுக்கே தன்னைப் பூஜை செய்து கொள்ளத் தோன்றியதாம்!

ஒரு தட்டிலே புஷ்பத்தை வைத்துக் கொண்டு ஓம் கேசவாய நம: ஓம் நாராயணாய நம: என்று தன்னைத்தானே பூஜை பண்ணிக் கொண்டால் எதிரே இருப்பவர்கள் சிரிக்கப் போகிறார்களே என்ற பயம்! அதனால் பரமாத்மா என்ன பண்ணினான்... ஒரு அழகான கோயில். அதிலே பிரணவாகாரத்திலே ஒரு மண்டபம். உள்ளே சயனத் திருக்கோலத்திலே தன்னை அமைத்துக் கொண்டு ரொம்ப நாள் வைகுண்டத்திலேயே அதை வைத்துக் கொண்டிருந்தான்.

ஒருநாள் பிரும்மா வந்தார். அதை எடுத்துக் கொண்டு போய்விட்டார். பிரும்ம லோகத்திலே ரொம்ப நாள் அதை வைத்து ஆராதனம் பண்ணிக் கொண்டிருந்தார். பிறகு இக்ஷ்வாகு வம்சத்தவர்கள் அதை வைத்துக் கொண்டு ஆராதிக்கட்டும் என்று பிரும்மா அதை இக்ஷ்வாகு வம்சத்தாரிடம் கொடுத்து விட்டார். இக்ஷ்வாகு குலதனமாய் அந்த ரங்கநாதன் அந்த அயோத்தி மாநகரிலே பல காலம் ஆராதிக்கப்பட்டான். பின்னர் அதே சூர்ய குலத்திலே பகவான் சக்ரவர்த்தித் திருமகனாக - ராமனாக வந்து பிறந்தான்.

வந்து பிறந்து அவனே என்ன பண்ணினான்...? நாளைக்குப் பட்டாபிஷேகம் என்று சொல்கிறபோது, இன்று லக்ஷ்மி தேவியாகிய சீதையோடு போய் அங்கே, தானே ரங்கநாதனுக்கு அர்ச்சனை பண்ணுகிறான்!

அர்ச்சனை பண்ணுகிறானே, அவனுடன் இருக்கிற பத்னியை 'சக பத்ன்யா விசாலாக்ஷ்யா' என்று விசேஷணமிடுகிறார் வால்மீகி.

'விசாலமான நேத்திரம் படைத்த சீதை!' ஏன் அப்படிச் சொல்கிறார் என்றால், இந்தக் காட்சியை இமைகள் கொட்டாமல் அப்படியே அனுபவிக்கிறாளாம் சீதை. ஏனென்றால், கண்ணை மூடிக் கொண்டால், ஒரு க்ஷணம் மூடிக் கொண்டாலும் அந்த அழகு போய்விடுமே! அர்ச்சிக்கப்படுபவனும் அவனே, அர்ச்சிப்பவனும் அவனே என்கிறபோது, அந்த அபூர்வ காட்சியைத் தவற விடலாமா?

ஏன் அப்படித் தன்னைத் தானே அர்ச்சித்துக் கொள்கிறான் என்றால், வைகுண்டத்திலே தன்னையே தான் அர்ச்சனை பண்ணிக் கொள்ள வேண்டும் என்று ஒரு முறை அவனுக்குத் தோன்றியது அல்லவா? அதை இப்போது நிறைவேற்றிக் கொண்டான்!

அதனாலேதான்,

*ஆராத அருளமுதம் பொதிந்த கோயில்*
*அம்புயத்தோன் அயோத்தி*
*மன்னர்க்களித்த கோயில்*
*தோளாத தனிவீரன் தொழுத கோயில்*
*துணையான வீடணர்க்குத் துணையாம்*
*கோயில்*

என்று சுவாமி தேசிகன் இதை எடுத்துக் காட்டுகிறார்.

தோளாத தனி வீரன் – ஏக வீரன்! அசகாயசூரன்! அவனால் ஆராதிக்கப்பட்டவன் பெரிய பெருமாள் ரங்கநாதன். அவனுடைய வடிவழகு அவனையே பிச்சேற்றி அவனையே தன்னை ஆராதித்துக் கொள்ளும்படி பண்ணுகிறதாம்!

அத்தனை திவ்யமான ஸ்வரூபமான தனாலேதான் 'நிர்மலானந்த கல்யாண நிதயே விஷ்ணவே நம:' என்றது.

அப்படிப்பட்ட கல்யாண குணங்களுக்கு இருப்பிடமான, எந்த தோஷமும் கலப்பில்லாத விஷ்ணுவின் பொருட்டு நம : என்று பகவான் திருவடியிலே அர்ச்சனை பண்ணினாலும், சஹஸ்ரநாமத்தைச் சொன்னாலும் இது மொத்தமும் நமக்கு மனத்திலே ஓட வேண்டும். இத்தனை விஷயங்களையும் நினைத்துப் பார்க்க வேண்டும். அவனுடைய சர்வ வியாபகத்தையும் திவ்ய மங்கள ரூபத்தையும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

மொத்தமும் மனத்தில் அந்த நேரத்திலே ஓடவேண்டும் என்றால் ஓடுமா? கொஞ்சமாவது ஓடட்டுமே! ஓடுகிற வரை ஓடட்டும். இன்றைக்கு சஹஸ்ரநாமத்தைச் சொல்கிறபோது ஒரு விஷயம் ஓடும். அதை நாளைக்குச் சொல்கிறபோது வேறொரு விஷயம் ஓடும். இப்படி அந்த விஷ்ணு பதத்துக்கு உண்டானதாக மகான்கள் காட்டிய பொருளெல்லாம் நம் மனத்தில் ஓடினால், பகவான் அனுக்ரஹம் விரைவில் கிடைக்கிறது. 'இவன் மனதும் வாக்கும் ஒன்றாக இருக்கின்றன; இவனை நாம் அனுக்ரஹம் பண்ண வேண்டும்; இதைச் சீக்கிரம் முடிக்க வேண்டும் என்பதற்காக அவன் சொல்லவில்லை; 'சொல்ல வேண்டுமே' என்று அலுப்புடன் சொல்லவில்லை. உற்சாகமாகச் சொல்கிறான். பக்தியோடு சொல்கிறான்...' என்று தெரிந்து பகவான் அனுக்கிரஹம் பண்ணுகிறான்.

இவ்வாறு மந்த்ர ராஜ பத ஸ்தோத்திரப் பெருமையைச் சொல்லிக் கொண்டே போகலாம். நிர்மலானந்த கல்யாண நிதயே விஷ்ணவே நம : என்று அவன் திவ்ய ஸ்வரூபத்தைக் கொண்டாடுகிற இந்த ஸ்லோகத்தை பரமசிவன் மிகவும் சிலாகித்திருக்கிறார் என்று சொன்னேன்.

பரமசிவனுடைய உத்தமமான மந்திர பஞ்சாக்ஷரியையும் ஆசார்யர்களிடத்திலே உபதேசம் பெற்றுக் கொண்டு பஞ்சாயதன பூஜை பண்ணுவார்கள். நித்யம் பண்ணுகிறவர்களுக்கு ஈச்வரானுக்ரஹம் திவ்யமாக ஏற்படும்.

ஆதிசங்கர பகவத் பாதாள் கேட்கிறார் – பக்தி என்பது எதைத்தான் செய்யாது!

காட்டில் திரியும் வேடன் ஒருவன் ஒரு சிவலிங்கத்தைப் பார்த்து விட்டான். அது ஈச்வரன் என்று தெரியாது அவனுக்கு. அதிலே பரமசிவன் எழுந்தருளியிருக்கிறான் என்று அறியாத அஞ்ஞானி அவன். அவன் என்ன பண்ணினான்...? அதன் மேலே ஒரே குப்பையும் தூசியுமாயிருக்கிறது. அதையெல்லாம் தட்ட வேண்டும்; சுத்தமாக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது.

சுத்தமாக்குவதற்கு அவனிடமென்ன கவரிமான் சாமரமா இருக்கிறது? செருப்புதான் இருக்கிறது அவனிடம். காலிலே போடுகிற செருப்பு. எங்கெங்கோ திரிந்த பாதுகை. அந்தப் பாதுகையை எடுத்து லிங்கத்தின் மேலே தட்டுகிறான். அதைப் போட்டுத் துடைக்கிறான். அது எப்படி இருக்கிறதென்றால்.... ஈச்வரன் கைலாச பர்வதத்திலிருந்தபடி, அவன் துடைப்பதைப் பார்த்து விட்டு சிலிர்ப்பு அடைகிறானாம்!

## அருள்வாக்கு

ஒவ்வொரு ஆசையும் ஒவ்வொரு ஸமயத்தில் அலுத்துப் போகிறது. ஆனாலும் எந்த ஆசையுமே ஒரு வழியாக அற்றுப்போயும் விடாமல் கொஞ்ச நேரத்துக்கு அப்புறம் 'விட்டேனா பார்' என்று மறுபடி படையெடுக்கிறது. ஆசையைப் பூர்த்தி பண்ணும் வஸ்துவின் அநுபோகம் ஜீவனுக்குத் திரும்பத் திரும்ப வேண்டியிருக்கிறது. அதற்கு அவன் அடிமையாகிவிடுகிறான், addict-ஆகிவிடுகிறான். அடிமையாய் விட்டால் அப்புறம் துக்கப்பட வேண்டியதுதான்.

'ஷவர்பாத்' தான் தனக்கு 'ஹாபிட்' என்றால் எல்லா இடத்திலும் 'ஷவர்' கிடைக்குமா? ஸங்கீதத்தில் ரஸிக்யம் இருக்கிறவனுக்கு எப்போதும் உசந்த ஸங்கீதமாகக் கிடைக்க முடியுமா? கவிதையிலே ரொம்ப ரஸிப்பு, இலக்கியத்திலே ஈடுபாடு இருக்கிறவனுக்கு உசந்த விஷயமாக எப்போதோதான் கிடைக்கிறது. காமா

அவ்வளவு சுபிதமாக திருமேனியிலே ஒத்தி, மிருதுவாக எடுக்கிற மாதிரி இருக்கிறதாம்!

அடுத்து அவனுக்கு சிவலிங்கத்தை அலம்ப வேண்டும் என்று தோன்றியிருக்கிறது. ஆனால் அவனிடத்திலே பாத்திரம் கிடையாது. பக்கத்திலே நதிக்குப் போனான். வாய் நிறைய ஜலத்தை எடுத்துக் கொண்டு வந்து அதன் மேலே உமிழ்கிறான்! மறுபடியும் போய் எடுத்து வந்து உமிழ்கிறான்!

நமகம் சமகம் சொல்லி அபிஷேகம் பண்ணினால் இது எப்படி இருந்தது என்றால் அந்த ஈச்வரனுக்குப் பஞ்ச பக்ஷ பரமான்னாதிகள் வைத்து, பஞ்சாம்ருதமெல்லாம் வைத்து நிவேதனம் பண்ணினால் அவன் எப்படி இன்பமாக அதை ஏற்பானோ அப்படி ஏற்றானாம்.

இங்கே அவன் உபயோகித்த பதார்த்தங்களையா ஈச்வரன் பார்த்தான்...? இல்லை! அவனிடத்திலே இருக்கிற பக்தியைத்தான் பார்க்கிறான்.

பக்தி எதைத்தான் எப்படி ஆனந்தமாக ஈச்வரன் ஏற்பானோ அந்த மாதிரி ஏற்றுக் கொண்டிருக்கிறான்!

அதற்கப்புறம் பார்த்தான் – இவனுக்குப் பசிக்கிறது. லிங்கத்துக்கும் பசிக்குமே! என்ன செய்வதென்று பார்த்துவிட்டு அங்கே ஓடிய காட்டுப் பன்றியை ஓர் அடி அடித்தான். அதன் மாமிசத்தை எடுத்து அது ருசியாக உள்ளதா என்று சுவை பார்த்தான். ரொம்ப ருசியாக இருந்தது! அதைக் கொண்டு போய் எதிரே வைத்துச் 'சாப்பிடு' என்றான் லிங்கத்திடம்.

செய்யாது! வனத்திலே திரியக்கூடிய ஒரு வேட்டுவ குலத்தவனை – சாமானியனை எல்லா பக்தர்களுக்கும் முன்பாக வைத்துச் சொல்லியிருக்கிறதல்லவா!

கண்ணப்ப நாயனாரின் இந்தச் சரித்திரத்தில் சொல்லப்படுவதைத்தான் ஆதி சங்கர பகவத் பாதாள் எடுத்துக்காட்டுகிறார். பக்தியினால் எதையும் சாதிக்கலாம்.

'ஈச்வர பக்தி நிரம்பப் பெற்றவன் பெற்ற பேறைப் பாருங்கள்' என்கிறார்!

(தொடரும்)



சோமா, கன்னா பின்னா ஆகியவைதான் நிறையக் கிடைக்கின்றன. இவனுக்கோ படிக்காமலிருக்க முடிவதில்லை. அப்படி ஹாபிட் ஆகிவிட்டது. ஆனால் படிக்க எடுக்கிற புஸ்தகம் எதுவும் த்ருப்தி தரமாட்டேன் என்கிறது. அதற்காகப் படிக்காமல் இருந்தாலும் dull- ஆக, depressed-ஆக இருக்கிறது. ஆசை உண்டாக்குகிற ஹாபிட் என்கிற பழக்க தோஷத்தினால் இப்படியெல்லாம் துன்பம். ரேஸ் கோர்ஸ், கள்ளுக்கடை, சீட்டாட்டம், காஃபி க்ளப்தான் என்றில்லை; எதிலே ஆசை வைத்தாலும் அது ஒரே இழுப்பாக இழுத்து, அதிலே ரொம்ப ஆனந்தத்தைத் தந்த அநுபோகத்துக்காக மறுபடி மறுபடி தாஹப்பட வைத்து ஒருத்தனை வாட்டி எடுத்து விடுகிறது. இவன் எதிர்பார்ப்பது– உசந்த ஸங்கீதம் பிடித்தவனுக்கு உசந்த ஸங்கீதம், க்ராம்யக் கூச்சல் பிடித்தவனுக்கு அப்படிப்பட்ட கூச்சல், உசந்த லிட்ரேசர் பிடித்தவனுக்கு ரஸமான இலக்கியம், ஆபாஸக் கூத்துப் பிடித்தவனுக்கு அந்த ஆபாஸம், இட்லி ஸாம்பார் ப்ரியனுக்கு அந்த போஜ்யம்-இப்படி ஒவ்வொருத்தனும் எதிர்பார்ப்பது அவன் ஆசைப்படும் தரத்துக்கு எப்போதும் கிடைப்பதில்லை. அப்படிப்பட்ட ஸமயங்களில் ஏமாற்றமும் துக்கமுமே ஏற்படுகிறது. அந்த ஆசை இல்லாதிருந்தால் இந்த துக்கமும் இல்லை.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

# மனைவி

எனக்குத் தூக்கம் வரவில்லை. மனத்தில் தேங்கியிருந்த கவலை தூக்கத்திற்கு வழி விடவில்லை. படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தேன். பக்கத்தில் அமைதியாய் அமுதா தூங்கிக் கொண்டிருந்தாள். அவள் கழுத்தை அணைத்தபடி குழந்தை ஸ்நேகா.

சிறிது நேரம் அவர்களை உற்றுப் பார்த்தேன். 'எனக்கு ஏதாவது ஒண்ணு ஆனா இவங்களுக்கு யார் இருக்கா...?' உள்ளுக்குள் திகில் நெருப்பாய்ப் பரவி என் நெஞ்சைப் பொசுக்கியது. கண்களைச் சுற்றி கண்ணீர் காவலிருந்தது.

அமுதா இப்போது நிம்மதியாகத் தூங்குகிறாள். ஒருவேளை டாக்டர் சந்தேகப்படுவது போல் இருந்து விட்டால்...? அமுதாவால் இப்படித் தூங்க முடியுமா...? எனக்கு முன்னாடியே உயிரை விட்டு விடுவாளே...

கம்பெனியில் வேலை செய்யும் போது இரண்டு முறை மயக்கம் வந்து, சிறிது நேரம் சுயநினைவு இல்லாமல் கிடந்ததை நான் ஒன்றும் பெரிதாய் எடுத்துக் கொள்ளவில்லை. என்னுடன் வேலை செய்யும் பக்கத்து வீட்டு சீனு சொல்லி அமுதாதான் பயந்தாள். டாக்டரிடம் போக வற்புறுத்தினாள். பணம் இல்லையென்று மறுத்ததும் உண்டியலில் கிடந்த சில்லறைகளைப் பொறுக்கி எடுத்து நோட்டாய் மாற்றினாள்.

நியூரோ சர்ஜனிடம் போனோம்.

"சொல்லுங்க உங்க ப்ராப்ளம் என்ன...?" டாக்டர் அமைதியாகக் கேட்டார்.

சொன்னேன். அதுவரை லேசான காய்ச்சலைப் போலவே அதை எடுத்துக் கொண்டிருந்தேன்.

"மயக்கம் வரதுக்கு முன்னாடி நொடிப்பு இருந்துச்சா...?" - டாக்டரிடம் தெரிந்த தீவிரத்தைக் கண்டு லேசாய் கலவரமானேன்.

"எனக்குத் தெரியலே சார்..."

டாக்டர் இன்னும் என்னென்னவோ கேட்டார். கொஞ்சம் யோசித்தார். பிறகு என் மனைவியிடம் பேசினார் –

"இவர் மூளையில ஏதாவது ப்ராப்ளம் இருக்குமோன்னு டவுட்டா இருக்கு. அவருக்கு மயக்கம் ஏற்பட்டு சுயநினைவு இல்லாம இருந்தப்பலாம் ரத்தக்கசிவு ஏற்பட்டிருக்குமோன்னு சந்தேகப்படறேன். அதனால உடனடியா ஸ்கேனும், இன்னும் சில டெஸ்டுகளும் எடுத்தாகணும். ரிசல்டைப் பார்த்துத்தான் ட்ரீட்மெண்ட் இங்க பண்ண முடியுமான்னு முடிவு பண்ணணும். இல்லேன்னா நீங்க சென்னை ஜி.ஹெச்சுக்குப் போகணும்..."

நான் சுத்தமாய் இடிந்து போனேன்.

"ரத்தக்கசிவுன்னா எதனால சார் ஏற்பட்டிருக்கும்...?" அமுதா கேட்டாள்.

"எப்பவாவது தலையில உள் அடிபட்டிருக்கலாம். இல்ல மூளைக்குள்ள சின்னதா கட்டி கூட இருக்கலாம். அதோட ரொம்ப நாள் டி.பி. இருந்து கவனிக்காம விட்டிருந்தாக் கூட அது மூளையை அட்டாக் பண்ணியிருக்கலாம். ரத்தக்கசிவுன்னு தான் சொல்ல முடியாது. வேற எதுனா ப்ராப்ளம் இருந்தாலும் இருக்கும். ஆரம்பத்திலே கவனிச்சுடறது நல்லது இல்லையா? எல்லாத்துக்கும் டெஸ்ட் எழுதித் தந்திருக்கேன். கவலைப்படாதீங்க. மூளையில ப்ராப்ளம் இல்லேன்னு தெரிஞ்சுட்டா ரொம்ப சிம்பிள். ஈஸியா சரி பண்ணிடலாம்..."

மூளையில் ஏதாவது பிரச்னை என்றால் என் கதி என்ன? தேறுவேனா... மனசு நெருப்பில் விழுந்த புழு போலானது.

அமுதா என்னைப் போல் கவலைப்படுவதாய்த் தெரியவில்லை. 'அவர் யாருக்கு என்ன கெடுதல் பண்ணியிருக்கார். பயப்படற மாதிரி எதுவும் இருக்காது' என்கிற நம்பிக்கையா? அல்லது தன் தவிப்பையும்,

துடிப்பையும் எனக்கு அடையாளம் காட்டாமல் தனக்குள்ளேயே புதைக்கிறாளா...? புரியவில்லை.

புரண்டு படுக்கும்போது நான் உட்கார்ந்திருப்பதைப் பார்த்து அமுதா திடுக்கிட்டு எழுந்தாள்.

"என்னங்க... என்னாச்சு...?" - பதற்றம் அவள் உதட்டில் மட்டுமல்ல உயிரிலும் தெரிந்தது.

நான் என் கவலையை திசைமாற்றினேன். "ஒண்ணும் இல்ல அமுதா. டாக்டர் எழுதிக் கொடுத்த டெஸ்டுக்கு எல்லாம் குறைஞ்சது மூவாயிரம் ரூபா செலவாகும். ஸ்கேனுக்கே ரெண்டாயிரமாமே! அதான் என்ன பண்றதுன்னு கவலையாயிருக்கு..."

"இதுக்குத்தானா இப்படி இடிஞ்சு போய் உட்கார்ந்திருக்கீங்க...? என் செயினை தரேன். வித்துடுங்க."

"உங்கிட்ட இருக்கறதே அது ஒண்ணு

எஸ். எஸ். பூங்கதிர்

தான். அதைக் கொடுத்துட்டு நீ என்ன பண்ணுவே...? எங்கேயாவது விசேஷத்துக்குப் போறதுன்னா?''

''எனக்கு உங்களை விட செயினாங்க முக்கியம்?''

அமுதா என் மடி மீது தலைவைத்துப் படுத்துக் கொண்டாள். இதயத்தின் அடியிலிருந்து கிளம்பிய அழுகையை அவளிடமிருந்து மறைக்கத் திணறிப் போனேன்.

விடிந்ததும் அமுதா செயினை அவிழ்த்துத் தந்தாள். வெறும் தாலிக் கயிற்றுடன் அவள் கழுத்தைப் பார்க்கச் சங்கடமாய் இருந்தது. ஏற்கெனவே அவள் நகைகளை எல்லாம் ஒவ்வொன்றாய் அழித்தாகி விட்டது. இதையுமா...? மனசு வரவில்லை.

''அமுதா, வேணாம். பக்கத்து வீட்டு சீனுதான் வட்டிக்குப் பணம் தரானே? அவன்கிட்ட வாங்கிக்கலாம்...''

''வட்டிக்கு வாங்கிட்டா அதை எப்படித் திருப்பித் தர்றது?''

''அதை அப்புறம் பார்ப்போம்...''

சீனு கேட்டதும் மறுக்காமல் பணம் தந்தான்.

ஆட்டோ பிடித்து ஸ்கேனிங் சென்டருக்கு வந்தோம். பிறகு அங்கிருந்து இ.ஸி.ஜி. எடுக்கும் இடத்திற்கு வந்ததும் தலையில் ஷாம்பு போட்டு கிளீன் பண்ணச் சொன்னார்கள். பாத்ரூமில் அமுதா தலைக்கு மட்டும் தண்ணீர் ஊற்றி ஷாம்பு போட்டுத் தேய்த்து அலசினாள்.

என் மனசு விம்மியது. கடவுளே... எனக்கு ஏன் இப்படி? நான் என்னாவேன்? டாக்டர் கேட்டது போல நான் தலைவலி வந்து எப்போதாவது மாத்திரை சாப்பிட்டிருக்கிறேனா? ஒருவேளை வேலைப் பளுவில் தலைவலி வந்து கண்டுக்காமல் விட்டிருப்பேனோ? எதுவுமே புரியவில்லை. எல்லாம் ஏதோ மாயம் போல் இருந்தது. எனக்கு ஏதாவது ஆனால் என் மனைவியும், குழந்தையும் தாங்குவார்களா? என் மனைவிக்குத் தெரியாமல் என் கண்ணீர் தண்ணீரோடு சேர்ந்து கொண்டது.

இரண்டு மணி நேர அவஸ்தைக்குப் பிறகு அனைத்து ரிசல்டுகளுடன் டாக்டரைப் பார்க்கப் போனோம். மனத்தில் வெவ்வேறு விதமான கேள்விகள்... தவிப்புகள்... எதிர்பார்ப்புகள்...

டாக்டர் ஸ்கேனையும், மற்ற ரிசல்டுகளையும் உன்னிப்பாய்ப் பார்த்துக் கொண்டிருக்கும் அந்த திக்... திக்... நிமிடங்களில் அமுதா முகத்தில் எந்தச் சலனமும் தெரியவில்லை. ஆனால் நானோ செத்துச் செத்துப் பிழைத்தேன். தூக்குத் தண்டனைக் கைதியின் கடைசி நிமிட அவஸ்தையை அனுபவித்தேன்.

என் இம்சையை அதிக நேரம் நீடிக்க விட விரும்பாமல் டாக்டர், ''பயப்படற மாதிரி ஒண்ணும் இல்லை மிஸ்டர் சூர்யா...'' என்றார்.

எனக்குள் சந்தோஷ ஊற்று எங்கிருந்து கிளம்பியதோ.... உடம்பெல்லாம் புது ரத்தம் புகுந்த மாதிரி... அப்பப்பா எவ்வளவு ஆனந்தம்!

விசும்பல் சப்தம் கேட்டு அதிர்ச்சியுடன் திரும்பிப் பார்த்தேன். அமுதா முகத்தை பொத்திக் கொண்டு அழுதாள். அவள் உடல் குலுங்கியது. நான் பயந்து விடுவேன் என்று அவள் பயந்து, தனக்குள் பூட்டி வைத்திருந்த வேதனைகளை எல்லாம் வெளியேற்றிக் கொண்டிருந்தாள்.

## கஜல் கச்சேரி!

இந்த சீசனில், பாடகர் ஹரிஹரன், கஜல் நிகழ்ச்சி ஒன்றை வழங்கப்போகிறார். ''அவரை கர்நாடக இசைக் கச்சேரிக்குத்தான் தேதி கேட்டேன். ஆனால், கர்நாடக இசைக் கச்சேரி செய்து நானாகிவிட்டதால், கஜல் பாடுகிறேன்



என்றார். சென்னைக்குப் புதுசு என்கிற கோணத்தில் நானும் ஓ.கே. சொல்லிவிட்டேன். நிகழ்ச்சிக்கு நல்ல வரவேற்பு இருக்கிறது. டிக்கெட் விற்பனையே சாட்சி'' என்கிறார் நிகழ்ச்சியை ஏற்பாடு செய்துள்ள ராது.

— சி.எம்.

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே



















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை — 3.

போன்: 5350182, 5343412

# பொன்னியின் செல்வன்

### ஒன்பதாம் அத்தியாயம்

## நாய் குரைத்தது

மணிமேகலை வந்தியத்தேவனுடைய முகத்தைப் பார்த்த வண்ணம் நின்றாள்.

வந்தியத்தேவனும் புன்னகை புரிந்த வண்ணம் நின்றான். இந்தப் பெண்ணிடம் என்ன சொல்லிவிட்டு, எப்படித் தப்பிச் செல்வது என்று அவன் மனம் சிந்தித்துக்கொண்டிருந்தது.

இச் சமயம் எங்கேயோ தூரத்திலிருந்து ஒரு குரல், "அம்மா! என்னை அழைத்தீர்களா?" என்று கேட்டது.

''இல்லையடி, உன் வேலையைப் பார்!" என்றாள் மணிமேகலை. உடனே அவளுடைய திகைப்பு நீங்கியது.

சற்றுமுன் வந்தியத்தேவன் புகுந்து வந்த துவாரத்தின் அருகில் சென்று உட்பக்கத்துத் தாளையிட்டாள். பின்னர், வந்தியத்தேவனுக்குச் சமிக்ஞை காட்டி அந்த அறையிலேயே சற்றுத் தூரமாக அழைத்துச் சென்றாள். சட்டென்று திரும்பி நின்று "ஐயா! உண்மையைச் சொல்லும்! சந்திரமதி உம்மை அழைத்ததாகக் கூறினீரே? அது நிஜமா?" என்று கேட்டாள்.

"ஆம், அம்மணி!"

"எப்போது எங்கே பார்த்து உம்மை அழைத்தாள்?"

''சற்று முன்னால்தான்! அடுத்த அறையில் நான் குரங்கின் பின்னால் மறைந்து நின்றபோது நீங்கள் இருவரும் வந்து பார்த்து விட்டுத் திரும்பினீர்கள். நீங்கள் திரும்பிய பிறகு அவள் என்னைப்

பார்த்து, 'குரங்கே? நீ என்னுடைய அறைக்கு வந்து இருக்கிறாயா? வேண்டாத சமயத்தில் வருகிறவர்களைப் பயமுறுத்தி அனுப்பச் சௌகரியமாயிருக்கும்!' என்றாள். அது தங்கள் காதில் விழவில்லை போலிருக்கிறது!''

மணிமேகலை இளநகை புரிந்த வண்ணமாக "காதில் விழுந்திருந்தால் அவளைச் சும்மா விட்டிருப்பேனா?'' என்றாள்.

"இளவரசி! தங்கள் தோழி பேரில் கோபிப்பதில் என்ன பயன்? என் முகமும் வாலில்லாக் குரங்கின் முகமும் ஒன்று போலிருந்தால் அதற்குச் சந்திரமதி என்ன செய்வாள்?''

"உமது முகத்துக்கும் வாலில்லாக் குரங்கின் முகத்துக்கும் வெகு தூரம்!''

''குரங்கின் முகத்துக்கும் அதற்கு மேலே தொங்கிய ஆந்தையின் முகத்துக்கும் உள்ள தூரம் போலிருக்கிறது.''

"உமது முகம் குரங்கு முகமும் அல்ல; ஆந்தை முகமும் அல்ல. ஆனால், குரங்கின் சேஷ்டையெல்லாம் உம்மிடம் இருக்கிறது. சில சமயம் ஆந்தையைப் போலவும் விழிக்கிறீர். சற்று முன்னால் இதோ இந்தக் கண்ணாடியில் எட்டிப் பார்த்து விழித்தது நீர்தானே?''

"ஆம், இளவரசி. நான்தான்!''

''எதற்காக உடனே பின் வாங்கிக் கதவைச் சாத்திக்கொண்டீர்?''

''இந்தக் கண்ணாடியில் என் முகத்துக்கு அருகில் ஒரு தேவ கன்னிகையின் முகம் போலத் தெரிந்தது. அந்த தேவ கன்னிகை என் முகத்தைப் பார்த்துப் பயந்து கொள்ளப் போகிறாளே என்று நான் பிடித்திருந்த யானைத் தந்தத்திலிருந்து கையை எடுத்தேன். கதவு தானாகச் சாத்திக்கொண்டது.''

"அந்தத் தேவ கன்னிகை யார் என்பது உங்களுக்குத் தெரியுமா?''

''அந்த க்ஷணம் எனக்குத் தெரியவில்லை. பிறகு நினைத்துப் பார்த்துத் தெரிந்துகொண்டேன்.''

''என்ன தெரிந்து கொண்டீர்?''

''நான் பார்த்தது தேவ கன்னிகை அல்ல; தேவ கன்னிகைகள் ஓடி வந்து அடி பணிவதற்குரிய மணிமேகலா தேவி; கடம்பூர் சம்புவரையரின் செல்வக் குமாரி என்று தெரிந்துகொண்டேன். என்னுடைய ஆருயிர் நண்பன் கந்தமாறனுடைய அருமைத் தங்கை என்பதும் நினைவுக்கு வந்தது.''

மணிமேகலையின் புருவங்கள் நெறிந்தன. ஏளனமும் கோபமும் கலந்த புன்சிரிப்புடன், "அப்படியா? என் தமையன் கந்தமாறன் தங்களுடைய ஆருயிர் நண்பனா?'' என்றாள்.

"அதில் என்ன சந்தேகம், இளவரசி! நாலு மாதங்களுக்கு முன்னால் நான் இங்கு ஒருநாள் வந்திருந்தது நினைவில்லையா? அந்தப்புரத்துக்குக்கூட வந்து தாய்மார்களுக்கு வணக்கம் செலுத்தினேனே? அது ஞாபகம் இல்லையா?''

"நன்றாய் ஞாபகம் இருக்கிறது. அதற்குள் மறந்து விடுமா? அந்த வல்லவரையர் வந்தியத்தேவர் என்னும் வாணர்குலத்து இளவரசர் தாங்கள்தானா?''

"ஆம், இளவரசி! தங்குவதற்கு அரண்மனையும் ஆளுவதற்கு இராஜ்யமும் இல்லாமல் 'அரையன்' என்ற குலப் பெயரை மட்டும் தாங்கிக்கொண்டிருக்கும் அந்த ஏழை நான்தான்! ஒரு காலத்தில் தங்கள் தமையன் என்னிடம் தங்களைப் பற்றி எவ்வளவோ சொல்லியதுண்டு. ஒரு காலத்தில் நானும் கந்தமாறனும் வடபெண்ணை நதிக்கரையில் காவல் செய்துகொண்டிருந்தபோது, தங்களைப் பற்றி அடிக்கடி சொல்லுவான். நானும் ஏதேதோ கனவு கண்டு கொண்டிருந்தேன். பிறகு அந்த எண்ணத்தை மறந்து விட்டேன்.''

மணிமேகலையின் உள்ளத்தில் ஓர் அதிசயமான எண்ணம் தோன்றியது. இவன் தன்னைக் குத்திக் கொல்ல முயன்றதாகக் கந்தமாறன் கூறினான். அது எதற்காக இருக்கும்? ஒருவேளை தன்னைப் பற்றியதாகவே

அமரர் கல்கி

இருக்குமோ? தன்னை இவனுக்கு மணம் செய்து கொடுக்கப் போவதில்லை என்று சொன்னதற்காகக் கந்தமாறனுடன் சண்டையிட்டிருப்பானோ? - இந்த எண்ணம் அவள் உள்ளத்தில் இன்பப் புயலை உண்டாக்கியது.

அதை அவள் கோபப் புயலாக மாற்றிக்கொண்டாள்.

"ஐயா! அந்தப் பழைய கதையெல்லாம் இப்போது வேண்டாம். இந்த அரண்மனையில் நீர் கள்ளத்தனமாகப் புகுந்ததின் காரணத்தைச் சொல்லும்! இல்லாவிடில் உடனே என் தோழியை அழைத்துத் தந்தைக்குச் சொல்லி அனுப்ப வேணும்" என்றாள்.

"இளவரசி! நான் இங்கு வந்த காரணத்தை முன்னமே சொன்னேனே? சில கொலைகாரர்கள் என்னைக் கொல்லுவதற்காகத் துரத்திக்கொண்டு வந்தார்கள். அவர்களிடமிருந்து தப்பி ஓடி வந்தபோது பூமியில் ஒரு துவாரம் தெரிந்தது. அது ஏதோ இரகசியப் பாதை என்று அறிந்துகொண்டேன். அதன் வழியாக ஓடித் தப்பிக்கலாம் என்று வந்த போது, அந்த வழி இங்கே கொண்டு வந்து சேர்த்தது!"

"ஐயா! சுத்த வீரர் என்றால் உமக்கே தகும். நானும் எத்தனையோ அஸகாய சூரர்களைப் பற்றிக் கேட்டிருக்கிறேன். ஆனால் உம்மைப் போல் ஓட்டத்தில் சூரனைப் பற்றிக் கேட்டதில்லை. உத்தர குமாரன் உம்மிடம் பிச்சை வாங்க வேண்டியதுதான்!"

வந்தியத்தேவன் மனத்தில் சுரீர் என்றது. தான் அசட்டுப் பெண் என்று நினைத்த மணிமேகலை இப்படித் தன்னைக் குத்திக் காட்டும்படி ஆகிவிட்டதல்லவா?

"தேவி! அவர்கள் ஏழெட்டுப் பேர்! நான் ஒருவன். அவர்கள் ஆயுதபாணிகள். என்னிடம் ஆயுதமே இல்லை. என்னுடைய அருமை வேல் கொள்ளிடத்து வெள்ளத்தில் போய் விட்டது..."

"ரொம்ப நல்லது! அந்தப் படுபாதக வேல், சிநேகிதனைப் பின்னாலிருந்து குத்திக் கொல்லும் வேல். ஆற்றோடு போனதே நல்லது!"

வந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அவன் பதில் சொல்ல வாயெடுப்பதற்குள் மணிமேகலை "உண்மையைக் கூறி விடும். கொலைகாரர்களிடம் தப்பிப்பதற்காக ஓடி வந்தீரா! கொலை செய்வதற்காக இங்கு வந்தீரா?" என்று கேட்டாள்.



வந்தியத்தேவன் தீயில் காலை வைத்தவனைப் போல் துடித்து, "சிவ சிவா! நாராயணா! நான் யாரைக் கொலை செய்வதற்காக இங்கே வர வேணும்? என் ஆருயிர் சிநேகிதரின் அருமைத் தங்கையையா? எதற்காக?" என்றான்.

"நான் என்ன கண்டேன்! 'அருமை சிநேகிதன்' என்று வாய் கூசாமல் பொய் சொல்லுகிறீரே? அப்பேர்ப்பட்ட அருமை சிநேகிதன் பின்னாலிருந்து முதுகிலே குத்திக் கொல்லுவதற்கு நீர் முயலவில்லையா? அது எதற்காகவோ, அதே காரணத்துக்காக, இங்கே யாரையேனும் கொலை செய்வதற்கு நீர் வந்திருக்கலாம்."

"கடவுளே! இது என்ன வீண்பழி? நானா கந்தமாறனின் முதுகில் குத்தினேன்? அப்படிப்பட்ட காரியத்தைச் செய்வதற்கு முன்னால் என் கையை வெட்டிக் கொண்டிருப்பேனே? இளவரசி! இத்தகைய படுபாதகமான பொய்யைத் தங்களிடம் யார் கூறினார்கள்?"

"என் அண்ணனே கூறினான். வேறு யாராவது கூறியிருந்தால் நான் நம்பியே இருக்க மாட்டேன்."

"கந்தமாறனா இப்படிக் கூறினான்? அப்படியானால் நான் உண்மையில்



தரியை நான் மறந்து விட வேண்டும் என்று வற்புறுத்தினான்?"

"எதற்காக?"

"இராஜ்யம் ஆளும் பேரரசர்கள் தங்களை மணந்து கொள்ளக் காத்திருப்பதால் தங்களை நான் மறந்து விட வேண்டுமென்று வற்புறுத்தினான்."

"நீரும் அடியோடு என்னை மறந்து விட்டீர் ஆக்கும்!"

"என்னால் அடியோடு மறக்க முடியவில்லை. ஆனால் அது முதல் தங்களை என் அருமைச் சகோதரியாகக் கருதத் தொடங்கினேன். இளவரசி! உடனே கந்தமாறனிடம் என்னை அழைத்துப் போங்கள்! அல்லது அவனை இங்கே அழையுங்கள். ஏன் இத்தகைய பெரும் பொய்யை அவன் சொன்னான் என்றாவது தெரிந்து கொள்கிறேன். அல்லது உண்மையிலேயே அவன் அப்படி எண்ணிக்கொண்டிருந்தால், அந்தத் தப்பெண்ணத்தைப் போக்குகிறேன்..."

"தஞ்சாவூரில் ஆரம்பித்த காரியத்தை இங்கே பூர்த்தி செய்து விடலாம் என்று வந்தீராக்கும்..."

"அப்படி என்றால்..."

"அங்கே அவனைக் கொல்ல முயன்றீர்; அந்த முயற்சி பலிக்கவில்லை..."

"கடவுளே! கந்தமாறனைக் கொல்லுவதற்கு அவனுடைய அரண்மனையைத் தேடியா வருவேன்!"

"இரகசிய வழியாக வந்தது வேறு எதற்காக?"

"அதோ, உற்றுக் கேளுங்கள்! என்னைக் கொல்ல வந்தவர்கள் அடுத்த அறையில் இன்னும் இருக்கிறார்கள். அவர்கள் நடமாடும் சத்தமும் பேசும்

துர்ப்பாக்கியசாலிதான்! யாரோ அவனை முதுகிலே குத்தித் தஞ்சாவூர் மதில் சுவருக்கு அருகில் போட்டிருந்தார்கள். மூர்ச்சையாகிக் கிடந்த அவனை நான் தூக்கிக்கொண்டு போய்ச் சேந்தன் அமுதன் குடிசையில் சேர்த்துக் காப்பாற்றினேன். அதற்கு எனக்குக் கிடைத்த வெகுமதியா இது? இளவரசி! எதற்காக அவனை நான் கொல்ல முயன்றேனாம்? ஏதாவது காரணம் சொன்னானா?"

"சொன்னான், சொன்னான்! நீர் என் அழகைப் பழித்து, அவலட்சணம் பிடித்தவள் என்று இகழ்ந்தீராம். தஞ்சாவூர்ப் பெண்கள் என்னைவிட அழகிகள் என்று சொன்னீராம். அதனால் கந்தமாறன் கோபங்கொண்டு உம்மை நன்றாய்ப் புடைத்தானாம். நேருக்கு நேர் சண்டையிடக் கையினாலாகாமல் பின்னாலிருந்து அவனைக் குத்தி விட்டீராம்! இதெல்லாம் உண்மையா, இல்லையா?"

"பொய்! பொய்! பயங்கரமான பொய். தங்களை அவலட்சணம் என்று சொல்வதற்கு முன்னால், என் நாக்கையே துண்டித்துக்கொண்டிருப்பேனே? கந்தமாறன் அல்லவா அவனுடைய சகோ



குரல்களும் கேட்கவில்லையா?''

''அவர்கள் எதற்காக உம்மைக் கொல்ல வர வேணும்?''

''அவர்களைப் பார்த்தால் மந்திர வாதிகள் போலிருக்கிறது. ஒருவேளை நர பலி கொடுக்கும் கூட்டமாயிருக்கலாம்...''

''சகல இலட்சணங்களும் பொருந்திய இராஜகுமாரனாகிய உம்மை அதற்காகப் பிடித்தார்கள் போலிருக்கிறது...'' என்று கூறி மணிமேகலை சிரித்தாள்.

''அதுதான் எனக்கும் அதிசயமாயிருக்கிறது. இந்த ஆந்தை விழி விழிக்கும் குரங்கு மூஞ்சிக்காரனை அவர்கள் எதற்காகப் பிடிக்க வந்தார்கள் என்று தெரியவில்லை. உங்கள் பேச்சைக் கேட்ட பிறகு ஒரு சந்தேகம் உதிக்கிறது. ஒருவேளை என் நண்பன் கந்தமாறனே இப்படிப் பட்ட ஏற்பாடு செய்திருப்பானோ என்று. அவனிடம் என்னை உடனே அழைத்துச் செல்லுங்கள்! ஒன்று, அவனுடைய தப்பபிப்பிராயத்தைப் போக்கிக் கொள்ளட்டும்; இல்லாவிட்டால் என்னை அவன் கையினாலேயே கொன்று விடட்டும். கொலைகாரர்களை எதற்காக ஏவ வேண்டும்? அம்மணி! உடனே கந்தமாறனை அழைத்து விடுங்கள்!''

''ஐயா! அவ்வளவு அவசரப்பட வேண்டாம். கந்தமாறன் ஊரில் இல்லை.''

''எங்கே போயிருக்கிறான்?''

''காஞ்சிக்குக் கரிகாலரை அழைத்து வரப் போயிருக்கிறான். நாளை இரவு எல்லாரும் இங்கு வந்து விடுவார்கள்.



அதுவரையில் நீர்..."

"அதுவரையில் என்னை இங்கேயே இருக்கச் சொல்கிறீர்களா? அது நியாய மல்ல!"

"இங்கே இருக்கச் சொல்லவில்லை. இன்னும் சற்று நேரத்துக்கெல்லாம் இங்கே பழுவூர் இளையராணி வந்து விடுவாள். பிறகு ஈ காக்காய் இங்கே வர



முடியாது. பழு வேட்டரையர் எப் பேர்ப்பட்டவர் என்பது உமக்குத் தெரிந்திருக்கும். அவர் உம்மை இங்கே கண்டால் உடனே கண்ட துண்டமாய் வெட்டிப் போட்டு விடச் சொல்வார்! ஆ! அக்கிழவருக்குத் தான் பெண்டாட்டியின் பேரில் எவ் வளவு ஆசை!" என்று சொல்லி மணி மேகலை சிரித்தாள்.

வந்தியத்தேவன் முன் தடவை பழு வேட்டரையர் வந்தபோது நடந்ததை யெல்லாம் நினைத்துக்கொண்டான்.

"அப்படியா? பழுவேட்டரையருக்குப் பழுவூர் இளையராணி பேரில் ரொம்ப ரொம்ப ஆசையா?" என்று கேட்டான்.

"அது நாடு நகரம் எல்லாம் தெரிந்த விஷயம் ஆயிற்றே! போன தடவை, எட்டு மாதங்களுக்கு முன்னால் இங்கே ஒரு தடவை அவர்கள் வந்திருந்தார்கள். பழுவூர் ராணி அந்தப்புரத்துக்கு வரக் கூடக் கிழவர் விடவில்லை! அப்படிக் கண்ணும் கருத்துமாய்ப் பாதுகாக்கிறார். இந்தத் தடவை சில நாள் இங்கே இருக் கப் போகிறார்களாம். பழுவூர் ராணிக்குத் தனி அந்தப்புரம் வேண்டுமென்று ஒரே தடபுடல். இந்தத் தடவையாவது எங் களையெல்லாம் பார்க்கப் போகிறாளோ, பார்ப்பதற்குக் கிழவர் விடப் போகி றாரோ, தெரியவில்லை."

"அப்படியானால் நான் இப்பொழுது என்ன செய்யட்டும்?"

"அதுதான் நானும் யோசித்துக் கொண்டிருக்கிறேன்... ஆ! ஒரு யோசனை தோன்றுகிறது. என் தமையன் கந்த மாறனுடைய தனி ஆயுத அறை ஒன்று இந்த மாளிகையில் இருக்கிறது. அதில் உம்மைக் கொண்டு விடுகிறேன். நாளை சாயங்காலம் கந்தமாறன் வந்துவிடுவான். அதுவரையில் அங்கேயே இரும். நீர் சொல்வதின் உண்மை, பொய்யைக் கந்த மாறனிடம் நேரில் நிருபித்து விடலாம்..."

"இளவரசி! அது முறையன்று! மிகவும் ஆபத்தான காரியம்!"

"என்ன ஆபத்து?"

"அங்கே நான் எப்படி வந்து சேர்ந் தேன் என்று கந்தமாறன் கேட்டால் என்ன பதில் சொல்லுவது?"

"உள்ளது உள்ளபடி சொல்லுகிறது."

"உள்ளது உள்ளபடி நான் இப்போது சொன்னதை நீங்களே நம்பவில்லையே? அடுத்த அறையில் என்னைத் தேடி வந்த ஆட்கள் இருக்கும்போதே?"

"ஐயா! அதை இப்போதே சோதித்து விடுகிறேன்."

"என்ன சோதிக்கப் போகிறீர்கள்?"

"அடுத்த அறைக்குள் சென்று அந்த மனிதர்களைப் பார்த்து விசாரிக்கப் போகிறேன். அவர்கள் உம்மைக் கொல்ல வந்தவர்களா? அல்லது நீர் அழைத்து வந்தவர்களா என்று தெரிந்துகொண்டு வருகிறேன்."

"ஐயோ! அவர்கள் பொல்லாத துஷ் டர்கள். தாங்கள் அவர்களிடம் தனியாக அகப்பட்டுக்கொண்டால்..."

"என் அரண்மனையில் யார் என்னை என்ன செய்ய முடியும்? இதோ பாருங் கள்!" என்று கூறி மணிமேகலை யாருக் கும் தெரியாமல் தன் இடுப்பில் செருகி யிருந்த சிறிய மடக்குக் கத்தியை எடுத்துக் காட்டினாள்.

"யாரும் என்கிட்ட வர முடியாது! அப்படி ஏதாவது ஆபத்து வருவதாயிருந் தால் நீர்தான் சூராதி சூரர் இங்கே இருக்கிறீரே!"

"அம்மணி! என்னிடம் தற்சமயம் ஆயுதம் ஒன்றுமில்லை."

"வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்று நீர் கேட்டதில்லையா? உமது பெயரே வல்லவரையர் ஆயிற்றே? ஆயு தம் கையில் இருந்தால் பெண் பிள்ளை கள் கூடச் சண்டை போடுவார்கள். ஆண் பிள்ளைகள் எதற்கு? உமக்கு வீண்

கவலை வேண்டாம். அங்கே அந்த அறையில் தூக தட்டிக் கொண்டிருந்தவன் எங்கள் அரண்மனை வேலைக்காரன்தான். மற்றவர்களை அவன்தான் இட்டு வந்திருக்க வேண்டும். அவர்களும் எனக்குத் தெரிந்தவர்கள் என்றே தோன்றுகிறது. அவர்கள் எதற்காக இங்கே வந்திருக்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொண்டு வருகிறேன். கதவுக்கு அருகில் நிற்க வேண்டாம். அதோ அந்த மரக் களஞ்சியத்துக்குப் பக்கத்தில் போய்ச் சிறிது மறைந்து நில்லுங்கள்!"

வ்விதம் சொல்லிக்கொண்டே மணிமேகலை வேட்டை அறைக்குப் போகும் இரகசிய வாசற் பக்கம் சென்று அதன் கதவைத் திறக்க முயன்றாள்.

வந்தியத்தேவன் அவசரமாக நடந்து மரக்களஞ்சியத்தின் அருகில் சென்று சற்று மறைந்து நின்றான்.

மரக்களஞ்சியத்தின் கதவுகள் திறந்திருந்தன. அதற்குள்ளே தற்செயலாகப் பார்த்தான். அது தானியம் கொட்டும் களஞ்சியம் அல்லவென்று தெரிந்தது. அதற்குள்ளே படிப்படியாக அமைந்திருந்தது. ஒவ்வொரு படியிலும் யாழ், வீணை, மத்தளம், தாளம் முதலிய இசைக் கருவிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. மேலே சிறிது அண்ணாந்து பார்த்தான். படிகள் மேற்கூரை வரையில் போவதாகத் தெரிந்தது.

இதற்குள் மணிமேகலை வேட்டை மண்டபத்தின் கதவைத் திறந்துகொண்டு உள்ளே பிரவேசித்தாள்.

அவளுடைய தைரியத்தை வந்தியத்தேவன் வியந்தான். அதே சமயத்தில் மணிமேகலைக்கு ஆபத்து ஒன்றும் நேருவதற்கில்லை என்று மனத்தைத் திடப்படுத்திக்கொண்டான்.

இதற்குள் அந்த அறையின் இன்னொரு பக்கத்திலிருந்து ஒரு கதவு திறந்தது. "அம்மா! அம்மா!" என்று கூவிக்கொண்டே சந்திரமதி உள்ளே வந்தாள்.

வந்தியத்தேவன் திடுக்கிட்டான். அவள் தன்னைப் பார்த்து விடாமலிருப்பதற்காக இசைக் கருவிக் களஞ்சியத்துக்குள் நுழைந்தான்.

"அம்மா! அம்மா! தஞ்சாவூர்க்காரர்கள் கோட்டை வாசலில் வந்து விட்டார்களாம். மகாராணி உடனே தங்களை அழைத்து வரச் சொன்னார்கள்!" என்று கத்திக்கொண்டே சுற்று முற்றும் பார்த்தாள். அவள் எதிரில் திறந்திருந்த வேட்டை மண்டபக் கதவை நோக்கிப் போனாள்.

கதவின் அருகில் நின்று பார்த்தால் வந்தியத்தேவன் களஞ்சியத்துக்குள் இருப்பது தெரிந்து போய் விடும். ஆகையால் அவன் விரைவாகச் சில படிகள் மேலே ஏறினான்.

ஒரு வீணையின் மீது அவன் முழங்கால் இடித்து அது சப்தித்தது.

வந்தியத்தேவன் பீதி அடைந்து மேலும் சில படிகள் ஏறினான். அவன் தலை களஞ்சியத்தின் மேற்பலகையில் முட்டியது. என்ன விந்தை? அந்த மேற்பலகையில் வந்தியத்தேவனுடைய மண்டை முட்டியபோது சிறிது மேலே சென்றது.

ஏதோ சந்தேகம் தோன்றி வந்தியத்தேவன் அப் பலகையைக் கைகளினால் நெம்பித் தூக்கினான். அது நன்றாய் மேலே போனதுடன், திறந்த இடத்தின் மூலமாக வெளிச்சம் வந்தது. தூரத்தில் சலசலவென்று சத்தம் கேட்டுக்கொண்டிருந்தது. ஒரு பக்கத்தில் வானத்தில் மின்னும் நட்சத்திரங்களும் தெரிந்தன. வந்தியத்தேவனுடைய உள்ளம் உற்சாகத்தினால் துள்ளியது.

பலகையை நன்றாக நகர்த்தி விட்டு மேலே ஏறினான். மாளிகையின் மேல் மச்சில் ஒரு பகுதிக்கு, தான் வந்திருப்பதைக் கண்டான். அதிலும் அந்தப் பகுதி முன்னொரு நாள் அவன் சுகமாகக் காற்று வாங்கிக்கொண்டு படுத்திருந்த பகுதிதான். பெரிய தூண்களின் மறைவில் நின்று சிற்றரசர்களின் கொடிய சதியாலோசனையைப் பற்றித் தெரிந்துகொண்ட அதே இடந்தான்.

பலகையைத் தள்ளி முன் போல் மூடினான். மூடிய பிறகு, கூரையிலிருந்து அப்படி ஒரு வழி இருக்கிறதென்று கண்டுபிடிப்பது சுலபமல்லவென்பதை உணர்ந்தான். அதைப் பற்றி இப்போது யோசிக்கவும் அதிசயப்படவும் அவகாசம்

இல்லை. அங்கிருந்து தப்பிச் செல்லும் வழியைப் பார்க்க வேணும்.

இத்தனை நேரமும் தனக்கு உதவி செய்த அதிர்ஷ்ட தேவதை இனியும் உதவி செய்யாமலா இருக்கப் போகிறது?

வந்தியத்தேவன் நாலாபுறமும் சுற்றிப் பார்த்தான். எங்கு நோக்கினாலும் கொடிகளும் தோரணங்களும் பறந்து அந்த அரண்மனைப் பிரதேசம் முழுவதும் கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. அடாடா! இராஜோபசாரம் என்பது இதுதான் போலும்!

வந்தியத்தேவன் அடி மேல் அடி வைத்து மெள்ள மெள்ள நடந்தான். சுற்று முற்றும் பார்த்துக்கொண்டு நடந்தான். மேல் மச்சில் எங்கும் மனித சஞ்சாரமே இல்லை. அந்த வரையில் நம் அதிர்ஷ்டந்தான். பிறகு கொஞ்சம் விரைவாகவே நடந்தான்.

முன்னொரு தடவை அவன் படுத்திருந்த நிலா மாடத்துக்கு வந்து சேர்ந்தான். அங்கிருந்து பார்த்தபோது அரண்மனையின் வெளிமதிலும், மதிலுக்கும் மாளிகைக்கும் நடுவிலிருந்த முற்றமும், குரவைக் கூத்து நடந்த இடமும் காணப்பட்டன. ஆனால் இந்த இடங்களிலும் மனிதர்கள் யாரும் காணப்படவில்லை. அதற்குக் காரணம் கண்டுபிடிப்பது அவ்வளவு கடினமான காரியமாயில்லை. அரண்மனையின் முன் வாசலில் ஒரே அல்லோலகல்லோலமாயிருந்தது. நூற்றுக் கணக்கான தீவர்த்திகள் வெளிச்சம் தந்தன. மேள தாளங்கள் பேரிகை முழக்கங்களுடன் மனிதர்களின் வாழ்த்தொலிகளும் கலந்து பேரொலியாகக் கிளம்பியது. பழுவேட்டரையரின் பரிவாரங்கள் அரண்மனை வாசலை நெருங்கி வந்து விட்டபடியால், அவர்களை வரவேற்பதற்காக எல்லாரும் அங்கே போயிருக்கிறார்கள். அதனாலேதான் இங்கேயெல்லாம் ஜன சஞ்சாரம் இல்லை. ஆகா! உண்மையில் அதிர்ஷ்ட தேவதை வந்தியத்தேவன் பக்கத்தில் இருந்தாள் என்பதில் சந்தேகமில்லை. தப்பிச் செல்வதற்கும் எவ்வளவு அருமையான சந்தர்ப்பம்? அரை நாழிகைக்கு முன்னாலும் இத்தகைய சமயம் கிடைத்திராது; அரை நாழிகை பின்னால் வந்தாலும் இம்மாதிரி வசதி கிட்டியிராது.

சதியாலோசனை நடந்த இடத்துக்குச் சமீபமாக வந்து, வந்தியத்தேவன் இன்னொரு தடவை சுற்று முற்றும் பார்த்தான்; ஒருவருமில்லை. கீழே குனிந்து பார்த்தான்; அங்கேயும் யாரும் இல்லை. எதிரில் மதில் சுவரைப் பார்த்தான். அங்கேயும் யாரும்...ஆ! இது என்ன மதில் மேல், கிளைகளுக்கு நடுவில் ஒரு முகம்! ஆழ்வார்க்கடியானுடைய முகம் போல் தெரிகிறதே...! சீச்சீ! வீண் பிரமை! முன்னொரு தடவை ஆழ்வார்க்கடியானுடைய முகம் போல் தெரிந்த இடம் அது! ஆகையால் அவன் மனம் அவனை அப்படி ஏமாற்றி விட்டது! அதுவும் ஒரு நல்லதற்குத்தான். மதில் மேல் ஏறிக் குதித்துத் தாண்டுவதற்கு அதுதான் சரியான இடம். அதை அவனுடைய உள் மனம் சுட்டிக் காட்டி ஞாபகப்படுத்தியிருக்கிறது. வரவேற்பு முடிந்து வாசலில் நிற்கும் கூட்டம் உள்ளே வருவதற்குள் அவன் தப்பித்துச் செல்ல வேண்டும். முற்றத்தில் எப்படி இறங்குவது...? ஆ! இதோ ஒரு வழி! இங்கே முற்றத்தில் ஒரு கொட்டகை போட்டிருக்கிறது. குரவைக் கூத்துக்காகப் போட்டிருக்கும் கொட்டகை போலும். கொட்டகைக்காகப் புதைத்திருந்த மூங்கில் மரம் ஒன்று நெடிதுயர்ந்து மேல் மச்சு வரையில் வந்திருந்தது. வந்தியத்தேவன் அதைத் தாவிப் பிடித்துக்கொண்டு சரசரவென்று கீழே இறங்கினான். மீண்டும் சுற்று முற்றும் பார்த்தான். ஒருவரும் இல்லை. மச்சின் மேலே, தான் சற்று முன் நின்ற இடத்தில் கிண் கிணிச் சத்தம் கேட்டது. ஆகா! மணிமேகலை தன்னைத் தேடி வந்தாள் போலும்! பொல்லாத பெண்! இச் சமயம் அவளிடம் அகப்பட்டுக்கொண்டால் நம் பாடு தீர்ந்தது.

முற்றத்தில் திறந்த வெளியை ஒரே ஓட்டமாக ஓடி வந்தியத்தேவன் கடந்தான். மதில் சுவர் ஓரமாக நின்று திரும்பிப் பார்த்தான். மச்சின் மீது ஒரு பெண் உருவம் தெரிந்தது. மணிமேகலையோ, சந்திரமதியோ தெரியவில்லை. யாராயிருந்தாலும் தான் முற்றத்தை ஓடிக்

கடந்ததைப் பார்த்திருக்க வேண்டும். நல்லவேளையாகக் கூச்சல் போடவில்லை. அவள் யாராயிருந்தாலும் நன்றாயிருக்கட்டும்! மகராஜியாயிருக்கட்டும்!

இவ்விதம் மனதிற்குள் வாழ்த்திக்கொண்டே மதில் சுவர் ஓரமாக வந்தியத்தேவன் விரைந்து நடந்தான். மதில் மேல் ஆழ்வார்க்கடியானுடைய முகம் தெரிந்த இடம் வந்துவிட்டது. அங்கே சுவரில் ஏறுவது எப்படி? இவ்வளவு உயரமாயிருக்கிறதே! சுவரில் பிடித்துக்கொள்வதற்கு மேடு பள்ளம் ஒன்றுமேயில்லையே? கடவுளே...! இதோ ஓர் உபாயம்! குரவைக் கூத்துக் கொட்டகைக்காகக் கொணர்ந்த மூங்கிற் கழிகள் சில சற்றுத் தூரத்தில் கிடந்தன. அவை மிஞ்சிப் போனவை போலும்! ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து அந்தக் கழிகளில் ஒன்றை எடுத்து வந்தான். மதிலின் பேரில் சாய்த்து வைத்தான். கழியின் உயரத்துக்கும் மதிலின் உயரத்துக்கும் சரியாக இருந்தது. ஆனால் கழி சுவரில் நிலைத்து நிற்க வேண்டுமே? ஏறும்போது நழுவி விட்டால்? நழுவி விட்டால்? கீழே விழ வேண்டியதுதான்! அதற்காகக் கையைக் கட்டிக்கொண்டு சும்மா இருந்து என்ன பயன்?

கழியை இரண்டொரு தடவை அமுக்கிப் பார்த்துவிட்டு, அதன் வழியாக ஏறத் தொடங்கினான். பாதிச் சுவர் ஏறிய போது கழி நழுவத் தொடங்கியது. 'தொலைந்தோம்! கீழே விழுந்தால் எலும்பு நொறுங்கி விடும்!' என்று எண்ணுவதற்குள், கழி மறுபடியும் உறுதியாக நின்றது. மேலேயிருந்து ஒரு கரம் அதைப் பிடித்துக்கொண்டது போல் தோன்றியது! 'நமக்குப் பைத்தியம் பிடிப்பதுதான் பாக்கி!'' என்று எண்ணிக்கொண்டு வந்தியத்தேவன் மேலே ஏறினான். மதில் சுவரின் மேல் முனையை அவன் பிடித்துக்கொண்டதும் கழி நழுவிக் கீழே விழுந்தது! அது விழுந்த சத்தம் இடி முழக்கம் போல் அவன் காதில் விழுந்தது. நல்லவேளை! கோட்டை வாசலில் ஆரவாரம் இப்போது இன்னும் அதிகமாயிருக்கிறது. ஆகையால் யார் காதிலும் விழுந்திராது! ஆனால், எதிரே அந்தப்புர மேல் மாடத்தில் நின்ற பெண்! அவள் காதில் விழுந்திருக்கும்!

மதில் மேல் தாவி ஏறி நின்றபடி மறுபடி ஒருதடவை வந்தியத்தேவன் அந்தப் பக்கம் திரும்பிப் பார்த்தான். இன்னமும் அப் பெண் அங்கேயே நின்று கொண்டிருந்தாள்!

வந்தியத்தேவனுடைய கிறுக்குக்குணம் அவனை விட்டுப் போகவில்லை! 'போய் வருகிறேன்!' என்று சொல்கிற பாவனையாகக் கையை ஆட்டிவிட்டு, மதிலின் அப்புறத்தில் இறங்கத் தொடங்கினான். இறங்குவதில் அவ்வளவு கஷ்டம் இல்லை. ஏனெனில், மதில் சுவரின் வெளிப்புறம் உட்புறத்தைப் போல் மட்டமாக இல்லை: சில மேடு பள்ளங்கள் இருந்தன. பக்கத்திலிருந்த மரங்களின் கிளைகள் சில சுவரின் மீது மோதி உராய்ந்து கொண்டிருந்தன. அவற்றின் உதவி கொண்டு சரசரவென கீழே இறங்கினான். மணிமேகலையைத் தான் ஏமாற்றி விட்டு வந்தது பற்றி நினைத்த போது அவனுக்குச் சிரிப்பு வந்தது. அந்தச் சிரிப்பின் எதிரொலியைப் போல் இன்னொரு சிரிப்பு எங்கிருந்தோ வந்தது. வந்தியத்தேவனுடைய இரத்தம் அவனுடைய உடம்பில் உறைந்து போயிற்று. கைகள் நடுங்கின. கீழே குதிப்பதற்காகப் பார்த்தான். நாய் ஒன்று அங்கே அவன் மீது பாயக் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். மேலே ஏறுவதைப் பற்றி இனி யோசிப்பதற்கே இல்லை! கீழே குதித்துத்தான் ஆக வேண்டும். குதித்தால், இந்த நாயின் வாயில் ஒரு பிடி சதையையாவது கொடுத்துத் தீர வேண்டும்! சற்று முன் கேட்டது சிரிப்புச் சத்தமா? அல்லது நாய் குரைத்த சத்தமா? பக்கத்தில் யாராவது மறைந்து நின்று நாயை ஏவி விட்டிருப்பார்களா...? மேலே ஏறுவதில் அபாயம் அதிகமா? கீழே குதிப்பதில் அபாயம் அதிகமா? வந்தியத் தேவனுடைய உள்ளம் ஊசலாடியது! அவனுடைய கால்களும், எழும்பி எழும்பிக் குதித்த நாயின் வாயில் அகப்படாமல் இருப்பதற்காக ஊசலாடின!

(தொடரும்)

# ஆடியோவில் அசத்துகிறார் ஐயப்பன்!

இப்போதெல்லாம் எந்த தமிழ் சாட்டிலைட் சானலிலும், இரண்டு நிகழ்ச்சிகளுக்கிடையில் தவறாமல் இடம்பெறுவது ஐயப்பன் ஆடியோ கேசட் விளம்பரங்கள்தான். எஸ்.பி.பி., யேசுதாஸ், சங்கர் மகாதேவன், உன்னிகிருஷ்ணன், புஷ்பவனம் குப்புசாமி, மனோ, மலேஷியா வாசுதேவன் போன்ற பிரபல பாடகர்கள் ஐயப்பன் கேசட்டுக்களுக்காக பாடியிருக்கிறார்கள். எந்த கேசட் கடையருகில் சென்றாலும், ஐயப்பன் பாடல்கள்தான் காதில் விழுகின்றன. இந்த வருடம் மட்டும் முப்பதுக்கும் மேற்பட்ட கேசட்டுக்கள் வெளிவந்திருக்கின்றனவாம். "இது ஒன்றும் புதுமையான திருப்பம் அல்ல" என்கிறார் சிம்பனி நிறுவனத்தின் உரிமையாளர்களில் ஒருவரான ராஜேஷ். புஷ்பவனம் குப்புசாமி, ஸ்ரீஹரி ஆகியோர் பாடல்களை இந்த வருடம் வெளியிட்டிருக்கிறது சிம்பனி நிறுவனம்.




"ஐயப்பன் கேசட்டுக்கள் ஒரு குறிப்பிட்ட சீசனுக்காக தயாரிக்கப்படுபவை. நவம்பர் இறுதியிலிருந்து ஜனவரி முதல் வாரம் வரை உள்ள காலம்தான் ஐயப்ப சீசன். இந்தக் கால இடைவெளியில்தான் விற்பனை உச்சியில் இருக்கும். எனவே தங்கள் கேசட் அதிகமாக விற்க வேண்டுமென்பதற்காகப் பல நிறுவனங்கள் ஏகமாக விளம்பரம் செய்கின்றன. அந்த விளம்பரங்களைப் பார்க்கும்போது ஏதோ பெரிய்ய 'பூம்' ஏற்பட்டு விட்டதாக பலர் நினைக்கிறார்கள். அது உண்மையல்ல. ஒவ்வொரு வருடமும் நிறைய டைட்டில்கள் வந்து கொண்டுதான் இருக்கின்றன. ஐயப்பன் கேசட்டுகள் அதிகபட்சம் 40,000 வரை விற்றால் சூப்பர் ஹிட் என்று சொல்லலாம். தமிழகத்திலிருந்து சபரி மலைக்குப் போகும் பக்தர்களின் எண்ணிக்கை அதிகமானாலும், கேசட்டுக்கள் விற்பனை பிரமிக்கத் தக்கபடி உயரவில்லை என்பதுதான் எங்கள் கணிப்பு!" என்கிறார் ராஜேஷ்.

ஆடி மாதம், மாரியம்மன் பாடல் கேசட்டுகளுக்கு ஏகக் கிராக்கி இருக்குமாம். உன்னிகிருஷ்ணனைப் பாட வைத்து 'ஆஹா... ஓஹோ... ஐயப்பனை' வெளியிட்டிருக்கிற கிதா நிறுவனத்தின் ஸ்ரீநிவாசன், "குறிப்பிட்ட காலத்தை டார்கட் செய்து விற்க வேண்டியிருப்பதால், மக்களிடம் விரைந்து செல்ல சாட்டிலைட் விளம்பரங்களை நாட வேண்டியிருக்கிறது" என்கிறார். "பத்திரிகைகளில் விளம்பரம் கொடுத்தால் கேசட் வெளிவந்திருப்பது மட்டுமே தெரியும். ஆனால் சானல்களில் விளம்பரம் செய்தால், பாடகர் பாடுவதையும் மக்கள் கேட்க முடிகிறதல்லவா? அதன் காரணமாக வாங்குவதைப் பற்றி அவர்களாகவே ஒரு முடிவெடுக்க முடிகிறதே" என்கிறார் ஸ்ரீநிவாசன். சன் தொலைக்காட்சியில் மட்டும் மிகக் குறைவாகவே ஐயப்ப கேசட் விளம்பரங்கள் வருகின்றன. காரணம் கட்டணம்



அதிகம் என்பதுதான்.

'பள்ளிக்கட்டு சபரிமலைக்கு' என்று மறைந்த வீரமணி பாடிய பாடல் மிகவும் பிரசித்தம். அந்த கேசட் பல ஆண்டுகளுக்கு முன்பே ஹெச்.எம்.வி. நிறுவனத்தால் வெளியிடப்பட்டதுதான். இப்போதும் ஆண்டிற்கொருமுறை ஐயப்பன் கேசட்டுகளை வெளியிட்டு வந்தாலும், வீரமணியின், 'பள்ளிக்கட்டு' பாட்டுக்கும் இன்னமும் மவுசு இருக்கிறதாம். சங்கர் மகாதேவனின் 'என்றென்றும் ஐயப்பன்' என்ற கேசட்டை இந்த ஆண்டு இவர்கள் வெளியிட்டிருக்கிறார்கள். 'வராக நதிக்கரை' பாடி பிரபலமான அவரை வைத்து கேசட் வெளியிடலாம் என்று அவரை அணுகினோம். 'நானே பாடணும்னு இருந்தேன். ரொம்ப நல்லதாகப் போயிற்று' என்று ஒப்புக் கொண்டார். கேசட்டும் நன்றாகப் போய்க் கொண்டிருக்கிறது'' என்கிறார்கள் ஹெச்.எம்.வி. நிறுவனத்தார்.




## ஐயப்பன் பாடல்கள் – டாப் 10 – 1999

1. ஆனந்த மயனே – சூப்பர் ரெக்கார்டிங் – **எஸ்.பி. பாலசுப்பிரமணியம்**
2. ஐந்து மலை அழகா – சிம்பனி – **புஷ்பவனம் குப்புசாமி**
3. என்றென்றும் ஐயப்பன் – ஹெச்.எம்.வி. – **சங்கர் மகாதேவன்**
4. ஆஹா... ஓஹோ... ஐயப்பா – **கீதா – உன்னிகிருஷ்ணன்**
5. எல்லாம் எல்லாம் ஐயனே – பி.எம்.ஜி. – **யேசுதாஸ்**
6. ஹரிஹரசுதனே – மெலடி – **'மகாநதி' ஷோபனா**
7. குருவடி – திருவடி – மேதா – **வீரமணிதாசன்**
8. இருமுடி கண்ட – ராஜ் – **உன்னிமேனன்**
9. சபரி – ராம்ஜி – **ஸ்ரீஹரன்**
10. மணிகண்டசாமி – எம்.டி.எஸ். – **மனோ, மலேஷியா வாசுதேவன்.**









ஐயப்ப பக்தர்கள் கேசட்டை எந்த அளவு கோல் கொண்டு வாங்குகிறார்கள்? ''கேசட்டை கேட்டுப் பார்த்து வாங்குவது தவிர, பாடகர்கள், இசை அமைத்தவர்கள், வெளியிட்டிருக்கும் நிறுவனம் ஆகியவற்றையும் பார்த்துத்தான் வாங்குகிறார்கள்'' என்கிறார் நங்கநல்லூர் ஆஞ்சநேயர் கோயில் அருகே கேசட் விற்கும் கணபதி. ''இந்த கேசட்டுகள் எங்களுக்கு மிகவும் உதவியாக இருக்கின்றன. தினமும் இந்த கேசட்டுகளை போட்டுவிட்டு , ஐயப்பனை வணங்கும் போது, பெரிய பக்தர்கள் கூட்டத்தின் 'சரண கோஷம்' காதில் விழும் பிரமிப்பு ஏற்படுகிறது'' என்று நெகிழ்ந்து சொல்கிறார் ஐயப்ப பக்தரான மணி.

— **ஸ்ரீநிவாசன்**

ஸ்ரீ அஹோபிலம் ஸ்ரீலக்ஷ்மி நவ நாயகனாக சேவை சாதிக்கும் க்ஷேத்திரம். இத் திருத்தலம் அஹோபில மடத்தின் முதல் ஜீயர் ஸ்வாமிகளுக்கு பகவான் யோகியாக காட்சியளித்த இடம் மட்டுமல்லாது; கருடனது விண்ணப்பத்தை ஏற்று ஸ்ரீமந் நாராயணன் மீண்டும் ந்ருஸிம்ஹ அவதாரத்தை அவர் கண்முன் நிறுத்தியத் தலம். இந்த இடத்தில்தான் **ஸ்ரீஸ்ரீஸ்ரீ V.V. ஸ்ரீதர் குருஜி** அவர்கள் மகா யக்ஞம் நடத்தப் போவதை ஏற்கெனவே அறிவித்தோம். இந்த யக்ஞம் கடந்த நவம்பர் 17, 18, 19, 20ந் தேதிகளில் விமரிசையாக நிறைவேறியது. அது பற்றிய ஓர் கண்ணோட்டத்தை ஈண்டு காண்போம்.

# அஹோபிலத்தில் ஸ்ரீ ஸுதர்சன

17ந் தேதியன்றே பக்தர்கள் பெருந் திரளாக அஹோபிலம் வந்தடைந்தனர். அன்று வேத பாராயணத்துடன் கணபதி ஹோமமும், மந்த்ர ஜபமும் மஹா சங்கல்பமும் நடைபெற்றது. இவற்றை வேத விற்பன்னர்களான ஸ்ரீகணபதி சாஸ்திரிகளும், மதுரை ஸ்ரீ ஜெயராம சர்மாவும் முன்னின்று நடத்தினர்.

பதினெட்டாம் தேதியன்று காலை, ஸ்ரீ ஜ்வால ந்ருஸிம்ஹ ஸ்வாமி சன்னிதியில் **குருஜி** தனது 42வது யாகத்தைத் தொடங்கினார். காலை சுமார் 8 மணியளவில் துவங்கி, மாலை 6 மணிக்கு இவ் யாகம் இனிதே முடிவுற்றது. ஜ்வால ந்ருஸிம்ஹ ஸ்வாமி கோயிலுக்குச் செல்லும் பாதை மிகக் கடினமானது. இதையும் மீறி அங்கு நூற்றுக்கணக்கான பக்தர்கள் கூடி யாகத்தைக் கண்டு களித்தனர்.

"அழைத்தால் உடனே வருவான் ந்ருஸிம்ஹன்" என்று **குருஜி** அவர்கள் கூறியபொழுது, பக்தர்களில் ஒருவருக்கு ந்ருஸிம்ஹ கடாக்ஷம் பெற்று உணர்ச்சி வயப்பட்டது குறிப்பிடத்தக்கது. வழக்கம் போல் சாயா **அதர்வண** வேதத்தின் பல சுத்தியங்களை **குருஜி** பாடியபடி ப்ரயோகம் செய்தபொழுது, பக்தர்கள் பக்திப் பரவசத்தில் அவருடன் சேர்ந்து பாடவும் 'அம்ருத கானம்' மலைகளில் எதிரொலித்தது.

அடுத்தநாள், மாலை 3 மணியளவில் **ஸ்ரீ குருஜி** அவர்கள் ஸ்ரீ மாலோல ந்ருஸிம்ஹ சன்னிதிக்கு எதிரில் தனது 43வது யக்ஞத்தைத் தொடங்கினார். அவர் ஆராதிக்கும் பல்வேறு விக்ரஹ மூர்த்திகள் மாலோல சன்னிதியில் பூஜையின்பொழுது வைக்கப்பட்டிருந்தது காணற்பாலது. ஸ்ரீ மஹா கணபதி, ஸ்வர்ண ஆகர்ஷண பைரவர், ஸ்ரீ ஸுதர்சனர், ஸ்ரீ ஜ்வால ந்ருஸிம்ஹர், ஸ்ரீராதா கிருஷ்ணர், ஹரிஹரபுத்ரன் ஐயப்பன் மற்றும் பல்வேறு பெரிய விக்ரகங்களையும், உலோக அஸ்த்ரங்களையும் தொண்டர்களும், மற்றவர்களும் மலைக்குத் தூக்கிச் சென்ற காட்சி கண் கொள்ளாக் காட்சியாகும். மதுரை அடுத்த ராஜபாளையத்திலிருந்து வந்திருந்த குழுவினர் மும்மூர்த்திகளான ப்ரம்ஹா, விஷ்ணு, சிவனையும் ஜ்வாலா ந்ருஸிம்மனையும் வாழைத் தண்டுகளையும், சந்தனத்தையும் கொண்டு செய்திருந்த அலங்காரத் தோற்றம் அனைவரது கவனத்தையும் ஈர்ப்பதாயிருந்தது. அவர்களுடன் வந்திருந்த நாதஸ்வர கோஷ்டியின் வாசிப்பு அற்புத மெருகு தந்தது. அன்று இரவு 2 மணி வரை தொடர்ந்த யக்ஞம் அஸ்த்ர ப்ரயோகத்துடன் நிறைவுற்றது. இந்த அஸ்த்ர ப்ரயோகத்தில் முதன்முறையாக பெண்களும் கலந்து கொள்ள அனுமதிக்கப்பட்டார்கள். அஸ்த்ர ப்ரயோகமென்பது வாழ்வில் நம்மைப் பிடித்திருக்கும் பிணி தடைகள், மற்றும் தீய சக்திகளை விலக்கவே என்பது குறிப்பிடத்தக்கது.

முன்னதாக 228 ஸ்வர்ண ஆகர்ஷண தீபங்கள் பக்தர்களின் பொருளாதார



• ஸ்ரீதர் குருஜி அவர்கள்

மேன்மை குறித்து ஏற்றப்பட்டது. மலையே ஜகத்ஜோதியாக காட்சியளித்தது.

உடல் நலம் வேண்டி தன்வந்த்ரி ப்ரயோகம் செய்யும் சமயத்தில் யாக குண்டத்தில் வேயப்பட்டது குறிப்பிடத்தக்கது. காலை யாகம் முடியும் தருவாயில் யாக குண்டத்தில் ஆவிர்பவித்த ஜ்வால ந்ருஸிம்ஹனுக்கு அபிஷேகம் செய்யுமாப்போல வருண பகவான் தொடர்ந்து வருஷித்தும் சற்றும் தளராது கொட்டும் மழையில் **குருஜி** அவர்கள் யாகத்தைப் பூர்த்தி செய்தார். இந்த யாகத்தில் 11 அடி ஆழம் கொண்ட ஓர் பெரிய குண்டமும், சங்கும் மற்றும் சக்ர வடிவில் இரண்டு சிறிய குண்டங்களும் அமைக்கப்பட்டிருந்தன.

''செல்ல வொண்ணா சிங்கவேள் குன்றம்'' என்று சென்று சேவிக்கவே சிரமப்படும் ஸ்ரீஅஹோபிலத்தில், ஸ்ரீ லக்ஷ்மி ந்ருசிம்மன் க்ருபையால் மாபெரும் இவ்யக்ஞம் சதுர்வேத பாராயணத்துடனும் திவ்யப்ரபந்த சேவையுடனும் சிறப்பாக நடந்தேறியது. வந்திருந்த அனைவருக்கும் நான்கு நாட்களும் இரவு பகல் என்று பாராது வேளை தவறினாலும், செய்வது தவறாது நாராயண சேவை (அன்னதானம்) நடைபெற்றது கவனிக்கப்பாலது. யாகம்

# ந்ருஸிம்ஹ தன்வந்த்ரி மஹா யக்ஞம்

20ந் தேதி காலை தொடங்கிய ஸ்ரீ **ஸுதர்சன ந்ருஸிம்ஹ தன்வந்த்ரி மஹா யக்ஞம்** 21ந் தேதி காலை 7 மணி வரை ஸ்ரீ மாலோ ந்ருஸிம்ஹ சன்னிதிக்கருகில் நடைபெற்றது. அனைத்து மக்களும் சுபமாக வாழ வேண்டும் என்ற ப்ரார்த்தனை செய்யப்பட்டது. அனைத்து மக்களும் யாகத்தில் பங்கு பெறவும் அனுமதிக்கப்பட்டனர். பெண்களும் பங்கேற்றனர். **குருஜியின்** சொற்பொழிவினையும், கத்யங்களையும் இரவு முழுதும் மக்கள் விழித்திருந்து கேட்டனர். பல்வேறு ஹோமத் திரவியங்களும் ஒஷதிகளும் பக்தர்களின் நிறைவுற்று அனைவரும் திரும்பும் சமயம் ஒரு பெரிய விழா நடந்து முடிந்தது போன்று மனநிறைவுடன் பக்தர்கள் இல்லம் திரும்பினர்.

யக்ஞ ப்ரசாதங்கள் விரைவில் பக்தர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.



# உயிர்களைத் 15

கிளைடரைக் கண்டுபிடித்து விட்டேன் என்று கோபக்ஸ் சொன்னதும் அவளுக்கு வார்த்தை வரவில்லை. சந்தோஷ மிகுதியில் ஜிவ்வென்று உடல் பூரிக்க கண்ணீர் வந்து விட்டது.

"என் ரஷ்ஷூ.... ரஷ்ஷூ?"

''எங்கு தேடியும் ரஷ்ஷூ கிடைக்க வில்லை. கிளைடர் மட்டும் அனாதையாய் நின்றிருந்தது. எனக்கென்னவோ...''

"நினைப்பதைச் சொல். சரி அது எந்த இடம்? கதகதப்பான குகைகள் என்றாயே, அந்தப் பகுதியா?"

"எஸ்! நிக்ஸ் ஒலிம்பிகாவிலிருந்து சுமார் நாற்பது கிலோ மீட்டர் தூரத்தில்."

"கோபக்ஸ்! நிச்சயம் ரஷ்ஷூ இருப்பான். அங்கேயே இரு. நானும் வருகிறேன்."

''இருங்கள் சூர்யா! அவசரப்பட்டு வெளியில் வந்து விடாதீர்கள். கதவுகளை உள் பக்கம் பூட்டி விடுங்கள். நான் வரும் போது மாஸ்டர் கீயில் திறந்து கொள்கிறேன். எதற்கும் கதவைத் திறக்காதே.''

"ஏன்... ஏன் கோபக்ஸ்?" – அவள் குரலில் நடுக்கம் தொற்றிக் கொண்டது.

"சூர்யா! இங்கு ஏதோ ஜீவராசிகள் இருக்கின்றன. நீதான் ஆரம்பத்திலிருந்தே நம்பவில்லை. அவைகள் தாம் ரஷ்ஷூவை என்னவோ செய்து விட்டன என்று தெரிகிறது. கிளைடரில் அவன் உட்காரும் சீட்டில், பக்கங்களில் எல்லாம் ஒரே ரத்தம் உறைந்து கிடக்கிறது.

"ஓ! கோபக்ஸ்! நீயாவது சீக்கிரம் ஓடி வந்து விடு. அங்கே நிற்காதே. நீயும் என்னைத் தனியாக விட்டு விட்டுப் போய் விடாதே. ஓடி வந்து விடு. எனக்குப் பயமாக இருக்கிறது" – சூர்யாவுக்கு காது அடைக்க, கண்களில் பூச்சி பறந்தது.

"கோபக்ஸ்! எனக்கு மயக்கம் வருகிறது. லைனை கட் பண்ணிடறேன்."

"பயப்படாதீர்கள். இதோ சீக்கிரம் வந்து விடுகிறேன். கிளைடரை கிளப்புவதற்குத் தான் முயற்சி செய்து கொண்டிருக்கிறேன். பீ... அலர்ட்! லேசர் கன் கையிலிருக்கட்டும். அந்த உயிரினங்கள் அங்கும் வரலாம்."

தள்ளாடிக் கொண்டே ஓடிப் போய் கதவைப் பூட்டி விட்டு வந்து உட்கார்ந்தாள். கண்கள் இருட்டிக் கொண்டு வந்தன. இத்தனை நாட்களாய் இந்த ஜீவராசிகள்



# தேடித் தேடி...

**செய்யாறு தி. தா. நாராயணன்**

எங்கிருந்தன? தன்னந்தனியாய் நாள் முழுக்க எங்கெங்கெல்லாமோ சுற்றியலைந்திருக்கின்றேனே. அப்போதெல்லாம் இல்லாத உயிரினம் இப்போது மட்டும் எப்படி?

ஒருவேளை துருவப் பகுதிகளிலிருந்து இடம்பெயர்ந்து இப்போதுதான் கூட்டம் கூட்டமாய் வந்திருக்கலாமோ? என்ன உருவத்திலிருக்கும்? ஐக்யூ எத்தனை இருக்கும்? எப்படிப் பார்த்தாலும் இந்தக் கிரகத்தில் இது உயிரினங்கள் தோன்ற ஆரம்பிக்கும் காலம் - டினோசார் காலம் போல. தரையில் படர்ந்து கிடக்கும் பாசி கூட செடி போல் கிளைத்திருக்கிறது. அத்தனை வளம். அதே போல் அசுர வளர்ச்சியுள்ள, மூளையில்லாத, மூர்க்கத்தனம் நிரம்பிய மிருகமாகத்தான் இருக்க வேண்டும்!

கோபக்ஸுக்காக காத்திருக்க ஆரம்பித்தாள். வெளியே சூறாவளியாய்க் காற்று சுழன்றடித்தது. செம்மண் புழுதிப் படலம். இங்கிருந்தே ஜன்னல் தடுப்பு வழியே பார்க்க முடிந்த. அமைதியின்றிச் சிறிது நேரம் குறுக்கும் நெடுக்கும் நடந்து பார்த்தாள். கோபக்ஸ் வரவில்லை. ஜன்னல் பக்கம் உட்கார்ந்து தயாராய் லேசர் கன்னைத் தூக்கி வைத்துக் கொண்டாள்.

வா! என் தம்பியைக் கொன்ற ஜீவராசியே வா! இரண்டிலொன்று! நான் உங்களை அழித்து விடுகிறேன். அல்லது அழிந்து போகிறேன்.

**வி**டியத் தொடங்கி கிழக்கே அடிவானம் சிவக்கத் தொடங்கியது. கோபக்ஸ் வரவேயில்லை. வயர்லெஸ்ஸில் தொடர்பு கொள்ள என்ன முயற்சி செய்தும் பலனில்லை. அன்று மதியத்திற்கு மேல் அவளுக்குப் புரிந்து விட்டது. கோபக்ஸ்

இனி வராது.

"ஐயோ கோபக்ஸ்! கடைசியில் நீயும் என்னைக் கைவிட்டு விட்டாயா? இந்த உலகத்தில் என்னை மட்டும் தனியாக விட்டு விட்டு நீங்களிருவரும் போய் விட்டீர்களா?"

அப்படியே வெலவெலத்து உட்கார்ந்து விட்டான். வாழ்க்கையின் கடைசி கட்டத்தை நெருங்கி விட்டதாய்ப்பட்டது. அவ்வளவுதான். இனி கொஞ்சம் கொஞ்சமாகச் சித்ரவதைப்பட்டுச் சாவதை விட, சாவை நாமே தேடிச் சென்று விடுவதே நல்லது. பட்டென்று முடிந்து விடும். கோபக்ஸுக்கும் என்னவோ ஆகி விட்டது. இரண்டே எட்டில் எக்ஸிட் கதவைத் திறந்து வெறி பிடித்தவனைப் போல ஓடினான். இன்னும் சூறாவளிக் காற்று ஆக்ரோஷமாய் வீசிக் கொண்டிருந்தது. எதிரில் ஒன்றையும் பார்க்க முடியாத அடர்த்தியில் புழுதிப் புயல். காற்று அவனை இழுத்தது. சூர்யா ஓடி அந்தச் சமவெளியின் மையப் பகுதியில் போய் நின்று சத்தம் போட்டுக் கத்தினான்:

"ஓ... ஓ... செவ்வாய் ஜீவராசியே வா... வா! வந்து என் தம்பியைப் போல என்னையும் எடுத்துக் கொள். வா... வா!" – கத்தி விட்டு ரியாக்ஷனை எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

ஊஹூம். எதுவும் நடக்கவில்லை. நறநற வென்று செம்மண் புழுதி வாரி சடேர் சடேரென்று முகத்தில் அறைந்து கொண்டிருந்தது. காற்றின் வேகம் இப்போது உச்ச கட்டத்திலிருந்தது. புழுதி அடிக்கும் வலி பொறுக்க முடியாமல் ராக்கெட்டை நோக்கி ஓட யத்தனித்துத் திரும்பி எகிறிய அந்த நொடி, தரையிலிருந்து நாலடி உயரத்திற்கு அவன் உடம்பு மேலே போக, பிடிமானம் விட்டுப் போய், உடனே காற்று அவனை இழுத்துக் கொண்டது.

"ஓ... ஓ... ஓ... ஆ...!" – அவன் உடல் மேலே கிளம்பி ஒரு பத்து முறை மேலும் கீழும் தட்டாமாலை சுற்றியது. காற்று போகும் திசையெல்லாம் அவனை இழுத்துக் கொண்டு சென்று, அலைக்கழித்து, எதிர்ப்பட்ட ஒரு குன்றின் மேல் வீசியடிக்க, அவன் சொத்தென்று விழுந்தான். நினைவு தவறிப் போனது. அவனைச் சுற்றி ரத்தக் குளமாய்த் தேங்க மெல்லியதாய் மூச்சு மட்டும் ஓடிக் கொண்டிருந்தது.

மீண்டும் சூர்யாவுக்கு லேசாய் நினைவு திரும்பியபோது இருட்ட ஆரம்பித்திருந்தது. அடிவானத்தில் குளிர்ச்சியாய் டைமோஸ் நிலவு உதயமாகியிருந்தது. எழுந்தான். உடல்

முழுக்க இரண்டங்குல கனத்திற்கு செம் மண். மெதுவாய்க் கொஞ்சம் கொஞ்ச மாய்த் தட்டி அகற்றிவிட்டு நிமிர, உடல் முழுக்க வலி. தலை, புறங்கை, கால்கள், எங்கும் சிராய்ப்புகளும் ஆழமான வெட் டுக் காயங்களுமாக இருந்தன.

எங்கே இருக்கிறோம் என்று அனு மானிக்க முடியவில்லை. இப்போது புயல் ஓய்ந்து விட்டிருக்க, மெல்லிய தாய்க் குளிர் காற்று வீசிக் கொண்டி ருந்தது. மெதுவாய் அங்குமிங்கும் அலைந்ததில் ஓரளவுக்கு திக்கு திசை புரிந்தது. இங்கிருந்து வடக்கே இரண்டு கிலோ மீட்டர் தூரத் தில்தான் ராக்கெட் நிற்கிறது. நடக்க ஆரம் பித்தாள்.

அரை மணி நேரம் நடந்திருப்பாள். தூரத் தில் ராக்கெட் தெரிந் தது.

அதை நெருங்கிய போது கதவுகள் விரி யத் திறந்து கிடக்க, உள்ளே விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

திக்கென்று பயம் சூழ்ந்தது. ஒருவேளை கோபக்ஸ் வந்து விட்டி ருக்குமா? இல்லை கோபக்ஸ் எப்போதும் இப்படி கதவை அலட்சியமாகத் திறந்து வைக்காது. அதற்கு எப்போதும் கதவு மூடியிருக்க வேண்டும். ஒருவேளை செவ்வாய கிரக உயிரினங்கள் கும்பலாய் உள்ளே நுழைந்து விட்டதா? கையில் லேசர் கன் கூட இல்லை.

சே! சாகத் துணிந்த பிறகு எதற்கு பயம்? இப்போது பயமின்றி விடுவிடு வென்று கிட்டே போக, ராக்கெட்டின் தெற்குப் பக்கத்தில் சற்றுத் தள்ளியிருந்த குன்றின் மறைவில் கிளைடர் விமானம் நின்று கொண்டிருந்தது. ஜிவ்வென்று சந்தோஷம் பீறிட ஓடினாள்.

''கோபக்ஸ்! கோபக்ஸ்!'' – அவள் கத் திக் கொண்டு ஓடினாள்.

இரண்டாவது சேம்பரிலிருந்து கோபக்ஸ் அப்போதுதான் வந்து கொண்டிருந்தது.

'உஷ்!' – வாயின் மேல் விரலை

## அங்கே பட்டம்; இங்கே பண முடிப்பு!

தனது எழுபத்து மூன்றாவது ஆண்டு இசை விழாவில் எழுபது வயதுக்காரரான டி.கே. கோவிந்தராவுக்கு 'சங்கீத கலாநிதி' பட்டமளிக்கிறது மியூசிக் அகாடமி.

'இதை இதை... இதைத்தான் நாங்க எதிர்பார்த்தோம்' என்கிறார்கள் கோவிந்தராவின் சிஷ்யைகளான பம்பாய் சகோதரிகள் சரோஜா, லலிதா. ''எங்கள் குருவின் குருவுக்கு நூற்றாண்டு (முசிறி சுப்ரமண்ய அய்யர்) இது என்பதால் அகாடமியின் இந்த கௌரவம் இவ்வாண்டு கிடைக்கும் என எதிர்பார்த்தோம். இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் அவருக்குப் பாராட்டு விழா எடுக்க முடிவு செய்தோம்.''



• செம்மங்குடி, பாம்பே சகோதரிகளுடன் டி.கே.ஜி

இசை விழாவுக்கெல்லாம் கட்டியம் சொல்வது போல் நவம்பரிலேயே விழாவை நடத்தி விட்டார்கள். குல்லாவுடன் வந்த செம்மங்குடி பிரதம பேச்சாளர்.

டி.கே. கோவிந்தராவ் ஆங்கிலத்தில் இசை நூல்கள் வெளியிட்டிருப்பவர். அன்று தமக்கு பம்பாய் சகோதரிகள் அளித்த ஒரு லட்சம் ரூபாய் பண முடிப்பையும் புத்தக வெளியீட்டுக்கே பயன்படுத்தப் போவதாகச் சொன்னார் ஏற்புரையில்.

மரணப் படுக்கையில் குரு முசிறி தம்மிடம் பெற்ற வாக்குறுதி பற்றியும் சொன்னார்: 'பட்டம் பதவிகளைத் தேடிப் போக வேண்டாம். பாடுவதுதான் உன் வாழ்க்கை; வேறு எதையும் நாடாதே' என்றாராம். அதன்படியே தாம் வாழ்ந்து வருவதாகவும் குறிப்பிட்டு, இவ்விஷயம் குறித்து 'சுருதி' சேராமல் எழுதியவர்களுக்கு மறைமுகமாக பதில் சொன்னார்.

முப்பத்தெட்டு ஆண்டுகளாக டி.கே.ஜியிடம் பயின்று வரும் சகோதரிகள், தாங்களும் 'இசைக்காக மட்டுமே இசை' என்ற கொள்கையில் உறுதியாயிருப்பதாகச் சொல்கிறார்கள்.

– டி.கே.சித்ரா



"பாகவதர் பாடறது என்ன ராகம்?"

"எந்த ராகமாயிருந்தால் என்னங்க. இதுக்குப் போய் என் தூக்கத்தைக் கலைக்கணுமா?"



"சபாவுக்கு வந்து சளசளன்னு பேசிக்கிட்டிருக்கிறவங்களை எனக்கு சுத்தமா பிடிக்காது!"

"ஏன்?"

"வந்தோமா, தூங்கினோமான்னு இல்லாம என்ன பேச்சு வேண்டிக் கிடக்கு?"



"நேற்று கச்சேரியைக் கேட்டுக்கிட்டிருந்தப்போ 'ஷாக்' அடிச்ச மாதிரி ஆயிடுச்சு!"

"ஏன்?"

"பாகவதர் திடீர்னு 'மின்சாரக் கண்ணா' பாடலைப் பாட ஆரம்பிச்சுட்டார்!"

— ஞா. ஞானமுத்து

வைத்து எச்சரித்தது.

"அப்படியென்றால் உள்ளே... உள்ளே... யார்? என் ரஷ்ஷுவா? கிடைச்சிட்டானா?" - உள்ளே ஓட யத்தனித்தாள்.

கோபக்ஸ் விடவில்லை. வாசலை அடைத்துக் கொண்டு நின்றது.

"உள்ளே போகக் கூடாது சூர்யா! இன்னும் சில நாட்கள் பொறுத்துக் கொள்ளுங்கள். ரஷ்ஷு அபாய கட்டத்திலிருக்கிறார். இங்கிருந்தே பார்த்துக் கொள்" - பார்த்தாள். உடல் கறுத்துப் போய், உதடுகள், கன்னங்களெல்லாம் பாளம் பாளமாய் வெடித்து, அதன் வழியே ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. முதுகு, புட்டம், பின்னங்கால்கள் எல்லாம் கூட வெடித்துப் போய் ரத்தம் அங்கங்கே உறைந்திருந்தது. உடல் முழுக்க சிறிதும் பெரிதுமாய் கொப்புளங்கள். பலவீனமாய் மூச்சு ஓடிக் கொண்டிருந்தது. சூர்யா அவனைப் பார்த்து விட்டு முகத்திலறைந்து கொண்டு ஓவென்று அழுதாள்.

"ரஷ்ஷுவுக்கு என்னாச்சு கோபக்ஸ்? ரஷ்ஷு... ரஷ்...ஷு" - வேகமாய் அவன் கிட்டே நெருங்க, கோபக்ஸ் அதட்டியது.

"நான் தடுப்பதற்குக் காரணமிருக்கிறது சூர்யா! டெம்ப்ரேச்சர் 108°F. கொஞ்சமும் நினைவு இல்லை. நான்கு நாட்களாய் மயங்கிய நிலையில் உணவு, தண்ணீரின்றி சிவியர் டீ ஹைட்ரேஷன். இரண்டு முறை வலிப்பு வந்து விட்டது. ஏதோ இன்ஃபெக்ஷன். இக் கிரகத்திலுள்ள பாக்டீரியாவோ, வைரஸ்ஸோ தெரியவில்லை. ஆராய வேண்டும். உனக்கும் தொற்றிக் கொள்ளும் அபாயமிருக்கிறது. கிட்டே வர வேண்டாம். நான் தவறு செய்து விட்டேன். மிஸ்டர் தாமு பலமுறை என்னிடம் உத்தரவிட்டிருந்தார். ஒன்றுமில்லையென்று உறுதியாய்த் தெரிந்தால் கூட கவச உடையின்றி உங்களை வெளியே அனுப்பக் கூடாது என்று. தவறு செய்து விட்டேன்."

"உன் யூகம் தவறு கோபக்ஸ்! இன்ஃபெக்ஷன் என்றால் எனக்கு மட்டும் ஏன் வரவில்லை?"

"யோசிக்கணும். நான் நிறைய யோசிக்கணும். இன்றைக்குப் பொறுத்துக் கொள் சூர்யா! அப்புறம் பார்க்கலாம்" - வலுக்கட்டாயமாக அவளைக் கிழ் சேம்பருக்கு சற்றேறக்குறைய இழுத்துக் கொண்டு வந்து தள்ளி விட்டு கதவை மூடிக் கொண்டது.

"யூ... யூ...! ரகசியம். ரகசியம். எல்லாம் உங்களுக்கு ரகசியம்" - கதவை எட்டி உதைத்தாள்.

(தொடரும்)

M80 MAJOR

**ப்ரியா விஷன்** (போன்: 4997555)
( Radio FM people 8 a.m to 9 a.m.). சென்னை - 600 004.
அளிக்கும்




**இடம்: காமராஜர் அரங்கம்,**
**தேனாம்பேட்டை, சென்னை - 18.**

**இந்த நூற்றாண்டின் இனிய இசைக்கச்சேரி**

| | |
|---|---|
| **17.12.99**<br>வெள்ளிக்கிழமை<br>மாலை 6.30 மணி | **பத்மவிபூஷன்**<br>**Dr. M. பாலமுரளிகிருஷ்ணா & பார்ட்டி** |

**இந்த நூற்றாண்டின் இணையற்ற பின்னணிப் பாடகர்**

| | |
|---|---|
| **18.12.99**<br>சனிக்கிழமை<br>மாலை 6.30 மணி | **பாடும் நிலா SPB பாடும்**<br>*"மறக்க முடியுமா"* **கங்கை அமரன்** இசையில்<br>மறக்கமுடியாத இந்த நூற்றாண்டின் பாடல்கள் |
| **19.12.99**<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 6.30 மணி | இந்த நூற்றாண்டின் இணையற்ற நிகழ்ச்சி,<br>நீண்ட இடைவெளிக்கு பிறகு சென்னையில்<br>**ஸ்ரீ ஹரிஹரன்** வழங்கும்<br>**"கஜல்"** ("Ghazals") |
| **20.12.99**<br>திங்கட்கிழமை<br>மாலை 6.30 மணி | **ஸ்ரீ P.உன்னிகிருஷ்ணன் & பார்ட்டி**<br>வழங்கும்<br>கர்நாடக இசை |
| **21.12.99**<br>செவ்வாய்க்கிழமை<br>மாலை 6.30 மணி | திருமதி **நித்யஸ்ரீ மகாதேவன்**<br>வழங்கும்<br>கர்நாடக இசை |
| **22.12.99**<br>புதன்கிழமை<br>மாலை 6.30 மணி | நாதப்பிரும்மம் **ஸ்ரீ குன்னக்குடி வைத்தியநாதன்**<br>வழங்கும்<br>வயலின் இசை |

**இவை தவிர மேலும் 39 இனிய நிகழ்ச்சிகள்.**

டிக்கட்டுகள் தினசரி காலை 9 மணி முதல் அரங்கில் கிடைக்கும் **போன் : 4349040**

**சீசன் டிக்கட்டுகள், உயர்ந்த வகுப்பு டிக்கட்டுகள் வீடு தேடி வரும்**

**அணுகவும் : 98410 - 32423 (அ) 39911**

சீசன் டிக்கட்டு மற்றும் தினமும் முதல் 50 முதல் வகுப்பு டிக்கட்டுகள் வாங்கும் ரசிகர்களுக்கு K. ஹரிஹரன் S/o. ஜோதிடமன்னன் Late K.S. கிருஷ்ணமூர்த்தி

உங்களின் 2000 ஆண்டு பலன்களை **இலவசமாக** கூறுவார்.

bajaj auto ltd.



# தாஜ்மகாலை மறைய வைக்க ஆசை!

**மேஜிக் நிபுணர் கே. லால்**

ஜப்பானியருக்கு ஜப்பானில் கிடைத்த அமோக வரவேற்பு பற்றி எங்கள் ஸ்பான்சர் எங்களிடம் பேசிக் கொண்டிருந்தபோது, பேச்சோடு பேச்சாக, "மிஸ்டர் லால்! உங்களுக்கு எவ்வளவு வயது?" என்று கேட்டார். நான் 'அறுபதைக் கடந்த கிழவன்' என்று சொல்ல, 'உங்கள் முகத்தில் முதுமை ரேகை மிக அதிகமாகவே தெரிகிறது. ஏன் நீங்கள் முகத்துக்கு பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொள்ளக் கூடாது? நீங்கள் மட்டும் பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொண்டீர்கள் என்றால், உங்களது இளமையான முகப் பொலிவுக்கு நான் கியாரண்டி' என்றார். கூடவே ஜப்பானில் மிகத் திறமையான பிளாஸ்டிக் சர்ஜன்கள் இருப்பதாகவும், ஆபரேஷனுக்கு ஒன்றரை லட்சம் ரூபாய் வரை செலவாகும் என்ற தகவலையும் சொன்னார். (இது நடந்து பத்துப் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலாகி விட்டது)

எனக்கும் பிளாஸ்டிக் சர்ஜரி மூலமாக முகத்துக்கு இளமையூட்டிக் கொள்ளலாமா என்று ஒரு சபலம். ஆனால் ஒன்றரை லட்சம் செலவாகுமே என்ற தயக்கம். ஊருக்கு வந்து விட்டேன். இங்கே வந்தபின், அப்போது புகழ்பெற்று விளங்கிய, ஆனால் முதுமையடைந்து விட்ட தேவ் ஆனந்த், திலீப் குமார் போன்ற சினிமா நட்சத்திரங்கள் பிளாஸ்டிக் சர்ஜரி மூலம் இளமையூட்டிக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டேன். மறுபடியும் எனக்கு சபலம். செலவு பற்றின தயக்கம். என் குடும்ப டாக்டரைக் கலந்து ஆலோசித்தேன். அதிக செலவு இல்லாமல், இங்கேயே பிளாஸ்டிக் சர்ஜரி செய்து கொள்ள வழி இருக்கிறதா என்று விசாரித்தேன். அவர் தமது டாக்டர் நண்பர்களைக் கலந்து ஆலோசனை செய்து விட்டு, எனக்குச் சொல்லுவதாகக் கூறினார்.

சில நாட்களிலேயே தமது நண்பர் ஒருவரது ஆலோசனைப்படி, ஒரு பிளாஸ்டிக் சர்ஜனை ஏற்பாடு செய்து விட்டதாகக் கூறினார். ஆபரேஷனுக்கு நாள் குறிக்கப்பட்டது. இந்த விஷயம் கொஞ்சம் ரகசியமாகவே இருக்கட்டும் என்று முடிவு செய்தேன்.

குறிப்பிட்ட தினத்தில், ஆஸ்பத்திரிக்குப் போனேன். விதி தன் கொடூர விளையாட்டை விளையாடக் காத்திருப்பதை நான் உணரவில்லை. முக ஆபரேஷன் செய்யப் போகிற டாக்டர் எனக்கு நன்கு பரிச்சயமில்லாதவர் என்பதால், என்

# மந்திரப் புன்னகை - 19



தெளிந்து எழுந்தபோது, கண்களைத் திறக்கவே சிரமமாக இருந்தது. வாய் திறந்து பேச முடியவில்லை. நான் அரைகுறையாக என் மனைவியைப் பார்க்க, அவள் அழ ஆரம்பித்துவிட்டாள். பக்கத்தில் இருந்த குடும்ப டாக்டரோ பேயறைந்தாற்போல் வெற்றுப் பார்வை பார்த்துக் கொண்டிருந்தார். காரணம் இதுதான். அறுவைச் சிகிச்சை என்கிற பெயரில் அந்த டாக்டர், என் முகத்தில் விளையாடி விட்டார். என் கண்கள் ஒரு பக்கமாகப் போய் விட்டன. என் வாய் மிகவும் கோரமான முறையில் கோணலாகி விட்டது. ஏறத்தாழ, பக்கவாத நோயால் பாதிக்கப்பட்டவரின் முகம் போல என் முகம் ஆகி விட்டிருந்தது.

பின்னர் நான் கேள்விப்பட்ட செய்தி என்னை அதிர்ச்சிக்குள்ளாக்கியது. முக ஆபரேஷனின் போது, ஏகமாக ரத்தம் வீணாகிவிட, எனக்கு ரத்தம் கொடுத்திருக்கிறார்கள். அதுமட்டுமா? எனக்கு முக சர்ஜரி செய்தவர் ஒரு சாதாரண சர்ஜன்தான். அவருக்கு பிளாஸ்டிக் சர்ஜரி செய்த முன் அனுபவமே கிடையாது. சர்ஜரி செய்து கொள்ள வேண்டும். அதே நேரம் அதிக செலவு ஆகக் கூடாது என்ற என் எண்ணம் காரணமாகத்தான் இப்படி ஆகிவிட்டது. என் குடும்ப டாக்டரின் நண்பர் ஒருவரது நண்பர் அந்த சர்ஜன். அவர் ஒரு கத்துக்குட்டி என்பது என் குடும்ப டாக்டருக்கே தெரியாமல் போய்விட்டது. இந்த (விதி) விளையாட்டுக்கு நான் கொடுத்த விலை ஐம்பதாயிரம் ரூபாய்!

என் மனைவி, இப்படியாகிவிட்டதே என்று சதா அழுதுகொண்டே இருந்தாள். 'ஆண்டவனே! எங்களை இப்படி சோதித்து விட்டாயே!' என்று குமுறினாள். குடும்ப டாக்டர் என்னை முகம் பார்த்துப் பேசவே கூசினார். இந்த நிலைமைக்கு தாம்தான் தார்மீகப் பொறுப்பு என்று மன்னிப்புக் கேட்டு, அடுத்து என்ன செய்வது? முகத்தை பழையபடி சீராக்குவது எப்படி என்று இன்னும் சில டாக்டர்களைக் கலந்து ஆலோசித்தார். அவர்கள் சில பயிற்சிகளை யும், சிகிச்சை முறைகளையும் சொன்னார்கள். ஒரு மாத காலத்துக்குப்பின் முகம் சற்று நேரானது. முதலில் கண்கள் சரியாயின. பேச முடிந்தது.

மொத்தம் மூன்று மாத காலம் வீட்டிற்குள்ளேயே இருந்தேன். வெளியார் யாருடனும் பேசுவதைத் தவிர்த்தேன். குடும்பத்தினரிடம் பேசுகிறபோதுகூட, கர்சீப் கொண்டு வாயை மூடியபடி பேசினேன். எனக்குள்ளே ஒருவிதத் தாழ்வு மனப்பான்மை ஏற்பட்டு விட்டது. மூன்று மாதங்

குடும்ப டாக்டரையும் அங்கேயே இருக்கும்படி கேட்டுக் கொண்டேன். எனவே, அவரும் அங்கே இருந்தார். மயக்க மருந்து எனக்குக் கொடுக்கப்பட்டதுதான் தெரியும்.

மறுபடி மயக்கம்

களுக்குப் பிறகு என் சம்பந்தியின் வேண்டுகோளை ஏற்று மும்பை சென்றேன். அங்கு எனக்கு சிறப்பு சிகிச்சை தரப்பட்டது. அதன்பின், என் வாயும் சரியானது. பழைய மாதிரியே, எந்தவித சிரமமும் இல்லாமல் என்னால் பேச முடிந்தது. பழையபடி சுறுசுறுப்பானேன். விரைவிலேயே மேடையேறவும் தீர்மானித்து, அதற்குண்டான பயிற்சியில் ஈடுபட்டேன். அப்போது டாடா நகரில் வசித்துவந்த என் நண்பரும் சக மேஜிக் கலைஞருமான வாசானி என்பவர், 'நீங்கள் டாடா நகருக்கு ஒரு தடவை வாருங்கள். இங்கே ஒரு தடவை ஷோவை நடத்துங்கள். உங்களுக்கு எல்லாம் சரியாகிவிடும்' என்றார். நானும் அவரது ஆலோசனையை ஏற்றுக் கொண்டு ஜூனியருடன் டாடா நகரில் மேஜிக் ஷோ நடத்த ஒப்புக் கொண்டேன்.

முதல் நாள் மேடையில் தோன்றி ரசிகர்களை நேருக்கு நேர் பார்த்தபோது, புது ரத்தம் என் உடம்புக்குள் பாய்ந்தது போல உணர்ந்தேன். அரைமணி நேரம் மட்டுமே நான் மேடையில் இருந்தேன். மற்றதை ஜூனியர் பார்த்துக் கொண்டார். இரண்டாம் நாள் நிகழ்ச்சியை முடித்தபோது இன்னும் உற்சாகமாக நான் உணர்ந்தேன். மூன்றாவது நாளுக்குப் பின், முற்றிலும் புது மனிதனாக உணர்ந்தேன். முகத்தில், ஆபரேஷன் விளைவுகள் எதுவும் இல்லாமல், பழையபடி ஆனது. ஆண்டவனுக்கு நன்றி சொன்னேன்.

இந்த சோகமான சம்பவத்துக்குக்கூட நான் விஷயம் தெரியாத டாக்டர் மீது குற்றம் சொல்ல விரும்பவில்லை. என்னுடைய கர்மவினை என்றே நினைத்தேன். இறைவன் சாதாரண மனிதனான என்னை திறமையான மேஜிக் நிபுணனாக்கி, பேரும் புகழும் பணமும் கிடைக்கச் செய்தபோது, அவற்றை சந்தோஷமாக ஏற்றுக் கொண்ட நான், இது போல ஒரு கஷ்டம் வந்தபோது எனக்கு ஏன் இப்படி? என்று வருத்தப்படக் கூடாது என்பது என் கருத்து.

இதுவரை, இந்தியாவிலும் அயல்நாடுகளிலுமாக, சுமார் ஏழாயிரத்து ஐந்நூறு காட்சிகளை நானும் ஜூனியரும் இணைந்தோ, தனித்தனியாகவோ நடத்தி முடித்து விட்டோம். எனது நிகழ்ச்சியின் வெற்றிக்கு ஆண்டவனின் ஆசி, என் உழைப்பு, திறமை இவை தவிர, மண்ணின் மணம் வீசுகிற மாதிரி என் நிகழ்ச்சிகளை வடிவமைப்பதும் ஒரு முக்கிய காரணம் என்று நினைக்கிறேன். கல்கத்தாவில் ஷோ நடக்கிறபோது, காளி மாதா தோன்றும் மேஜிக் இடம் பெறுகிறது என்றால், ஜப்பான் போகிறபோது டிராகன் இடம் பெறும். நியூயார்க் செல்கிறபோது மேடையில் என்னுடன் கூட ஒரு ரோபோ தோன்றும்.

இன்னொரு முக்கியமான விஷயம். நான் வழங்கும் ஷோக்களின் பிரதான லட்சியம் பொழுது போக்குதான். குழந்தைகளை மகிழ்விப்பது மட்டுமின்றி, பெரியவர்களையும் வயதை மறந்து குழந்தைகளாக மாற்றி, மனம்விட்டு சிரிக்கச் செய்வதும், செயற்கையான தந்திரங்கள்தான் இவை என்பதை ஒரு கணம் மறந்து பிரமிக்க வைப்பதும்தான் என் நோக்கம். அதே சமயம் இந்த சமூகத்துக்கு ஒரு மெசேஜ் சொல்லவும் நான் முயற்சி செய்கிறேன். உதாரணமாக, என்னுடைய வாட்டர் ஆஃப் இந்தியா மேஜிக் மூலமாக, இந்தியாவில் பல்வேறு மொழி, கலாசாரம் இருந்தாலும் நாம் அனைவரும் இந்தியர்கள் என்ற செய்தி சொல்லப்படுகிறது.

இன்றைக்கு இந்தியாவில் நிறைய மேஜிக் கலைஞர்கள் இருக்கிறார்கள். முழு நேர மேஜிக் கலைஞர்கள் தவிர, பொழுது போக்காக மேஜிக் செய்கிறவர்களும் உண்டு. ஆனால், இவர்களில் பலர், உள்ளூர் நிகழ்ச்சிகளிலும், பள்ளிக் கூடங்களிலும்தான் அதிக அளவில் நிகழ்ச்சிகள் வழங்கிக் கொண்டிருக்கிறார்கள். இவர்களின் திறமை, குடத்துக்குள் வைத்த விளக்கு போல இருக்கின்றது. இவர்களுக்குப் பெரிய அளவில் முதலீடு செய்து, முப்பது நாற்பது நபர்களைக் கொண்ட மேஜிக் குழுவை நடத்துகிற அளவுக்கு



''ஒரு லிட்டர் ஸ்பெஷல் பால் வாங்கினா அரை லிட்டர் மினரல் வாட்டர் ஃப்ரீன்னு சொன்னியே, மினரல் வாட்டர் எங்கே?''

''ஹி.... ஹி....ஹி... அதை பால்லேயே கலந்து வெச்சிருக்கேன் சாமி!''

– குடந்தை கே. சிட்ரா

# என் கடவுளுக்கு நைவேத்தியம் காட்டி சாப்பிட வேண்டும்?



- ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஜீவனுண்டு. அதையறுத்து சமைப்பதனால் தோஷம் உண்டாகின்றது. அவைகளை கடவுளுக்கு ஆராதனைசெய்து சாப்பிட்டால் அந்த தோஷம் நிவாரணையாகும்.
- யஞ்ஞத்தினால் ஆராதிக்கப்பட்ட தேவதைகள், சந்தோஷ மடைந்து இஷ்டமான போகங்களைக் கொடுப்பார்கள். ஆதலால் நீங்கள் சாப்பிடுவதற்குமுன் அன்னமும் பதார்த்தங்களும் கடவுளுக்கு காட்டி ஆராதனை செய்து அந்த சேஷத்தைச் சாப்பிடவேண்டும்.
- இந்திராதி தேவதைகளும் ஜனங்களுக்கு ஜீவனார்த்தமாகிய பதார்த்தங்களைக் கொடுப்பதற்கு மழையைப் பெய்விக்கப் பகவானால் நியகிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அவர்களால் விளைவித்துக் கொடுக்கப்பட்ட பதார்த்தங்களை மறுபடியும் அவர்களுக்கு அர்ப்பணம் செய்வதனால் அவர்களை சந்தோஷித்து மறுபடியும் பிரதி வருஷங்களிலும் மழையை விருத்து செய்து கொண்டே வருவார்கள். அதனால் ஜனங்கள் க்ஷேமமாய் விருத்தியடைவார்கள்.

*ஆதாரம்: ஜீவப்ரஹ்மைத்ய வேதாந்த ரஹஸ்யம்*

---

ஆகையால் கிராண்ட் ஸ்வீட்ஸ் வாங்கி நல்லோருக்கு விநியோகம் செய்யவும்.

---

**திருமண வைபவங்களுக்கு** சீர் முறுக்கு, சீர் அதிரசம், முள்ளு தேன்குழல், பருப்புத் தேங்காய் வகைகள், திரட்டுப்பால் அப்பம் முதலியவை வழங்கப்படும்.

---

# தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு, காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20. போன்: 4915662, 4914213

வசதியும், வாய்ப்பும் இல்லை. பெரிய மேஜிக் நிபுணர்கள் கூட, முழுக்க முழுக்க டிக்கெட் வசூலை நம்பியே நிகழ்ச்சி நடத்துவது சிரம மாக இருக்கிறது. பல்வேறு நிறுவனங்களும், விளம்பரதாரர்களும் மனமுவந்து உதவுவது மிகவும் சௌகரியமாக இருக்கிறது. நிர்வாகச் செலவுகள், விளம்பரச் செலவு, ஹால் வாடகை எல்லாம் நாளுக்குநாள் அதிகரித் துக் கொண்டே போகின்றன. அரசாங்க மும், பெரிய அளவில் சலுகைகள் அளிப் பதில்லை. இவற்றையெல்லாம்விட, எங் களுக்கு இருக்கிற மிகப் பெரிய வில்லன் டெலிவிஷன்தான். ஏதாவது புதிய டெக்னிக் கைப் பயன்படுத்தி, டெலிவிஷனை மட்டும் மாயமாக மறையச் செய்துவிட முடியும் என்றால் மேஜிக் மட்டுமில்லை சினிமா உலகம் கூட பிழைத்துவிடும் என்று நான் நகைச்சுவையாகச் சொல்வதுண்டு.

இப்போது கூட மேஜிக்கில் நான் கரை கண்டுவிட்டதாக எனக்கு எண்ணம் கிடை யாது. மற்ற மேஜிக் கலைஞர்களின் நிகழ்ச்சி களை ஒரு மேஜிக் கலைஞன் என்கிற பார் வையில், அதன்பின் என்ன தந்திரம் இருக் கிறது என்று பார்த்தாலும், அதையும் மீறி ஒரு சாதாரண ரசிகனாக அவற்றை மிகவும் ரசிக்கிறேன். என்னை மிகவும் பிரமிக்க வைக்கும் ஒரு மேஜிக் நிபுணர் அமெரிக் காவைச் சேர்ந்த டேவிட் காப்பர் ஃபீல்டு. அவரது மேஜிக் நிகழ்ச்சி பதிவு செய்யப் பட்ட வீடியோ டேப்பை பலமுறை நான் போட்டுப் பார்த்து ரசித்துக் கொண்டிருப் பேன். கண் விழித்திருக்கும் நேரத்தில் மட்டுமில்லாமல், தூங்குகிறபோது கூட எனக்கு மேஜிக் பற்றிய கனவுகள்தான் வரும். ஒரு சில மேஜிக் ஐட்டங்களுக்குப் பின்னால் உள்ள தந்திரம் என்னவாக இருக்கும் என்று யோசித்தபடியே நான் தூங்கிப் போய்விட்ட சமயங்களில், தூக்கத்திலே கனவு மூலமாக எனக்கு அந்த ரகசியம் பிடிபட்டதுண்டு.

என் மகன் என்னைப் போலவே மேஜிக் கலைஞன் ஆக வேண்டும் என்று நான், ஆசைப்பட்டாலும், என் மனைவி எதிர்த் தாள். ஆனால் அவன் கடைசியில் மேடை ஏறிவிட்டான். அதுபோல அடுத்த தலை முறையை உருவாக்க வேண்டும் என்று நான் திட்டமிட்டுச் செயல்படவில்லை. காரணம், எங்கள் பரம்பரையில் மூன்றாவது தலை முறை மேஜிக் கலைஞன் உருவாக வேண்டும் என்று விதி இருந்தால், அவன் எப்படியும் உருவாகியே தீருவான் என்று நான் நம்பு



"ச்சே, ஏன் தான் இப்படி தலை வலிக்குதோ."
"அமிர்தாஞ்சன் தேய்ச்சு விடட்டுமாங்க?"
"அட, அதுக்குள்ள சம்பளத்தேதி வந்துடுச்சா?"
— எஸ். எஸ். பூங்கதிர்

கிறேன். ஜூனியரின் இரண்டு பையன்களும், இஞ்சினியரிங் படித்துக் கொண்டிருக் கிறார்கள். என் பெண் வயிற்றுப் பேரனுக்கு மேஜிக்கில் ஆர்வம் இருக்கிறது. அவன் மேடைக்கு வருவானா இல்லையா என் பதைக் காலம் தான் சொல்ல வேண்டும்.

தொடரின் இறுதிக் கட்டத்துக்கு வந்து விட்டோம். சென்னைக்கு மேஜிக் ஷோ நடத்த வந்த எனக்கு, என்னுடைய வாழ்க்கை அனுபவங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்ளுவதற்கு இப்படி ஒரு வாய்ப்புக் கிடைத்தது பற்றி ரொம்ப சந் தோஷம்.

ஆனால், எனக்கு அளவற்ற சந்தோஷம் ஏற்படும் நாளுக்காக நான் காத்திருக்கிறேன். என் லட்சியக் கனவு நிறைவேறும் நாள்தான் அந்த நாள்! என் லட்சியக் கனவு என்ன தெரியுமா? இங்கே குறிப்பிட்டேனே அமெரிக்காவின் புகழ்பெற்ற மேஜிக் நிபுணர் டேவிட் காப்பர்ஃபீல்டு, அவர் அமெரிக்காவின் புகழ்பெற்ற சுதந்தர தேவிச் சிலையை மாயமாக மறைய வைத்ததன் மூலம், பெரும் பரபரப்பு ஏற்படுத்தினார். அதைப்போல எனக்கும் ஒரு ஆசை! நம் இந்தியாவில் உள்ள உலகப் புகழ் பெற்ற தாஜ்மஹாலை மாயமாய் மறைய வைக்கும் மேஜிக் செய்து காட்டவேண்டும் என்பது தான்! அல்லது புகழ்பெற்ற கல்கத்தா நகரத்து ஹௌரா பாலத்தை மறையச் செய்ய வேண் டும்! ஆனால் இருபது முதல் முப்பது லட்சம் ரூபாய் வரை செலவு பிடிக்கும் 'இல்யூஷன்' ரக மேஜிக் இது! அதைச் செய்துகாட்ட எனக்கு நிதி வசதி இல்லை! யாராவது ஸ்பான்சர் செய்ய முன் வந்தால், அதையும் சாதித்துக்காட்ட என்னால் முடியும்!

(முற்றும்)

சந்திப்பும், தொகுப்பும்:
**எஸ். சந்திரமௌலி**



# நடக்குமென்பார்



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

முக்கியமான சில கிரகங்கள் இப்ப உங்களுக்கு நிபந்தனையற்ற ஆதரவு தருது. அதனால, உங்க நீண்ட நாள் திட்டங்கள் ஏதாவது இப்ப சுமுகமா நிறைவேற சான்ஸ் இருக்கு. நண்பர்கள், உறவினர்கள்கிட்டேயிருந்து எதிர்பார்த்த உதவிகள் கட்டாயம் கிடைக்கும். சிலருக்கு வெளிநாட்டு வர்த்தகத் தொடர்பு லாபகரமா அமையும். அரசியல்வாதிகளுக்கு செழிப்பான பாதை புலப்படும். பெண்கள் மட்டும் உடல்நலத்துல தீவிரமா கவனம் செலுத்த வேண்டியிருக்கும். மத்தபடி இது ஏறுமுகமான வாரம்தான்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எவ்ளோ எதிர்ப்பு, பொறாமை இருந்தாலும் போராடி ஜெயிப்பீங்க. லட்சிய வேகம் அதிகம் உள்ள உங்களுக்கு இந்த வாரம் மேலதிகாரிகளாலும் நண்பர்களாலும் தொல்லைகள் அதிகம் இருக்கும். ஆனா, உங்க திறமைக்கு முன்னால மத்தவங்க வயித்தெரிச்சல் கால் தூசு பெறாதுன்றதை மறந்துடாதீங்க. பணப் பிரச்னை இல்லாத வாரம்னாலும் அநாவசிய செலவுகளைக் கட்டுப்படுத்தணும்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க திட்டங்கள் சுமுகமா நிறைவேறும். பணப் பிரச்னை இருக்காது. பெரியவங்க ஆசி பரிபூரணமா கிடைக்கும். புது வியாபார ஒப்பந்தங்கள் ஏற்படும். போட்டி, பந்தயங்களிலும் வெற்றிதான். ஸ்பெகுலேஷன் துறையினருக்கு ஆதாயமான வாரம். சிலருக்கு திடீர் வெளியூர்ப் பிரயாணம் இருக்கலாம். இந்த வாரம் தான தர்மம் செய்யறதில ஈடுபாடு அதிகம் இருக்கும்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கொஞ்சம் சுமாரான வாரம்தான். புதிய திட்டங்கள், ஒப்பந்தங்கள், வீடு மனை வாங்கறது - இதையெல்லாம் ஒரு பத்து நாளைக்குத் தள்ளிப் போடறது நல்லது. வேலை பார்க்கற இடத்துல வீண் மனஸ்தாபங்கள் ஏற்படலாம். குறிப்பா பெண்களோட சண்டை வர்றதுக்கு சான்ஸ் இருக்கு. ஹோட்டல்ல சாப்பிடாதீங்க. ஃபுட் பாய்ஸனுக்கு வாய்ப்பு அதிகம். மொத்தத்துல பொறுமையும் நிதானமும் கடைப்பிடிக்க வேண்டிய வாரம்.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

உங்க ஆற்றல் மேலோங்கி நிக்கும். எந்தக் காரியமும் சுலபமா நிறைவேறும். அரசாங்கம் மூலமா சில நல்ல விஷயங்கள் நடக்க சான்ஸ் இருக்கு. திருமணம், விருந்துகள்ல கலந்துக்குவீங்க. போட்டிகள்ல வெற்றி நிச்சயம். எதிரிங்க பணாலா விடுவாங்க. அப்பா உடல்நலத்துல அக்கறை செலுத்த வேண்டியது அவசியம். மருத்துவச் செலவுகள் இருக்கும்.



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

பிரமாதமான வளர்ச்சி இருக்கா

## அக்னிசர்மா பக்கம்

**மீன ராசிக்காரரான பிரபுவுக்கு பிரமாதமான வாரமாம். நினைச்ச காரியம் நடக்குமாம்!**

துன்னாலும் பிரச்னைகளும் அதிகம் இருக்காது. மாமூலான வாரம்தான். மனசுல எப்பவும் ஒரு குழப்பம் இருக்கும். சின்னச் சின்ன விஷயங்கள் கூட பூதம் மாதிரி பயமுறுத்தும். ராத்திரி தூக்கம் வராது. வீட்டுலேயும் குழப்பமும் சிறு மனத்தாங்கல்களும் வரும். வார்த்தைகளைக் கொட்டிடாதீங்க. ஆபீஸ்ல எல்லார்கிட்டேயும் அன்பா நடந்துக்கங்க. கடன் வாங்கறதோ, ஜாமீன் கையெழுத்துப் போடறதோ வேணாம்.

# நடக்கும்!



**துலாம்** : *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

உங்க ஆசைகள் சுலபமா நிறைவேறும். இதுவரை இருந்து வந்த பொருளாதார நெருக்கடி தீர்ந்துடும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கு சான்ஸ் இருக்கு. நல்லவர்கள் தொடர்பால ஆக்கபூர்வமான சில பணிகள் செய்து முடிப்பீங்க. தேக ஆரோக்கியம் சீரா இருக்கும். உத்தியோகஸ்தர்களுக்குப் பண வரவு அமோகமா இருக்கும். வழக்குகளும் சாதகமாகவே தீர்ப்பாகும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க அறிவாற்றலால பல செயற்கரிய காரியங்களைச் செய்து முடிப்பீங்க. நண்பர்கள் உதவுவாங்க. பணப் பிரச்னை இருக்காதுன்னாலும் அநாவசிய செலவுகள் நிறைய வரும். சமூக சேவையாளர்களுக்குப் புகழ் கூடும். எழுத்தாளர்கள் ஏற்றம் பெறுவார்கள். உலோக வியாபாரிகளுக்கு லாபம் கூடும். பெண்களுக்குப் புதுப் புடவை யோகம் இருக்கு. விளையாட்டு வீரர்களுக்குச் சிறு காயம் ஏற்படும்.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

மனசுக்கு இனிய சம்பவங்கள் நடக்கும். நண்பர்கள்.. எதிர்பாராத இன்ப அதிர்ச்சி தருவாங்க. பணவரவு சீரா இருக்கும். வாணிபத் துறையினருக்கு வெளிநாட்டு ஒப்பந்தங்கள் கூடும். வேலை தேடும் இளைஞர்களுக்குப் பிரகாசமான எதிர்காலம் உறுதி. கணக்கு வாத்தியார்களுக்கும் கம்ப்யூட்டர் துறையினருக்கும் புகழ் கூடும். விஞ்ஞானிகளும் ராணுவ வீரர்களும் பிரமாதமான சாதனைகள் புரிவாங்க.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நண்பர்கள்கிட்ட எச்சரிக்கையா இருங்க. பல சங்கடங்கள் அவங்களால வரலாம். வியாபாரம் சூடுபிடிக்கற நேரத்துல சிலருக்குப் பொருள் இழப்பும் ஏற்படும். கடன் வாங்கறது, ஜாமீன் கையெழுத்துப் போடறதெல்லாம் வேணாம். வழக்கு ஏதும் இருந்தா உடனடியா வாய்தா வாங்குங்க. இந்த வாரம் எந்தத் தீர்ப்பும் உங்களுக்குச் சாதகமா இருக்காது. வாரக் கடைசில நிலைமை கொஞ்சம் சீராக வாய்ப்பு இருக்கு.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உடல்நலன் சீரா இருக்கும். அந்தஸ்து உயரும். குடும்பத்தில் மகிழ்ச்சி பெருகும். வீட்டு உபயோகப் பொருள்கள் வாங்குவீங்க. மக்களால அனுகூலம் உண்டு. தெய்வப் பணில ஆர்வம் கூடும். சிலருக்குக் கோயில் குளம்னு சுத்தற யோகம் இருக்கு. சகோதரர்களுக்குள்ள லேசா பிணக்கு வரலாம். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

பிரமாதமான வாரம். நினைச்ச காரியம் நடக்கும். வழக்குகள் சகஜமா தீர்ப்பாகும். எதிரிகள் ஓடி ஒளிவாங்க. வெளியூர்லேருந்து நல்ல சேதி வரும். சிலருக்குக் கல்யாணம் நிச்சயமாகும். காதல் அனுபவங்கள் தித்திக்கும். பெண்களுக்குத் தோற்றப் பொலிவு கூடும். எழுத்தாளர்களுக்குப் புகழோடு பணமும் சேரும். மொத்தத்துல உபயோகமான, உற்சாகமான வாரமா இருக்கும்.

**டிசம்பர் 15 முதல் 21 வரை**



• திருநள்ளாறு

# இன்னல்கள் களையும் சனீச்வரன்!

சூரியனுக்கு வெகு தொலைவில் இருக்கும் கிரஹம் சனி. பூமியை விடப் பல மடங்கு பெரியது. சனி கிரஹம் மிக மெல்ல வான வீதியில் சூரியனைச் சுற்றி வருகிறது. சனைச்சரன் என்றால் மெதுவாகச் செல்பவர் என்றே பொருள்! ஆகையால் 'மந்தன்' என்றும் பெயர் பெற்றிருக்கிறார் சனீச்வர பகவான்!

நமது நம்பிக்கைப்படி சனி பகவானின் அருள் இருந்தால் நீண்ட ஆயுளும், ஆன்மீக நாட்டமும் உண்டாகும். "முப்பது வருடம் வாழ்ந்தவரும் இல்லை. முப்பது வருடம் கெட்டவரும் இல்லை" என்று ஒரு பழமொழி உண்டு. ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் சனீச்வர பகவானின் பாதிப்பு ஏதாவது ஒரு கட்டத்தில் இருந்தே தீரும் என்று சொல்கிறார்கள்.

மங்கு சனி என்றும் பொங்கு சனி என்றும் சொல்வார்கள். ஒருவருடைய ஆயுட்காலத்தில் இரண்டாவது தடவை சனி பகவானின் பாதிப்பு அதாவது ஏழரை நாட்டுச் சனியின் ஆதிக்கம் ஏற்படும்போது பல நன்மைகள் உண்டாகும். செல்வம் செழிக்கும். பெரியோர்கள் உறவு கிடைக்கும். தெய்வ காரியங்களில் நாட்டம் உண்டாகும் என்றெல்லாம் கூறுகிறார்கள்.

சனி கிரஹத்தின் பாதிப்பு பிரதிகூலமாகவும் சில சமயம் இருக்கும். அந்த மாதிரி சமயங்களில் சனீச்வர பகவானுடைய சாந்நித்யம் உள்ள தலங்களுக்குச் சென்று அவரைத் துதித்து சனீச்வரர் பூஜித்த ஈசுவரனையும் தரிசித்தால் நமது கர்ம வினைகள் விலகி நலம் பெறலாம்.

சனீச்வரன் வேண்டுமென்றே வன்மமாக நமக்குத் துன்பம் தருவதில்லை. முந்தை வினைப்பயன்களைத்தான் நாம் அனுபவிக்கும்படி செய்கிறார். கடமையில் தவறாதவர் சனி பகவான்.

யமனுடைய தம்பியான சனியை நாம் ஈச்வரன் பட்டம் கொடுத்து அழைக்கிறோம். இதைப் பற்றிய கதை சுவாரஸ்யமாக இருக்கிறது.

சூரிய பகவான் மனைவி சம்ஜ்ஞா தேவி. இவளுக்கு யமன், யமி, வைவஸ்வதன் என்று குழந்தைகள் பிறந்தார்கள்.

சூரியனுடைய வெப்பத்தை ஸம்ஜ்ஞாவினால் தாங்க முடியவில்லை. தன்னுடைய நிழலுக்கு உயிரூட்டித் தன்னைப் போலவே ஒரு பெண்ணைப் படைத்தாள் ஸம்ஜ்ஞா. நிழலானதால் சாயாதேவி என்று பெயர் சூட்டி, "சூரியனிடம் நீ யார் என்று சொல்லாமல், என் குழந்தைகளைப் பார்த்துக் கொள்..." என்று உத்தரவிட்டு விட்டு வட துருவத்திற்குப் போய் ஒரு குதிரை வடிவம் எடுத்துக்கொண்டு உலவிக் கொண்டிருந்தாள்.

சாயாவுக்கு இரண்டு பெண்களும் இரண்டு மகன்களும் பிறந்தனர். இரண்டாவது மகன் க்ருதவர்மன் என்ற பெயருடைய சனைச்சரன்.

சாயாதேவி தனது உண்மையான தாய் அல்ல என்று உணர்ந்து யமன் அவளை அவமதிக்க, கிருதவர்மன் அதை ஆட்சேபித்துச் சண்டையிட, சூரியன் இந்தச் சண்டையில் தலையிட்டு சாயாதேவியைக் கடிந்து கொள்ள, அதை கிருதவர்மனால் பொறுக்க முடியவில்லை. தந்தையிடம் வெறுப்பு மேலிட்டு பூவுலகில் காசி க்ஷேத்திரத்தை அடைந்து சிவலிங்கம் ஸ்தாபித்துப் பூஜை செய்தார். பிறகு ஈச்வரனை நோக்கிக் கடுமையான தவம் செய்தார்.

தவத்துக்கு உரிய பலன்களைக் கொடுப்பவரான பரமேச்வரன் தோன்றி கிருதவர்மனுக்குப் பல வரங்கள் கொடுத்தார்.





• சனீச்வரர்

முதலில் கிரஹ பதவியைத் தந்தார். பிறகு "கோவில்கள் தோறும் மற்ற கிரஹங்களுடன் வணங்கப்படுவாய்!" என்று அருளினார்.

மக்களுடைய பாப புண்ணியங்களுக்கு ஏற்ப அவர்கள் தங்கள் வினையின் பயன்களை அனுபவிக்கச் செய்யும் சக்தியை உனக்குத் தருகிறேன். ஜனங்களை சோதித்தும் பிறகு நல்ல பலன்கள் தந்தும் உன் கடமையைச் செய்து வா" என்று கூறினார்.

சனிக்கு ஒரு விருப்பம் உண்டாயிற்று. "எனக்கு நீங்கள் அளித்த வரத்தை உங்கள் மீதே சோதித்துப் பார்க்க அருள வேண்டும்" என்றார்! கிருபாநிதியாகிய சிவபெருமான் அந்த விபரீத யோசனையைக் கேட்டதும் சட்டென்று மறைந்து விட்டார். ஏழரை ஆண்டுகள் எவருக்கும் தெரியாமல் ஒரு தாமரைத் தண்டின் நாளத்தில் ஒளிந்து கொண்டு யோகத்தில் ஆழ்ந்திருந்தார். பிறகு வெளிப்பட்டபோது சனி காத்திருந்து வணங்கினார். "சனியே! உன்னால் என்னைப் பிடிக்க முடிந்ததா? என்ன வரம் கேட்டாலும் கொடுத்தேன் என்பதனால் என்னையே சோதிக்க நினைத்தாயே! உன்னுடைய ஜம்பம் என்னிடம் சாயாது!" என்றார் ஈச்வரன்.

சனி பகவான் புன்னகையுடன் வணங்கி "சுவாமி! நீங்கள் உங்கள் இருப்பிடத்தைத் துறந்து, உமா தேவியாரைப் பிரிந்து தன்னந்தனியே வாசம் செய்ய வைத்து விட்டேனல்லவா? அதுவே தாங்கள் எனக்குக் கொடுத்த வரத்தின் பலம்!" என்று சொன்னார்!

சிவ பெருமான் கோபமடையவில்லை, "என்னையே ஆட்டிப் படைத்த உன்னை இனி மேல் எல்லாரும் ஈச்வரன் என்றே அழைப்பார்கள்" என அருளினார்.

சனி கிரஹத்தை மந்தன், பிணிமுகன், முதுமகன், முடவன், காரி (கரியவன்) என்றெல்லாம் பெயர் சொல்லி அழைத்தாலும் சனீச்வரன் அழகன்தான். அனுகுவதற்கு சுலபன்தான். சனீச்வரனை வழிபட்டால் ஆயுள் பலமும், நல்ல வாழ்க்கையும் தருவார்.

நீல மணித் தேரில், நீலப்பட்டுத் திரைகள் காற்றில் பறக்க, நீல நிறக் கொடி பறக்கும் தேரை எட்டு கரு நிறக் கழுகுகள் இழுத்துக் கொண்டு வர அண்டத்தில் உலவுகிறார் சனீச்வரன்! அவர் குறித்து இன்னொரு சுவையான கதை.

தசரத சக்ரவர்த்தி அயோத்தியில் ஒரு குறையும் இல்லாமல் ஆண்டு வந்தார். அப்போது ஜோதிட வல்லுனர்கள் "சனிக்ரஹம் ரோகிணி நக்ஷத்திரத்தின் வாயகன்ற பகுதியில் நுழைந்து, அதன் குவிந்த பாகத்தைப் பிளந்து கொண்டு செல்லப் போகிறது" என்றனர். அதனால் நாட்டில் பன்னிரண்டு ஆண்டுகள் மழை பெய்யாது. வறுமையும் பஞ்சமும் தலை விரித்தாடப் போகிறது. உயிர்கள் அனைத்தும் நீரில்லாமல் மடியும்" என்று எடுத்துச் சொன்னார்கள். "இதைத் தடுக்க முடியாது!" என்றே எல்லாரும்

**ஆனந்தி**

தசரதரிடம் சொன்னார்கள். 'ரோஹிணி சகடபேதனம்' என்று இதற்குப் பெயர்.

தசரதர் மனம் கலங்கினார். தன்னுடைய மக்களுக்குத் துன்பம் வருவதைத் தடுக்க நினைத்தார். சனி கிரஹம் சூரிய மண்டலத் துக்கும் அப்பால் இருந்ததாம். தசரதர் தன்னுடைய தேரில் ஏறிக் கிளம்பி விட்டார். அவருடைய தேர்தான் பத்துத் திசைகளிலும் செல்லக் கூடியதாயிற்றே!

சனி பகவான் கிருத்திகையிலிருந்து ரோகிணி நக்ஷத்திரத்துக்குத் தாண்டுகின்ற நிலையில் தசரதர் நக்ஷத்திர மண்டலங்களை யெல்லாம் கடந்து இன்னொரு சூரியன் போல ஜொலித்துக்கொண்டு மேருவைப் போன்ற தன்னுடைய ரதத்தில் வேகமாக வந்து, ''நில்லும்!'' என்று சொல்லி தன் வில்லில் நாண் ஏற்றி அம்பை வைத்துக் குறி பார்த்துக்கொண்டு ஸம்ஹாராஸ்திரத்தைப் பிரயோகிக்கத் தயாராக நின்றார்.

இதைக் கண்டு அதிசயித்த சனைச்சரன் "நீங்கள் வரம் கேளுங்கள். கொடுக்கிறேன்" என்றார்.

''ஸௌரே! (சூரிய புத்ரா!) எனக்குத் தாங்கள் வரம் கொடுப்பதானால் ரோஹிணியைப் பிளந்துகொண்டு நீங்கள் போகக் கூடாது. பன்னிரண்டு வருடம் பஞ்சம் என்பது பூவுலகில் எப்போதுமே வரக் கூடாது. எனது நாட்டில் யாரையும் துன்புறுத்தக் கூடாது. இது தவிர நான் எந்த வரமும் கேட்கவில்லை" என்றார் தசரதர்.

"தந்தேன்" என்று சனி பகவான் சொல்ல, வில்லைத் தேரில் போட்டு விட்டுக் கூப்பிய கரங்களுடன் தசரதர் சனி பகவானைத் துதித்தார்.

"ராஜேந்திரனே! உன் தோத்திரம் எனக்கு மகிழ்ச்சி அளித்திருக்கிறது. நீ இயற்றிச் சொன்ன இந்தத் தோத்திரத்தை யார் பக்தியுடன் தினம் ஒரு தடவையோ இரண்டு தடவையோ சொல்கிறார்களோ அவர்களை நான் துன்புறுத்த மாட்டேன்'' என்று தாமாகவே உவந்து வரமளித்தார். "வேறு கிரஹங்களால் ஏற்படும் துன்பங்களையும் போக்குகிறேன்" என்று வாக்களித்தாராம். சனிக்கிழமைகளில் சனைச்சராஷ்டகம் படிப்பவர்கள் எல்லா நன்மைகளையும் அடைவார்கள். துன்பங்களிலிருந்து விடுபடுவார்கள்!

இப்படிப்பட்டவரை அசுப கிரஹமாகவும், பயங்கரமானவராகவும் ஏன் நினைக்க வேண்டும்?. அவருக்குப் பிரியமானவை கறுப்பு ஆடை, உலோகங்களில் இரும்பு, தானியம் எள், சுவை கசப்பு, நீல மணி மாலை, மலர் வன்னி (இந்திவர புஷ்பம், என்றும் ஒரு புத்தகத்தில் இருக்கிறது.)

சனீச்வரனுக்கு மூன்று மனைவியர் உண்டு. ஜேஷ்டா, மந்தா, நீலா என்பவர்கள். சனிக்கு குளிகன் என்ற மகன் பிறந்தான். குளிகனுக்கு என்று தினமும் ஒரு நேரம் உண்டு. அந்த நேரத்தில் எது செய்தாலும் வளரும். அதனால் நல்ல காரியங்களே செய்ய வேண்டும்.

எத்தனையோ கோவில்களில் சனி பகவானுக்குத் தனியாக சந்நிதி இருப்பதைப் பார்க்கிறோம். நவ கிரஹங்களோடு சனீச்வரன் உள்ள கோவில்களில் கூட சனீச்வரனுக்குத் தனி சந்நிதி உண்டு. இருந்தாலும் சனி பகவானின் சிறப்



### வந்தாச்சு விருது!

**ஹிந்துஸ்தானி – கர்நாடக இசை நுட்பங்களைக் கலந்து வயலினிசையில் புதுப் பாணி உருவாக்கியவர் பரூர் சுந்தரமய்யர். இவர் வழி வந்த மகன் பரூர் அனந்தராமனுக்கு இவ்வாண்டு மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸின் 'சங்கீத கலா நிபுண' பட்டம் வழங்குகிறது.**

**— டி.என். சித்ரா**





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை—63.
போன் : 2376129

## ஓரிசா மாநில புயல் நிவாரணப் பணி

'பாதிக்கப்பட்ட மக்களுக்கு உதவுங்கள்'

அன்புள்ளம் கொண்டோரே!

கடந்த ஒரு மாத காலமாக ஓரிசா மாநிலப் பகுதியில் வீசிய கடும் புயலால் மிகவும் அதிகமாக பாதிக்கப்பட்ட பகுதியான ஜெகத்சிங்பூர் மாவட்டத்தில் : பலிகுடா வட்டத்தில் பதினைந்து கிராமங்களில் **"ஸ்ரீசாரதா சக்தி பீடம்"** நிவாரணப்பணிகளை மேற்கொண்டு வருகின்றது.

இதுவரை 2040 குடும்பங்களுக்கு மிக அத்தியாவசிய தேவையான அரிசி, போர்வைகள், சேலை, வேஸ்டி ரெடிமேட் ஆடைகள், கூறைமேல் போடுவதற்கு பாலீத்தீன் ஷீட்டுகள் மற்றும் நான்கு டன் பழைய துணிகளும் அனைவருக்கும் முறையாக, நேரிடையாக வழங்கப்பட்டன. இது வரை நிவாரணப்பணிக்காக **7.50** லட்சம் ரூபாய் நன்கொடையாக பெற்று செலவழிக்கப்பட்டுள்ளது.

உதவிக்காக காத்து இருப்போர்,
பசியால் வாடிக்கொண்டிருப்போர், பல்லாயிரக் கணக்கில்.
கருணை உள்ளம் படைத்த இதயங்களை நாடுகின்றோம்.
வாரீர் ! வாரி வழங்குவீர் ! பசியால் வாடும்
உள்ளங்களை காப்பாற்றுவோம். வாரீர்!

குறிப்பு : நன்கொடை செக்/ டிடி/ மணியாடர்கள் "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு அனுப்பிவைக்கவும்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்
மேனேஜிங் டிரஸ்டி

புத்தலம் என்று பக்தர்கள் வழிபடும் திருநள்ளாறுக்கு இப்போது போகிறோம்.

நளன் தமயந்தி கதை அனைவருக்கும் தெரிந்ததுதான். சனியால் பீடிக்கப்பட்ட நளன், ராஜ்யம் இழந்து, மனைவியைப் பிரிந்து, கட்டிய ஆடையைக்கூடப் பறிகொடுத்து, பாம்பினால் கடிக்கப்பட்டு உரு மாறி, இன்னொரு அரசனின் குதிரை லாயத்தில் தேரோட்டியாக வேலை செய்து வந்தான். பல ஆண்டுகள் கஷ்டப்பட்ட பிறகு தமயந்தியும் நளனும் ஒன்று சேர்ந்தார்கள். சனி விலகி, ராஜ்யத்தையும் திரும்ப அடைந்தான் நளன். ஆனாலும் அவன் மனம் அமைதி அடையவில்லை.

ஒருநாள் நாரத முனிவர் வந்தார். நளனைப் பார்த்து "நீ ரொம்பக் கஷ்டப்பட்டு விட்டாய். உன் மனம் அமைதி அடைய தர்ப்பாரண்யம் என்ற இடத்துக்குப் போய் நகவிடங்கத் தியாகராஜரையும், நீலோத்பலாம்பிகையையும் வழிபட்டு வந்தால் உன் மனம் தெளிவடையும்" என்று சொன்னார்.



நளனும் நாரத முனிவரைப் பணிந்து உடனே தர்ப்பாரண்யம் சென்றான். வெகு காலம் சொர்ண விநாயகர், தர்பாரண்யேச்சுவரர் பிராணாம்பிகை மூவரையும் வழிபட்டு மன அமைதி அடைந்தான். சனி பகவான் ஒரு முதியவராக வந்து ஒரு எலுமிச்சம் பழத்தைக் கொடுத்தார். நளன் உடனே அவரைத் தெரிந்துகொண்டு விட்டான். கூடவே இருந்தவராயிற்றே! அவரை வலம் வந்து வணங்கினான். நளனுடைய பெருந்தன்மையைக் கண்ட சனீச்வரன் 'உன்னை எவ்வளவோ கஷ்டப்படுத்தினேன். ஆனாலும் நீ மனம் வெறுக்காமல் என்னை வணங்கினாய். ஒரு வரம் கேள்" என்றார்.

"சுவாமி! நீங்கள் யாரைப் பீடித்தாலும் என்னைக் கஷ்டப்படுத்திய மாதிரி துன்புறுத்தாதீர்கள். ஒருவர் உங்களால் எவ்வளவு இழந்தாரோ அதைப் போலப் பலமடங்கு பின்னால் அவருக்குக் கிடைக்கச் செய்யுங்கள். நீங்கள் விலகும்போது அவர்களுடைய வாழ்வில் நல்லன நடக்க வேண்டும்!" இதுதான் என் பிரார்த்தனை" என்றான் நளன்.!

சனி பகவான் ஆச்சரியப்பட்டார். இப்படிப்பட்ட உத்தமனை இவ்வளவு கஷ்டப்படுத்தினோமே என்று வருந்தினார். ஆகையால் அவன் கேட்டதை அளித்ததோடு, "என்னால் பீடிக்கப்பட்டவர்கள் உன் கதையைப் படித்தாலோ, படிக்கச் சொல்லிக் கேட்டாலோ அவர்களுடைய துன்பங்களைக் குறைப்பேன்" என்று கூறி அந்தத் தலத்திலேயே கோவில் கொண்டார்.

## கர்நாடக ஸ்பெஷல்

## புரந்தரரின் (ராம) பாயஸம்

**தேவையான பொருள்கள்**

கோதுமை ரவை
கிருஷ்ணன் எனும் சர்க்கரை
விட்டலன் எனும் நெய்

**செய்முறை**

நல்ல கோதுமையை எடுத்து 'வைராக்யம்' எனும் எந்திரத்தில் மெல்லிய ரவையாக உடைத்துக் கொள்ளவும். 'ஹ்ருதயம்' எனும் பாத்திரத்தில் 'பாவம்' எனும் உலை நீரை வைத்து, எற்கெனவே, அரைத்து வைத்திருக்கும் ரவையைப் போட்டு, மறக்காமல் 'கிருஷ்ணன்' எனும் 'சர்க்கரை' மற்றும் 'விட்டலன்' எனும் 'நெய்' சேர்த்து 'புத்தி' எனும் நல்ல குணத்தால் சமைக்கவும்... இதுவே ராம பாயசம்!

பதமாகச் சமைத்த பாயசத்தை சப்புக் கொட்டி ருசிக்கும் வேளையில் புரந்தர விட்டலனை நினைக்கவும்.

(- புரந்தரதாசர் கீர்த்தனை)

தகவல்: டி.என். சித்ரா

நள்ளாறு என்று நளனுடைய பெயரால் விளங்கத் தொடங்கியது தர்ப்பாரண்யம். ஆதிபுரி, நகவிடங்கபுரம் என்றெல்லாம் பெயர்களுடைய இந்தத் தலம் நான்கு பக்கங்களிலும் வயல்களும் கழனிகளும் சூழ்ந்து அழகாக இருக்கிறது. எந்தப் பக்கம் சென்றாலும் குளங்கள், பிரும்ம தீர்த்தம், வாணி தீர்த்தம், அன்ன தீர்த்தம், அகத்திய தீர்த்தம் என்று பல குளங்கள். முதலில் நள

தீர்த்தத்தில் நீராட வேண்டும். தீர்த்தக் கரையில் விநாயகர் குடி கொண்டிருக்கிறார். அவரை வணங்கி எதிர்க்கடையில் தேங்காய் வாங்கி நம் தலையை மூன்று முறை சுற்றிக்கொண்டு கோவில் வாசலில் உள்ள தொட்டியில் சிதறச் செய்ய வேண்டும். நம் துன்பங்களும் பாபங்களும் தொலைந்து போவதாக ஐதிகம்.

கோபுரத்தைத் தாண்டி உள்ளே சென்று வலம் வந்தால் தியாகேசர் வஸந்த மண்டபத்தைப் பார்த்துவிட்டுக் கற்பக விநாயகரைத் தரிசித்துக் கொள்ளலாம்.

மூன்றாவது பிராகாரத்தில் அறுபத்து மூவருடன் கலி நீங்கிய நளனுக்கும் ஒரு மண்டபம் இருக்கிறது.

கருவறையிலுள்ள நளேச்வரரைத் தரிசித்துக் கொண்டு, அருகிலுள்ள மண்டபத்தில் தியாகராஜ ஸ்வாமியைத் தரிசிக்கப் போகிறோம். எள் போட்டால் எள் விழாது. அத்தனை பேர் உட்கார்ந்திருக்கிறார்கள். சந்நிதிக் கதவு பூட்டியிருக்கிறது! சற்றைக்கெல்லாம் திறக்கிறார்கள். ஒரு பாதுகாப்புப் பெட்டகத்திலிருந்து நகவிடங்கரை எடுத்து பீடத்தில் வைக்கிறார்கள். இவர் மரகத லிங்கம் (சுயம்புவாம்). பால் அபிஷேகமும், சுத்த நீரால் அபிஷேகமும் செய்து, அர்ச்சிக்கிறார்கள். பார்த்துக் கொண்டே இருக்கும்போது பூஜை முடிந்து சிவலிங்கமும் பாதுகாப்புப் பெட்டகம் சென்று விடுகிறார்!

தேவி பிராணாம்பிகையின் வலது பக்கமாக, சனீச்வரருடைய சந்நிதி. இங்கும் அடியார்கள் கூட்டம் நெரிகிறது. எள் என்ன? எண்ணெய் மழை பொழிந்தால்கூட தரையில் சொட்டாது.

"இப்படியே தினமும் கூட்டம் இருக்குமா?" என்று கேட்டேன். சனிக்கிழமைகளில் இதை விடக் கூட்டம் இருக்கும். இன்று மழை பெய்வதால் கூட்டம் குறைவு" என்றார்கள். பிராணாம்பிகையின் சந்நிதிக்கு நேரேயும் அடியார்கள் சனி பகவானைப் பார்த்துக் கொண்டு அமர்ந்திருக்கிறார்கள்.

அனேக எள் விளக்குகள் எரியும் புகை மணம். தூப மணம். சந்தன மணம் எல்லாம் சேர்ந்த ஒரு வாசனை. முண்டியடித்துக்கொண்டு பாதுகாப்புக்காகக் கட்டப்பட்டுள்ள கயிறுகளை எடுக்கும்போது புகுந்து சனீச்வரனைத் தரிசனம் செய்து கொண்டேன்.

தசரதரையும், நளனையும் நினைத்துக் கொண்டே தீபாராதனையைப் பார்க்கிறோம். சட்டென்று நகர வேண்டியிருக்கிறது. பின்னாலும் முன்னாலும் தரிசனத்துக்குக் காத்திருக்கும் பக்தர்கள்.

நள்ளாறு பாடல் பெற்ற தலம். மூவரும் பாடியிருக்கிறார்கள்.

திருநள்ளாற்றில் அன்னதானம் சிறப்பாக நடந்து வருகிறது. அன்னபூரணி அன்னதான அறக்கட்டளை கட்டுச் சாதப் பொட்டலங்கள் விநியோகிக்கிறார்கள். பொங்கலும், புளியோதரையும் ருசி ருசியாய் இருந்ததைப் பார்த்து ஆச்சரியம் அடைந்தேன். நூற்றுக்கணக்கான பேருக்கு உணவு தயாரித்துப் பொட்டலம் கட்டிக் கொடுக்கும் கூடம் சுத்தமாகவும் இருந்தது. சனிக்கிழமைகள் தோறும், தெற்கு வீதியில் உள்ள வீட்டில் வந்தவர்கள் அனைவருக்கும் உணவு தருகிறார்கள். எப்படித்தான் செய்கிறார்களோ! பாராட்டுகிறோம்.

தருமபுர ஆதீனத்தின் மேற்பார்வையிலுள்ள கோவில்; ஆறுகால பூஜைகளும் ஒரு குறைவில்லாமல் சிறப்பாகச் செய்யப்படுகின்றன.

இறைவன் மிருத்யுஞ்ஜய மந்திரத்தை முதன்முதலில் இந்தத் தலத்தில்தான் உபதேசித்ததாக ஒரு ஐதிகம்.

திருநள்ளாறு தலத்தைப் பற்றி எவ்வளவு எழுதினாலும் முழுதும் சொல்ல முடியாது.

*கள்ளாறாதபொற் கொன்றை*
*கமழ்சடை*
*நள்ளாறாவென நம் வினை நாசமே.*

– திருநாவுக்கரசர்

படங்கள்: **யோகா**



"முயற்சி திருவினையாக்கும்ங்கிறது சரியாகத்தான் இருக்கு...!"

"எப்படி?"

"முதலில் எல்லாம் ஒருவேளைக்கு எட்டு இட்லி சாப்பிட்ட நான், இப்ப ஒருவேளைக்கு பன்னிரண்டு இட்லியும்கூட நான்கு வடையும் சாப்பிடறேன்!"

— செ.க.புதூர் குமார்

# வியப்பில் ஆழ்த்திய ஹீரோ!




✉ ஒரிசா ஹீரோ நாயுடு என்ற தலைப்பில் கட்டுரை படித்தேன். ஒரிசா முதல்வருக்குப் பதில், தவறுதலாக ஆந்திர முதல்வர் படத்தை அட்டையில் போட்டிருக்கிறீர்களோ என்ற சந்தேகம் கட்டுரையைப் படித்ததும் நீங்கியது. ஆந்திர முதல்வரின் செயல் மிகவும் வியப்பில் ஆழ்த்தியது. கல்கியைப் படித்த பின்தான் மேற்படி செய்தியே தெரிந்தது. வேறு எதிலும் வராத செய்தி.

திருத்தங்கல், ஈ. சிதம்பரம்.

✉ 'வாஜ்பாயின் விரிவாக்க விளையாட்டு' என்ற தலையங்கம் படித்தேன். ஒரே இலாகாவைப் பிரித்துக் கொடுத்து, அமைச்சரவையைப் பிரதமர் விரிவாக்கியது தம்முடைய கூட்டணிக் கட்சிகளைத் திருப்திப்படுத்தவே தவிர, மக்களுக்கு அதனால் ஒரு நன்மையுமில்லை என்பதைத் தெளிவாகவே சொல்லி விட்டீர்கள்!

கும்பகோணம், எஸ்.கே. மூர்த்தி.

✉ சிறைக்கூடங்களில் கஞ்சா பறிமாற்றம், காவல் நிலையங்களில் மாமூல் கலாசாரம், கற்பழிப்பு, லாக்கப் மரணம் போன்ற காவல் துறையைக் களங்கப்படுத்தும் செய்திகள் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும் வேளையில், கோவை பகுதியின் கலங்கரை விளக்கமாகத் திகழும் கமிஷனர் ராதாகிருஷ்ணனின் சாதனைகளை அச்சிலேற்றியது சற்றே இளைப்பாறுதல்!

நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ திருவெண்காட்டில் வீற்றிருக்கும் புத பகவான் பற்றிய கட்டுரை, அங்கு சென்று, அப்புண்ணிய ஸ்தலத்தை நேரில் தரிசனம் செய்த மனநிறைவை ஏற்படுத்தியது!

போடிநாயக்கனூர், எம். பாலசுப்ரமணியன்.

✉ சென்ற இதழில் வெளியான ஜோக்குகளை விட, 'கண்ணுபடப் போகுதய்யா' விமர்சனம் அதிக சிரிப்பை வரவழைத்தது!

சென்னை – 73, ப்ரியக்குமார்.

✉ நளினிக்கு மன்னிப்பு வழங்க வேண்டும் என்று கோரிக்கை விடுத்தபோது ஹீரோயினாகத் தெரிந்த சோனியா, கோரிக்கைக்குப் பின்னிருந்த 'கதை'யைப் பார்த்த பின் ஜீரோவாகத் தெரிகிறார்!

காரைக்குடி–1, பாலு.

✉ ஒருபுறம் மகளிர் அமைப்பு, மறுபுறம் கலைஞர் – ராம்தாஸ் போன்ற தலைவர்கள் – மரண தண்டனையை ஆயுள் தண்டனையாக மாற்ற வேண்டும் என்கிறார்கள். பெண் என்றால் இத்தனை பயங்கரமான செயல் செய்திருக்கலாமா! செய்த பின்னரே சிறையில் காதல், குழந்தைப் பிறப்பு என தொடர்ந்திருக்கிறது. திருமணமாகி, குழந்தையைத் தவிக்க வைத்து விட்டு, எதிர்பாராமல் வழக்கில் மாட்டியவரா நளினி? நளினி போன்ற நால்வரைப் பற்றியே பேசுகிறோமே! இவர்கள் செய்த செயலால் ராஜீவுடன், போலீஸ் உயர் அதிகாரி உட்பட அப்பாவி மக்கள் 15 பேருக்கு மேலாக இறந்த அவர்களின் குடும்பம் எப்படி இருக்கிறது என்று அறிய யாராவது முயற்சிகள் எடுக்கிறார்களா? இந்த நாட்டில் இரக்கம், சகிப்புத் தன்மை என்பதற்கு அர்த்தம், அரசியல் சாசனத்தில் சரியாய் எழுதப்படவில்லையா?

காஞ்சிபுரம்,

தென்காசி தெ. கணேசன்.

✉ இளைஞர்களால், 'இனக் கவர்ச்சி'யை தூர எறிந்துவிட்டு, சக மாணவிகளிடம் மாசு மருவில்லாத தோழமையை கொள்ள முடியும் என்பதைத் தெளிவாகக் காட்டியது சிதா ரவியின் 'தோழன்' சிறுகதை.

குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

✉ ஒரு வழி அடைக்கப்பட்டால் இன்னொரு வழியை ஆண்டவன் காட்டுவார் என்பது திருமதி வள்ளியம்மை விஷயத்தில் உண்மையாகியிருக்கிறது. அவருடைய குடும்ப வாழ்க்கை பாதியில் இருண்டு போனாலும் காந்தியடிகளின் சொல்லை வேத வாக்காக ஏற்று, 1500 பேருக்கு வழி காட்டும் ஒளி விளக்காக அவர் வாழ்கிறார் என்பதில் ஐயம் இல்லை. அவருடைய சேவா நிலையத்தைத் தன்னலமில்லாமல் கவனிக்கும் ஒருவர் கிடைக்க, இறைவனைப் பிரார்த்திக்கிறோம்!

சென்னை – 59,

ரொசாரியோ ரவிச்சந்திரன்.



• திண்டாட்டம்!



• விமர்சனப் புயல்

● சூரியன், லால்குடி.

*? கற்பழிப்பு குற்றத்துக்கு மரண தண்டனை விதிக்க சட்டத் திருத்தம் கொண்டு வர முனையும் மத்திய அரசின் செயல் சரியானதா?*

! ஒரு பக்கம் கற்பழிப்புக்கு மரண தண்டனை என்று கூச்சலிடுகிறார்கள்; மறுபக்கம் மரண தண்டனையையே ரத்து செய்ய வேண்டும் என்று கோரிக்கை எழுப்புகிறார்கள். இரண்டுமே தப்பு! எல்லாமே அரசியலாகி விட்டது போங்கள். ஜனநாயகம் என்பது சட்டத்தின் ஆட்சிதானே தவிர, சட்டத்தை அரசியல் வசதிக்காகத் திருத்திக் கொண்டே போகும் ஆட்சியல்ல.

● பி. பத்மாவதி, கோவை – 9.

*? நல்ல நண்பனைப் பகைத்துக்கொண்டு பாம்பும் தேளும் வாழும் பாவ வீட்டில் குடியிருக்க த.மா.கா செல்வது, புத்தியுள்ள நேர்மையான செயலா?*

! இல்லையென்பதால்தான் பொதுக்குழு செயற்குழு கூட்டங்களில் உருப்படியாக எந்த முடிவுகளும் எடுக்க முடியாமல் அக் கட்சி திண்டாடுகிறது.

● ஷ்யாமளா சுவாமிநாதன்,
திருவனந்தபுரம் ★

*? ராஜஸ்தான்த்தில் தலித் இனத்தின் பால்மீகி பிரிவைச் சேர்ந்த குழந்தைகள் பள்ளிகளில் மற்ற சிறுவர்களுடன் சேர்ந்து படிக்க அம்மாநில மேல்மட்ட மக்கள் இடம் தராததைக் கேட்கும்போது மனம் குமுறுகிறதே?*

! ஜாதியாலோ பணத்தாலோ யாரும் மேல்மட்ட மக்களாகி விட முடியாது; பண்பட்ட இதயம் உள்ளவர்களே மேல் மக்கள். மேல் மட்ட மக்களாகக் கருதப்படுபவர்களே இதைப் புரிந்து கொள்ளவில்லை எனில் தவறு எங்கே இருக்கிறது? ஐம்பது ஆண்டுகளில் கல்வியின் தரமும் தன்மையும் ஆழமும் வீச்சும் உயராதது தான் காரணம்.

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? சிறந்த கேள்விக்கான பரிசுத் தொகை அதே நிலையில் உள்ளதே. மாற்றம் வருமா தராசாரே?*

! இதோ உயர்கிறது ரூ 75 ஆக. முதல் பரிசு ரூ 50; இரண்டாம் பரிசு ரூ 25!

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு.

*? பிரபல சமூக சேவகர் பாபா அம்தேவுக்கு காந்தி சமாதான விருது வழங்கப்படுவது பற்றி...?*

! தொழு நோயாளிகளுக்காகச் சேவை செய்த சாதனையாளர்; நர்மதா பசாவ் ஆந்தோளனின் ஆதரவாளர்; விருதுக்குத் தகுதியானவர்.

# ரஜினி சாதித்தது என்ன?

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? ஐம்பதாண்டுகளில் அரசியல்வாதிகள், அதிகார வர்க்கத்தினர், நீதித் துறையினர் சேர்த்துள்ள அசையா சொத்துக்களைக் கணிக்கும் பொறுப்பை*



• வெள்ளமணி சாதனை!



• காரியம் யாவிலும்...



• தகுதிக்குக் கிடைத்தது



• ஆறுதல் பரிசு...!

தேசிய ஆணையம் அமைத்து அதனிடம் ஒப்படைக்க வேண்டும் என்று சரத் யாதவ் யோசனை தெரிவித்துள்ளாரே...?

! தேசிய ஆணையமெல்லாம் போகாத ஊருக்கு வழி. வெட்டிச் செலவு. நீதிபதிகள் எல்லோரும் பதவி ஏற்கும் முன் தங்கள் சொத்துப் பட்டியலை பகிரங்கப்படுத்த வேண்டும் என்ற உச்ச நீதிமன்ற பிரதம நீதிபதியின் யோசனையை நீதித்துறை ஏற்று அமுல்படுத்தினால் போதும். அந்த ஆரோக்கியமான பழக்கம் அரசியலுக்கும் பரவும்; அதிகாரிகளிடமும் நல்ல பாதிப்பை ஏற்படுத்தும்.

● எஸ்.ஆர். ராஜாமணி, பெங்களூர் – 75.

? வானொலியில் சான்றோர் வாக்கு நிகழ்ச்சியில் 'ஒன்றே குளம் ஒருவனே தேவன்' என்று ஒருவர் சொன்னார். அவரை என்ன செய்யலாம்?

! அதே குளத்தில் பிடித்துத் தள்ளலாம்!

● செ. சல்மான் பாரீஸ், பாம்பன்.

? குழந்தைத் தொழிலாளர் முறையை ஒழிக்க வேண்டும் என்று கூறும் அமெரிக்காவின் செயலைக் கண்டிக்கிறோமே. இதனால் யாருக்குக் கேவலம்?

! அமெரிக்காவை இதற்காகக் கண்டிக்கவில்லை. தொழிலாளர் பிரச்னையை அநாவசியமாக சர்வதேச வர்த்தகத் திட்டங்களில் கொண்டு வந்து புகுத்துவதைத்தான் ஆட்சேபிக்கிறோம். தொழிலாளர் நலன் பிரச்னை என்பது உள்நாட்டு விவகாரம். அதை நமது அரசு சந்திக்கும்போது, அது குழந்தைகளை வேலை வாங்கும் பிரச்னை மட்டுமல்ல; அவர்களுக்குச் சோறு போட முடியாத பெற்றோரின் வறுமைப் பிரச்னை என்பதையும் உணர வேண்டும்.

## நீங்கள் கேட்டவை – தராசு

● ஆர்.பி. ப்ரியன், வேலூர்.

? இந்த நூற்றாண்டின் இறுதி உலக அழகிப் போட்டியில் இந்தியாவைச் சேர்ந்த (மும்பை) யுக்தா முகி, உலக அழகியாகத் தேர்வு செய்யப்பட்டிருப்பதைப் பற்றி...?

! உலக அரங்கில் அரசியல்வாதிகள் இந்தியாவின் கௌரவத்தை உயர்த்தாத நிலையில், அழகிகள் தரும் கௌரவத்தால் திருப்தி அடைய வேண்டியதுதான்!

● ஏ. ரஹீம் கஸாலி ஷமீம், அரசர்குளம்.

? விமர்சனத்துக்கு அப்பாற்பட்ட காந்திஜியை தமது ஹே ராம் படத்தின் மூலம் கமல்ஹாசன் விமர்சித்திருக்கிறார் என த.மா.கா குற்றம் சாட்டுகிறதே?

! விமர்சிப்பதில் தவறு கிடையாது. காந்திஜியும் விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவர் அல்ல. அது அவதூறாக மாறிவிட அனுமதிக்க முடியாது. சென்சார் இதைக் கவனிக்காமல் போனால், சமூக நல அமைப்புகள் பல உள்ளன. அவை எதிர்ப்புக் குரல் எழுப்பும்.

• போகாத ஊர்!

● சூர்யநிலா, சேலம் – 9.

? நாகூர் மீரானுக்கு மூன்று வருட சிறை சரி... அவர் மனைவிக்கு தண்டனை சரியா?

! காரியம் யாவிலும் கை கொடுத்ததாக நீதிமன்றம் ஏற்றிருக்கிறதே!

● எம். மகேந்திர முருகன், எடுத்தனூர். ❑

? ரஜினியின் 25 ஆண்டு கால கலைச் சேவையில் அவர் சாதித்தது என்ன...?

! லட்சக்கணக்கில் சம்பாதித்தார் – பணத்தையும் ரசிகர்களையும். தற்போது அயல்நாட்டு ரசிகர்களையும் ஏராளமாகக் கவர்ந்திருப்பதால் அந்நியச் செலாவணியையும் நம் தேசத்துக்குக் கணிசமாகச் சம்பாதித்துத் தருகிறார்.

❑ ரூ. 50 முதல் பரிசு பெறுபவர்:
எம். மகேந்திர முருகன்,
எடுத்தனூர் அஞ்சல்,
சங்கராபுரம் தாலுகா,
விழுப்புரம் மாவட்டம்,
605 802

★ ரூ. 25 இரண்டாம் பரிசு பெறுபவர்:
ஷ்யாமளா சுவாமிநாதன்
42/902 (5),
செப்பில் தெரு,
ஸ்ரீவராஹம்,
வல்லக்கடவு அஞ்சல்,
திருவனந்தபுரம் 695 008

## பிரபஞ்சன்

# முதல் மனமுகுவரி

கனகராஜ் வந்திருந்தான். இந்த முறை, அரவிந்தன் துணையோடு, தில்லிச் சமாசாரத்தை முடித்துக் கொண்டு போய்விட வேண்டும் என்பது அவன் நோக்கமாக இருந்தது. இந்த முறை அவனுடன், அவன் அம்மா, சுகந்தி அம்மாளும் வந்திருந்தாள்.

அத்தையும் கணவனும், விடியும் போது வந்து சேர்ந்தார்கள். தோட்டத்தில் காக்கை ஒன்று, கிணற்றடித் தண்ணீரில் குளித்துக் கொண்டிருந்தது. காக்கை குளிப்பதை வேடிக்கை பார்த்தபடி நின்றிருந்தாள் பாரதி.

அவளைத் தேடிக் கொண்டு தோட்டத்துக்கே வந்து சேர்ந்தாள், சுகந்தி.

"வாங்க அத்தை.... வாங்க, வாங்க!"

சுகந்தி, அவள் கைகளைப் பற்றிக்கொண்டாள்.

"எத்தனை நாள் ஆச்சு? சௌக்கியமா இருக்கியாம்மா. கனகும் வந்திருக்கான்."

"வாங்க... காப்பி போட்டுத் தர்றேன்."

"காப்பி, எங்கும் ஓடாது. இரு. எப்படிம்மா இருக்கே?"

"இருக்கேன்."

"புரியுது. உனக்கு ஏத்த கணவன் இல்லை, என் மகன். காட்டுக்குள்ள, கற்பக மரத்தைப் பார்த்த விறகுவெட்டிக்கு, கோடலி ஞாபகம் வந்த மாதிரி, எல்லாம் கோளாறாக அமைஞ்சுட்டது..."

"அதெல்லாம் ஒன்றும் இல்லை, அத்தை. வாங்க உள்ளே போகலாம்."

அவர்கள் உள்ளே வந்தார்கள். கனகராஜ், குளிக்க மாடிக்குப் போயிருந்தான். அப்பா, விருந்தினர்களை வரவேற்கும் பொருட்டாக, வீட்டில் தங்கி விட்டார்.

குளித்து வந்தவன், பாரதியை அறைக்குள் அழைத்தான்.

"என்ன பாரதி... அரவிந்தனுடன், அந்த லைசென்ஸ் பற்றிப் பேசினியா?"

பொய் சொல்லக் கூடாது என்பது அவள் பிரதிக்ஞையாக இருந்தது. என்றாலும், வாழ்க்கை, மனிதர்களை நிர்ப்பந்திக்கிறது, கெட்டுப் போகச் சொல்லி.

"இன்னும் பேசலை."

"சரி. பரவாயில்லை. பத்து மணிக்கு, அவர்



ஆபீசுக்கே போயிடலாம்."

"..............."

"என்ன, பேச மாட்டியா?"

"சரி."

"உன்னைத்தான் நம்பியிருக்கேன். கவிழ்த்திடாதே."

குழந்தையைத் தயார் பண்ணிப் பள்ளிக்கு அனுப்பி வைத்து, எல்லோருக்கும் பலகாரம் பண்ணி அனுப்பி வைத்து, கனகராஜுடன் அரவிந்தன் அலுவலகம் புறப்பட்டாள் பாரதி. மனம், மரத்துக் கிடந்தது அவளுக்கு. செய்யக் கூடாத வேலைக்குப் பணிக்கப்பட்டவள் போல், ஆட்டோவில், சுருங்கிய ஆமை போல், பயணம் செய்தாள். அரவிந்தன், கம்ப்யூட்டர்களுக்கு முன்னால் உட்கார்ந்து அவைகளுடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தான். ஆச்சர்யமாகவும், மகிழ்ச்சியாகவும் இவர்களை அவன் வரவேற்றான். காப்பிக்குச் சொன்னான்.

"ஏதாவது விசேஷமா, கனகராஜ் சார்?"

"உங்களால் ஒரு உதவி ஆக வேணும்."

டெல்லியில், அவனது தூங்கும் பைல், அதைத் தட்டி எழுப்ப வேண்டிய நிர்ப்பந்தம், அதனால், இவனுக்கு ஆக வேண்டிய லாபம்... என்று சொல்லிவிட்டு, ஒரு ஃபைலை அவன் முன் வைத்தான்.

அரவிந்தன், பாரதியின் முகத்தைப் பார்த்தான். கனகராஜ் கொடுத்த ஃபைலில் கண்ட சமாசாரங்களைப் படித்து முடித்தான்.

"சட்டத்துக்குப் புறம்பான காரியம் போல் இருக்கிறதே?"

"அப்படித் தோன்றும். ஆனால், அரசாங்கத்தில் இருப்பவர்கள், இது போல சட்ட மீறுதல்கள் நிறைய செய்திருக்கிறார்கள். அதுக்கான முன்னுதாரணம் நிறைய இருக்கு, அரவிந்தன்."

"இருக்கலாம், அப்படி நிலைமை இருக்கக் கூடாது என்றுதான், நாம் பேசுகிறோம். பாட்டு எழுதுகிறோம். போராட்டம் நடத்துகிறோம்."

"அதெல்லாம் ஒரு பக்கம் இருக்கட்டும். ஒரு பக்கம், இதுவும் நடக்க் வேண்டும். மறு பக்கம், பிரசாரமும் நடக்க வேண்டும். யோசியுங்கள். நம் பிரதிநிதிகள், எத்தனை பேர், சட்டம் ஒழுங்கை மீறாதவர்கள்? அவர்களால் போடப்படும் சட்டம் மட்டும் நியாயமாக இருக்குமா? நியாயமாக அமல் நடத்தப்படுமா?"

அரவிந்தன், பாரதியைப் பார்த்தான். அவள், மேசை மேல் இருந்த பேப்பர் வெயிட்டையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இதனால், எனக்குக் கிடைக்கும் லாபம் சுமார் ஐம்பது லட்சம். எல்லாச் செலவும் போக... சம்பந்தப்பட்ட அமைச்சருக்கு, வேலையில் சம்பந்தப்பட்ட உங்களுக்கு..."

"என்ன, என்ன..." என்று பதறினான் அரவிந்தன்.

"உங்கள் செல்வாக்கை நான் பயன்படுத்திக் கொள்ள, நான் கொடுக்கிற கட்டணம், அது."

அரவிந்தன், பாரதியைப் பார்த்தான்.

பாரதி, கணவனைப் பார்த்து, "போவோமா" என்றாள்.

"இரு. சார் ஒன்றும் சொல்லவேயில்லையே..."

அரவிந்தன், மனம் கசந்து, "இதில் நான் சம்பந்தப்பட ஒன்றும் இல்லை" என்றான்.

"சார்... உங்களுக்குப் பத்து லட்சம் கிடைக்கும்."

அரவிந்தன், பாரதியைப் பார்த்து, "என்ன சொல்றீங்க, பாரதி மேடம்" என்றான்.

"அவள் என்ன எனக்கு எதிராகவா சொல்லப் போறா?"

பாரதி, தலையை உயர்த்தி, அரவிந்தனிடம் சொன்னாள்.

"அரவிந்தன், இந்த வேலையை, யாருக்காகவும், எதன் பொருட்டும் நீங்கள் செய்ய வேண்டாம். இது பொதுத் தொண்டு இல்லை. அதுவும், சட்டத்தை மீறிய காரியம். வேணாம். செய்ய வேணாம்."

அதிர்ச்சியில், உறைந்து போனான், கனகராஜ். தன் பைல்களைச் சேகரித்துக் கொண்டான். பிரீப்கேசில் அவைகளை வைத்துக் கொண்டு, எழுந்து நின்றான். பாரதியும்

---



"நீங்க லோன் வாங்கின பத்தாயிரம் அப்படியே ஒரு வருஷமா கிடக்கு; வட்டி நான்காயிரம் சேர்ந்து இப்ப பதினான்காயிரம் ஆயிடிச்சு..."

"அப்ப பதினைஞ்சாயிரத்துக்கு லோன் போட்டு பழசை அடைச்சிடுங்க! பாக்கி ஆயிரம் ரூபாயைக் கொடுத்துடுங்க!"

– சீர்காழி ரேவதி

எழுந்தாள். அவன் அவள் பக்கம் திரும்பாமல், விடுவிடுவென்று இறங்கித் தெருவுக்கு வந்தான். வந்து நின்ற ஆட்டோவில் ஏறி, போய்ச் சேர்ந்தான். அவன் பின்னாலேயே ஓட்டமும் நடையுமாக இறங்கி வந்த பாரதியைக் கொஞ்சமும் கவனிக்காமல், அவன் போனான். விக்கித்துப் போய்த் தெருவில் நின்றாள், பாரதி.

மாடியிலிருந்து நடந்ததைக் கவனித்துக் கொண்டிருந்த அரவிந்தன், கீழே இறங்கி ஓடி வந்தான். ''மேலே போவோம், வாருங்கள்'' என்று அவளை மேலே அழைத்து வந்தான். அரை மயக்கத்திலும், அவமானத்திலும், நிலைகுலைந்து போயிருந்தாள், பாரதி. அவள் ஆசுவாசப்படட்டும் என்று காத்திருந்தான் அவன். சற்று நேரம் கழித்து, ''மன்னிக்கணும்... உங்களுக்குச் சிரமம் கொடுத்துட்டேன்...'' என்றபடி புறப்பட எழுந்தாள்.

"இருங்கள். தனியாகப் போக வேணாம். சற்று நேரம் பொறுங்கள்."

பாரதி தலைகவிழ்ந்து அமர்ந்திருந்தாள். அந்த ஏ.சி. அறையிலும் அவள் முகம் வேர்த்திருந்தது.

அரவிந்தன் அவளிடம் சொன்னான்.

''நான் உங்களைப் பாராட்டறேன். ஆனா..."

"எனக்குத் தெரியும். பிரச்னை பூதாகரமாகும்."

"எனக்கும் அதுதான் பயமா இருக்கு."

''வருவது வரட்டும். எல்லாம், ஏற்கெனவே எழுதப்பட்ட சங்கதிதான். நூல் பிடித்த மாதிரிதான் எல்லாம் நடக்கும். நம்மால் ஆவது எதுவுமில்லை. பார்ப்போம்.''

"சத்தியம், உங்களைக் காக்கும், பாரதி மேடம்."

அவள் எழுந்தாள். அவனும் துணையாக வருவதாகச் சொல்லி எழுந்தான். அரக்கப் பரக்க வந்து சேர்ந்தாள் லலிதா.

"வீடு விஷயமா ரிஜிஸ்தர் ஆபீசுக்குப் போனதில் லேட். எப்படி வந்தே, பாரதி?"

அரவிந்தன் சுருக்கமாக நடந்ததைச் சொன்னான். திகைத்துப் போனாள் லலிதா. அவன் கையைப் பற்றிக் குலுக்கினாள்.

''எனக்குப் பெருமையா இருக்கு. ஆனா...?"

"இந்த ஆனாவைத்தான், அரவிந்தனும் கேட்டார். என்ன நடக்கும். அவர் என்னைப் புறக்கணிப்பார். இப்பவே அப்படித் தானே?"

"பாரதி, எதைக் கொடுத்து எதை வாங்கப் போகிறாய்?"



''இப்பல்லாம் நம்ம தலைவர் ரொம்பவும் ஜோக்காகவே பேச ஆரம்பிச்சுட்டார்!''

''அப்படியா!''

''ஆமா... ராஜீவ் கொலையாளிகள்கூட தப்பிக்கற அளவுக்கு சட்டத்திலே ஓட்டையிருக்கேன்னு கேட்டதுக்கு, 'சிமெண்ட் விலை கொஞ்சம் குறையட்டும், எல்லா ஓட்டைகளையும் அடைச்சுடலாங்கறார்!' ''

– புளியரை கணேசன்

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

யோசித்துவிட்டு பாரதி சொன்னாள்.

''மனைவி என்கிற ஸ்தானத்தைக் கொடுத்து விட்டு, அமைதியை வாங்க வேண்டியிருக்கும். இதுகூட, நான் தீர்மானிச்சது இல்லையே.. எல்லாமே என் மேல் திணிக்கப்பட்டதுதானே?"

லலிதாவும், பாரதியுடன் வந்தாள்.

"மனைவியோட கடமை எது வரைக்கும்கிறது, எனக்குத் தெரியலை" என்றாள் லலிதா.

"எனக்கும் தெரியலை. ஆனா, கணவனோட கடமை எதுவோ அதுதான் மனைவிக்கும்தான்னு சொல்றாங்க."

"அப்போ, கணவனோட செக்ரடரிதான் மனைவியா?"

"அப்படித்தான்."

"அப்படின்னா, பொம்பளைக்கு மனசு எதுக்கு, அறிவு எதுக்கு, மூளை எதுக்கு?"

"இதுகள் எல்லாம் சூரியகாந்தி. கணவன் சூரியன். அவன் திரும்பற பக்கமெல்லாம், பெண்கள் திரும்பணும்."

பாரதி சொன்னதும், அரவிந்தனுக்குக் கோபம் வந்து விட்டது.

"நீங்களே விரும்பி இந்தக் கஷ்டங்களையெல்லாம், மேலே போட்டுக் கொள்கிறீர்கள். பின்னால், வருந்துகிறீர்கள்."

"நடக்கப் போவதை யோசி."

பாரதி, நடந்து கொண்டே சொன்னாள்.

"என்ன நடக்கும்? அவருக்கு நான் அவசியப்படாதவள். ஆனாலும், மனைவி என்கிறவள், ஆணுக்கு, ஒரு சரிகை அங்கவஸ்திரம் போல. ஒரு அழகுக்கு! ஆணின் கௌரவத்தை அதிகப்படுத்துகிற ஒரு வஸ்து. இப்போ, நான் தூக்கி எறியப்படுவேன்."

அரவிந்தன் சொன்னான்.



## வந்தாச்சு விருது

குரு பத்மா சுப்ரமண்யம் நாரத கான சபாவில் 'நாத பிரும்மம்' ஆகிறார் என்றால், அவர் சிசிறியும் மாணவியுமான மீனாக்ஷி சித்தரஞ்சன், கிருஷ்ண கான சபாவில் 'நிருத்ய சூடாமணி' ஆகிறார். மீனாக்ஷி 'டான்ஸ் தியரி' பயின்றது பத்மாவிடம்.

– டி. என். சித்ரா

"பாரதி என்கிற கலைஞரை யாரும் விசி எறிய முடியாது."

"அப்படியென்றால், மனைவியும் கலைஞரும் ஒன்றாக இருக்க முடியாது என்கிறாயா அரவிந்தன்?" என்று லலிதா கேட்ட கேள்விக்கு, அரவிந்தனால் பதில் சொல்ல முடிந்தது.

"சில விதிவிலக்குகள் உண்டு. பொதுவாக, மனைவிக்கு முதல் தடை, கணவன்தான். அவனது, விஸ்தீரணம், உயரம், பெருமை எல்லாம், ஆணைச் சிறுமைப் படுத்தும் விஷயமாக இருந்து விடுகிறது."

அரவிந்தன், தெருமுனையில் விடை பெற்றுக் கொண்டான்.

லலிதாவும், பாரதியும் வீட்டுக்குள் நுழைந்தார்கள். கனகராஜ், புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருந்தான். கூடத்தில், சுகந்தியும், வைத்யநாதனும் பேசாமல், மௌனமாக இருந்தார்கள்.

கனகராஜ், "ஆட்டோ அழைச்சுட்டு வர்றேம்மா" என்றபடி வெளியே போனான்.

லலிதா, பாரதியின் அப்பாவைப் பார்த்து, "என்னப்பா," என்றாள்.

''மாப்பிள்ளை கோவிச்சுக்கிட்டு ஊருக்குக் கிளம்பறார்."

"என்னவாம்?"

அவர் பதில் பேசவில்லை.

சுகந்தி பேசினாள்.

''பாரதி, அங்கே கனகராஜுக்கு ஆதரவா நீ பேசலையாமே?"

"ஆமாம். அத்தை."

"ஏன்?"

''தர்மம், கணவரை விட பெரிசு. அதனால, பேசலை."

கல் மாதிரி மௌனம் நிலவியது. அதைச் சுகந்தி உடைத்தாள்.

"உண்மைதான். தர்மம்தான் பெரிசு. அயோக்கியனுக்கு, மனைவியானதால, நீயும் தப்புப் பண்ணணும்னு அவசியம் இல்லை. நான் உன்னை ஒரு போதும் குத்தம் சொன்னது இல்லை. இப்பவும் சொல்றேன். இந்தச் சத்தியம், நேர்மை உன்னை வாழவைக்கும். நீ இப்படியே இரு..."

ஆட்டோ சப்தம் கேட்டது.

ஆட்டோவில் அமர்ந்திருந்தான் கனகராஜ். பெட்டியை எடுத்துக் கொண்டு, வைத்யநாதனிடம் சொல்லிக் கொண்டாள், சுகந்தி.

"அண்ணா, நான் புறப்படறேன்."

"க்ஷேமமா போய் வாங்க."

"கவலை வேணாம். நல்ல முயற்சி செய்யலாம்."

"சரி."

"வர்றேன், பாரதி."

"போய் வாங்க."

கனகராஜ், ஆட்டோ புறப்படும் வரைக்கும், இவள் பக்கம் திரும்பவே இல்லை. ஆட்டோ கண்ணுக்கு மறையும் வரைக்கும், நின்று பார்த்து விட்டுத் திரும்பினார்கள் பாரதியும், லலிதாவும்.

அப்பா சொன்னார்.

''நடக்கிறபடி நடக்கட்டும்மா... நீ செய்தது, ரொம்ப சரி."

(தொடரும்)

திருச்சூர் ராமசந்திரனுக்கும் அவர் மனைவி சாருமதிக்கும் ஒருசேர சங்கீத கலா சிரோன்மணி விருது அளித்து கௌரவித்துள்ளது நுங்கம்பாக்கம் கல்சுரல் அகாடமி. தமக்கு மட்டுமின்றி தம் மனைவிக்கும் விருது கிடைத்ததில் ராமசந்திரனுக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. அதுபோலவே தமக்கும், தம் கணவருக்கும் விருது தரப்பட்டதில் சாருமதிக்கும் இரட்டை மகிழ்ச்சி. ஆக மொத்தத்தில் நாலு மடங்கு சந்தோஷம். பெருக்கெடுத்து ஓடுகிறது இவர்கள் வீட்டில்!

# “கணவன் மனைவி இடையே என்ன ஈகோ வேண்டிக்கிடக்கிறது!”







பி.எஸ்ஸி கெமிஸ்ட்ரி படித்து விட்டு, மெடிகல் சீட் கிடைத்து கல்லூரியிலும் சேர்ந்தபின், இசையால் ஈர்க்கப்பட்டு, ஸ்டெதாஸ் கோப்புக்கு குட்பை சொன்னவர் ராமசந்திரன். பி.ஏ. மியூசிக் பட்டதாரி சாருமதி. இசை ஞானம் உள்ள பெண் வேண்டும் என்று ராமசந்திரன் வீட்டில்தேட, சிக்கினார் சாருமதி.

சாருமதி எம்.எல்.வியின் சிஷ்யை. ராமசந்திரனின் குரு வரிசையில் முக்கியமானவர் ஜி.என்.பி. ஆக, தம்பதிகளின் பாணி, ஜி.என்.பி. பாணி!

“பிரசித்தி பெற்ற தோடி, கல்யாணி, காம்போதி போன்ற ராகங்களை அதிகமாகப் பாடு! கிருதிகளை தேர்ந்தெடுத்துப் பாடு! சீனியர் வித்வான்களின் கச்சேரிகளை நிறைய கேள்!” இதுதான் ஜி.என்.பி. தமது சீடருக்குக் கொடுத்த வெற்றி ரகசியம். வெற்றிகரமாகக் கடைப் பிடித்து வருகிறார் ராமசந்திரன். ஜி.என்.பி. பற்றி குட்டி லெக்சரே அடித்தார். ஒரு தடவை, ஜி.என்.பி. பாடிக் கொண்டிருந்தபோது, அவரது ஆப்த நண்பரான ராஜரத்தினம் பிள்ளை (நாதசுரம்) வந்து விட்டார். இருவரும் கண்களாலேயே குசலம் விசாரித்துக் கொண்ட பின், பிள்ளை, தமது காதுத் தோட்டைத் தொட்டுக்காட்ட, அடுத்து ஜி.என்.பி. வெளுத்து வாங்கினது தோடி(டு)! பிள்ளை, ‘அடிக்கடி ஐயா (ஜி.என்.பி) பாடணும்; நான் ஊதணும்’ என்பாராம்.

“எம்.எல்.வி. மேடையில் கூட பாடச் சொல்லுவார். பாடிக் கொண்டே இருக்கிற போது, சரியாக ஓர் இடத்தில் நிறுத்திவிட்டு, நிரவலை நீ பாடு!’ என்று சொல்லி டெஸ்ட் வைப்பார். பெரும்பாலும் நான் தேறிவிடுவேன். ஓரிரு சமயங்களில் புதிய கிருதிகளாய், பயிற்சி செய்யாததாக இருந்தால், என் தடுமாற்றத்தை கண நேரத்தில் புரிந்து கொண்டு தாமே தொடருவார்” என்று நினைவுகளை மலரச் செய்தார் சாருமதி. “கத்திப் பாடாதே! நம்ம குரலுக்கு எத்தனை உச்சத்துக்குப் போக

முடியும்னு தெரிஞ்சு பாடணும். சும்மா கத்தி, கனைச்சு, குடத்துல கல்லைப் போட்டு உருட்டறாப்போல பாடக் கூடாது" என்பாராம் எம்.எல்.வி. அறிவுரையை கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு விட்டார் சிஷ்யை.

"இருவரும் ஒருவர் கச்சேரியை மற்றவர் கேட்டு, பரஸ்பரம் விமர்சனம் செய்து கொள்ளுவீர்களா?"

"அந்த விஷயத்தில், நாங்கள் ஒரு ஃபார்முலாவைக் கடைபிடித்து வருகிறோம். கச்சேரி முடிந்தவுடன், அடுத்த நிமிடம் 'கச்சேரி பிரமாதம்!' என்று பாராட்டிக் கொண்டு விடுவோம். அப்புறம் கச்சேரியில் பிளஸ் பாயிண்ட்களைச் சொல்லிக் கொள்ளுவோம். வீட்டுக்கு வந்து, நிதானமாக, இன்னின்ன இடங்களில் இன்னும் பெட்டராகப் பாடி இருக்கலாம் என்போம். சிற்சில சமயங்களில் ரொம்பக் கடுமையாகவே விமர்சித்துக் கொள்ளுவோம். அது சண்டையில் போய் முடிந்தது கூட உண்டு. அப்புறம் சமாதானமாகி விடுவோம்."



**ச**யாம் நாட்டு மன்னரின் முடிசூட்டு விழாவின் போது 'திருவாசகப் பாடல்' ஒன்றைத் தமிழிலேயே பாடும் வழக்கம் நடைமுறையில் இருக்கிறது.

— பா. குணா

"இரண்டு பேரும் இசைக் கலைஞர்களாக இருப்பதால் ஏதாவது கஷ்டங்கள் உண்டா?"

"ஓ! இல்லாமல் என்ன? ஒரு சீசனில், ஒரு சபாவில் யாராவது ஒருவருக்குத்தான் கச்சேரி சான்ஸ் கொடுக்கிறார்கள். இந்த விதி, இங்கே தான் என்று இல்லை. வெளியூர்களிலும், அயல்நாடுகளிலும் கூட கடைப் பிடிக்கப் படுகிறது! எங்கள் இரண்டு பேரில் நான்தான் தியாகி! எனக்குப் பாடுவது தவிர குடும்பத்தை கவனிப்பது என்ற கூடுதல் பொறுப்பும் இருக்கிறதே! அவருக்குக் கச்சேரி இருந்தால், அந்த நாட்களில் நான் கச்சேரிக்கு ஒத்துக் கொள்ளுவதில்லை. இதன் காரணமாகவே நான் பல கச்சேரி வாய்ப்புகளை இழந்திருக்கிறேன்" என்கிறார் சாருமதி.

"உங்களுக்குள்ளே, ஈகோ மோதல்கள் வந்திருக்குமே! எப்படி சமாளித்தீர்கள்?"

"குரல் என்பது ஆண்டவனின் அருள். அதை சாதகம் பண்ணுவதன் மூலம் நாம் மேலும் மெருகூட்டிக் கொள்ளுகிறோம். எனவே, நாம் சிறந்த பாடகர் என்ற திமிர் என்றைக்கும் வரக் கூடாது என்று என் குரு அடிக்கடி சொல்லுவார். ஆகவே எனக்கு எப்போதுமே ஈகோ கிடையாது. அதுவுமில்லாமல், கணவன், மனைவிக்குள்ளே இரண்டு பேரும் ஒரே துறையில் இருக்கிறபோதும் சரி, இல்லாது போனாலும் சரி, என்ன ஈகோ வேண்டிக் கிடக்கிறது?' என்று கேட்கிறார் ராமசந்திரன்.

"என்னைவிட அவர் வயசில் மூத்தவர்; இசையிலும் என்னைவிட சீனியர். எனவே எங்களுக்குள் ஈகோ பிரச்னை வந்தது இல்லை. ஒருவருக்குக் கிடைக்கும் புகழும், பாராட்டும் இரண்டு பேருக்குமே சந்தோஷத்தைத்தான் தருகிறது" என்கிறார் சாருமதி.

"இரண்டு பேரும் சேர்ந்து ஒரே மேடையில் கச்சேரி செய்திருக்கிறீர்களா?"

"1973ல் எங்களுக்குக் கல்யாணம். இந்த இருபத்தி ஆறு வருஷத்தில் நாங்கள் நாலைந்து தடவை சேர்ந்து கச்சேரி செய் திருப்போம். அந்த கச்சேரிகள் மிகச் சிறப்பாக இருந்தது என்று இருவருமே ஒப்புக் கொள்ள மாட்டோம். காரணம், எங்கள் இரண்டு பேருடைய ஸ்ருதியும் ஒத்துப் போகாது."

"இரண்டு பேரும் வீட்டிலாவது ஒன்றாக சாதகம் பண்ணுவதுண்டா?"

"எனக்கு நேரம் கிடைக்கிறபோது நானும் அவளுக்கு நேரம் கிடைக்கிறபோது அவளும் சாதகம் பண்ணுவோம்"-ஜோக் அடித்தாற் போல சிரிக்கிறார் ராமசந்திரன்.

"இரண்டு பேருக்கும் ஒரே சபாவின் விருது, ஒரே நேரத்தில் கிடைத்திருக்கிறதே! உங்கள் ரியாக்ஷன் என்ன?"

"எனக்கு ரொம்ப ஆச்சரியமாக இருந்தது" என்பது சாருமதியின் ரியாக்ஷன். "இரட்டையர்களாகப் பாடிக் கொண்டிருந்தவர்களைக் கூட பெரிய சபாக்கள் ஒருசேர கௌரவித்தது இல்லை. உதாரணமாக பிருந்தா-முக்தா இருவரில் பிருந்தாவுக்கு மியூசிக் அகாடமி கௌரவம் கிடைத்தது. முக்தாவுக்குக் கிடைக்கவில்லை. அப்படி இருக்கிறபோது, இந்த நூற்றாண்டின் இறுதியில், சேர்ந்து கச்சேரி செய்யாத எங்கள் இருவரையும் ஒருசேர கௌரவித்திருக்கிறது நுங்கம்பாக்கம் கல்சுரல் அகாடமி."

சந்திப்பு: **கௌதம்ராம்**

படங்கள்: **ப்ரவீண்குமார், ஸ்ரீஹரி**

# ரமணி மீட்ஸ் ரமணி

**இந்த வருட இசைப் பேரொளி, பாபநாசம் அசோக்ரமணி. இந்த வருட சூப்பர் ஹிட் இசையமைப்பாளர் ரமணி பரத்வாஜ். (அமர்க்களம்– சத்தம் இல்லாத தனிமை கேட்டேன்) இருவரும் நமது இசை ஸ்பெஷலுக்காக சந்தித்து உரையாடினர், கோடம்பாக்கத்திலுள்ள சசி ரெக்கார்டிங் தியேட்டரில். துருவங்களின் சந்திப்பிலிருந்து சில துளிகள் இங்கே:**


• அசோக்ரமணி

**அசோக்ரமணி:** வணக்கம் சார். அமர்க்களம் பாட்டு கேட்டேன். ரொம்ப நல்லா பண்ணியிருக்கீங்க. சார்டர்ட் அகவுண்டண்டாமே நீங்க? எப்படி இந்தத் துறைக்கு வந்தீங்க?

**பரத்வாஜ்:** பள்ளிக்கூட வயசுலேருந்தே இசையமைப்பாளராகணும்னுதான் ஆசை எனக்கு. பூர்வீகம் திருநெல்வேலின்னாலும் வளர்ந்ததெல்லாம் டில்லிலதான். அங்கதான் ம்யூசிக் படிக்க ஆரம்பிச்சேன். பழைய ஹிந்தி இசையமைப்பாளர்கள் அப்ப என்னை ரொம்ப பாதிச்சிருக்காங்க. டெல்லி ஸ்கூல் ஆஃப் ம்யூசிக்ல சேர்ந்து கர்நாடக இசை அடிப்படைகளைக் கத்துக்கிட்டேன். பி.எஸ்ஸி முடிச்சதும் ஒரு பாதுகாப்புக்காக சி.ஏ. படிச்சேன். ஆனா என் நோக்கம் இசையமைப்பாளராகறதுதான். படிப்பு முடிஞ்சதும் சென்னைக்கு வந்துட்டேன். ஃபீல்டைப் பத்தி எதுவும் தெரியாது. கொஞ்ச நாள் போராடி, கேஸட்டுகளுக்கு இசையமைக்க ஆரம்பிச்சேன். பக்திப் பாடல்கள். அப்புறம் விளம்பரப் படங்கள், டி.வி. சீரியல்கள்... விழுதுகள் சீரியல் நல்ல பிரேக் குடுத்தது. அப்புறம் கூட தமிழ் சினிமா வாய்ப்புகள் வரலை. ஆனா, தெலுங்குல கூப்பிட்டாங்க. பதிமூணு படம் வரிசையா செய்தேன்.

**அசோக்:** அதுக்கப்புறம் தான் காதல் மன்னனா?

**பரத்வாஜ்:** ஆமாம்! கதிர்குமார் தெலுங்கு ப்ரொட்யூசர். அங்க என் ஒர்க்கைப் பார்த்துட்டு, பிடிச்சதால அவர் முதல் தமிழ்ப் படம் எடுத்தபோது அதுக்கு என்னைக் கூப்பிட்டார். அதுதான் காதல் மன்னன்.

**அசோக்:** எனக்குத் தெரிஞ்சு, தெலுங்குப் படங்கள்ல இசை ரொம்ப நல்லா இருக்கு. சிரத்தையா செய்யறாங்கன்னு நினைக்கிறேன்.

**பரத்வாஜ்:** அங்க ரெண்டு எல்லையும் உண்டு. ரொம்பத் தரமான பாடல்களும் போடுவாங்க. சூப்பர் மசாலா–டப்பாங்குத்தும் உண்டு.

**அசோக்:** டைரக்டர் சரணோட தொடர்ந்து மூணாவது படம் செய்யறீங்க. அவரோட ரொம்ப நாள் பழக்கமா உங்களுக்கு?

**பரத்வாஜ்:** காதல் மன்னனுக்கு அவரை டைரக்டரா நியமிச்சப்பதான் அறிமுகமானேன். இப்ப நல்ல அண்டர்ஸ்டாண்டிங் வந்திருச்சு ரெண்டு பேருக்கும். நல்ல இசை ரசனை உள்ள இளைஞர்... ஓகே! உங்களைப்



• பரத்வாஜ்



பத்தி சொல்லுங்க. நீங்க பாபநாசம் சிவனோட பேரன் இல்லையா?

**அசோக்:** ஆமாம்! தாத்தா ஒரு காலத்துல திரை உலகத்துல பெரிய நிர்ணயிக்கும் சக்தியா இருந்தார். ஜெமினில அவரை மாசச் சம்பளத்துக்கே வேலைக்கு வெச்சிருந்தாங்க. பாட்டெழுதுவார். இசையமைப்பார். அவரேவும் பாடுவார்.

**பரத்வாஜ்:** பாபநாசம் தான் சொந்த ஊரா உங்களுக்கு?

**அசோக்:** இல்லை! தஞ்சாவூர் பக்கத்துல போலகம்னு ஒரு ஊர்தான் தாத்தா பிறந்த இடம். பாபநாசம், சிவன் கோயில்ல ஒரு தரம் பாடிட்டு வெளில வரும்போது 'சிவனே இறங்கி வராப்பல இருக்கு'ன்னு பார்த்தவங்க சொன்னாங்களாம் அவரை. அப்பலேருந்துதான் அவர் பாபநாசம் சிவன் ஆயிட்டார். அவரோட சொந்தப் பேர் ராமையா. கொஞ்சம் கொஞ்சமா அவர் சினிமாவுக்கு வந்து ஒரு பதினைஞ்சு வருஷம் கொடி கட்டிப் பறந்தார். முதல் பாட்டு கம்போஸிங்குக்கு பூனாவுக்குக் கூட்டிட்டுப் போனதா சொல்லுவாங்க. அது ஏன் சார் எல்லா சினிமாக்காரங்களும் டிஸ்கஷன், கம்போஸிங்னு வந்தா உடனே வெளியூர் போயிடறாங்க? இங்க இருந்தா ஒர்க் பண்ண முடியாதா?

**பரத்வாஜ்:** அந்த வேலைக்குத் தேவையான தனிமை-தனிமைன்னா தனியா இருக்கறதுங்கற அர்த்தமில்லை- குடும்பம், சக ஊழியர்கள், சுத்தியிருக்கறவங்களோட ஞாபகம், தாக்கம் இல்லாம தியானம் மாதிரி செயல்படறதுக்கு இந்தச் சூழ்நிலை ஒத்துவராது. அதுக்காகத்தான் அமைதியான இடம் தேடிப் போறது. இன்னொரு காரணம், 'நாம இந்த வேலைக்காக வந்திருக்கோம்; ஒழுங்கா முடிக்கணுமே'ங்கற பொறுப்புணர்வும் அப்ப கூடுதலா இருக்கும் இல்லியா?

**அசோக்:** கம்போஸிங்னா, வெறும் ட்யூன் மட்டும் ரெடி பண்ணிட்டு வந்துடுவீங்களா?

**பரத்வாஜ்:** ட்யூன் மட்டும் இல்லை. கீ-போர்டை எடுத்துட்டுப் போயிடுவேன். பேஸிக் ட்யூன்ஸ் தவிர, பின்னணி வாத்தியங்களுக்கான நொட்டேஷன்ஸ் எல்லாமும் கூட எழுதி எடுத்துட்டு வந்துடுவேன்.

**அசோக்:** அமர்க்களம் படத்துல 'சத்தம் இல்லாத தனிமை கேட்டேன்' பாட்டு ரொம்ப இம்ப்ரஸிவா இருந்தது. அதை எப்படி கன்ஸீவ் பண்ணீங்கன்னு சொல்லுங்களேன்.



**பரத்வாஜ்:** ஹீரோ தன் கடந்த கால ஏமாற்றங்களை நினைச்சு, எதுவுமே ஏன் நடக்காம போவுதுன்னு வருத்தத்தோட- அதே சமயம் ஆக்ரோஷமா பாடற மாதிரி ஒரு பாட்டு வேணும்னு சரண் கேட்டார். ஹை பிட்சுல, இடைவிடாம இப்படி... (பாடிக்காட்டுகிறார்) அடுக்கிட்டே போறாப்பல அமைச்சேன். பாட்டினுடைய தீவிரத்தைப் படமாக்கற விதத்துலயும் கொண்டு வந்துட்டதால அது சூப்பர் ஹிட் ஆயிடுச்சி... அது இருக்கட்டும்; நீங்க யார்கிட்ட பாட்டு கத்துக்கிட்டீங்க?"

**அசோக்:** எங்கம்மா ருக்மிணி ரமணி தான் என் முதல் குரு. அவங்க பெரிய ம்யூசிக் டீச்சர். வீட்டுல எப்பவும் ஜேஜேன்னு ஸ்டூடன்ட்ஸ் கூட்டம் இருக்கும். பொழுது விடியறதுலேருந்து ராத்திரி படுக்கற வரைக்கும் சங்கீதம் கேட்டுட்டே தான் இருக்கணும்! (சிரிப்பு) நான் முதல்ல ம்ருதங்கம்தான் கத்துக்கிட்டேன். அப்புறம் தான் பாடற ஆசை வந்து, குரலும் நல்லா இருக்கறதாகப் பலர் சொல்லவே முழுமூச்சா பாட்டுல இறங்கிட்டேன். எஸ். ராமநாதன்கிட்ட கத்துக்கிட்டேன். அப்புறம் கல்கத்தா கிருஷ்ணமூர்த்தியிடம்... இந்த

ஸ்டுடியோ இவ்ளோ சின்னதா, மூணே ரூமோட இருக்கே சார்! இங்கதானா நீங்க சினிமாக்களுக்கு ரெக்கார்ட் பண்றீங்க?

**பரத்வாஜ்:** (சிரித்தபடி) இதைவிடச் சின்ன ஸ்டுடியோவெல்லாம் இருக்கு. அந்தக் காலத்துல நூத்துக் கணக்கான வாத்தியங்களை வெச்சிக்கிட்டு செய்வாங்க. இப்ப பாருங்க, என்கிட்டே ரெண்டே யூனிட். சின்தஸைஸர் யூனிட் ஒண்ணு. ரிதம் யூனிட் ஒண்ணு. எல்லா வாத்திய எஃபெக்டையும் இப்ப கம்ப்யூட்டர் கொடுத்துடுது. கூடுதலா பத்து வயலின் வேணும்னா இங்கேயே வந்து வாசிச்சிட்டுப் போயிடுவாங்க. தவிர எல்லா கலைஞர்களும் சேர்ந்து ஒரு பாட்டை ஒரே சமயத்துல உருவாக்கறதுங்கறதும் இல்லை. 'ட்ராக்ஸ்' வந்தாச்சு. ஆளுக்கு ஒரு மணி நேரம்... ஒவ்வொருத்தரா வந்து வாசிச்சிட்டுப் போயிடுவாங்க. பாடகர்கள் தனியா வந்து பாடிட்டுப் போயிடுவாங்க. இந்த வளர்ச்சில யாருக்கு கஷ்டம்னா, என்னை மாதிரி ம்யூசிக் டைரக்டர்ஸுக்குத்தான். நாம மட்டும் எல்லா நேரமும் இங்கேயே இருந்தாகணும். அதனாலதான் கம்போஸிங் நேரத்துல மட்டும் காணாமப் போயிடறது! (சிரிக்கிறார்)

**'கிறிஸ்துமஸ்' தினத்தன்று...**

**1642**-ம் ஆண்டு கிறிஸ்துமஸ் தினத்தன்று ஐசக் நியூட்டன் என்ற விஞ்ஞானி பிறந்தார். 1898-ம் ஆண்டு கிறிஸ்துமஸ் அன்று பெரி, மேரி தம்பதி தங்களின் கண்டு பிடிப்பான ரேடியத்தை உலகுக்கு அறிமுகப்படுத்தினர். 1974-ம் ஆண்டு ஆஸ்திரேலியாவிலுள்ள டார்வின் என்ற நகரம் கிறிஸ்துமஸ் தினத்தன்றுதான் புயலினால் பலத்த சேதமடைந்தது. தகவல்: சித்ராதேவி

**அசோக்:** எங்கப்பா ப்ரொடக்‌ஷன் மானேஜரா இருந்தவர். அவர் கூட நான் சினி ரீ-ரெக்கார்டிங்குக்குப் போய்ப் பார்த்திருக்கேன். அந்தக் காலத்துல, அப்பல்லாம்- நீங்க சொன்ன மாதிரிதான்- பெரிய ஹால்ல மொத்தமா உட்கார்ந்து வாசிப்பாங்க. இந்த மாறுதல் ஆச்சரியமா இருக்கு.

**பரத்வாஜ்:** உங்க கச்சேரிகள் பத்தி சொல்லுங்க. இந்த சீஸன்ல எத்தனை இடங்கள்ல பாடறீங்க?

**அசோக்:** பத்து கச்சேரிகள் இருக்கு. எல்லா சபாலேயும் ப்ரைம் டைம் கச்சேரிதான்.

**பரத்வாஜ்:** நாங்க ஒரு பாட்டுக்கு இசையமைக்கறதுன்னா அதுக்கு வாரக் கணக்கா தயார் பண்றது வழக்கம். கச்சேரிகளுக்கு அந்த மாதிரி தயாரிப்பு உண்டா?

**அசோக்:** நிச்சயமா! இப்ப பத்து கச்சேரி அடுத்தடுத்து இருக்குன்னா, நூறு கீர்த்தனைகளைத் தயார் பண்ணிப்பேன். கீர்த்தனைகள் ரிபீட் ஆனா, கேக்கற ஆடியன்ஸுக்குத் தப்பபிப்ராயம் வந்துடும். பலர், எல்லா சபாவுக்கும் கேக்க வருவாங்க. அஃப்கோர்ஸ்; ராகங்கள் ரிபீட் ஆறதைத் தவிர்க்க முடியாதுதான். ஆனா புதுசு புதுசா நிறைய உருப்படிகள் நாம தயார் பண்ணிக்கணும். என் கச்சேரிகள்ல கண்டிப்பா தாத்தாவோட ஒரு கீர்த்தனையை முக்கியமா, விஸ்தாரமா பாடற வழக்கம் வெச்சிட்டிருக்கேன்.

**பரத்வாஜ்:** எங்களுக்கெல்லாம் ஒரு பாட்டுக்கு ஃபீட் பேக் தெரிய குறைஞ்சது ஆறு மாசம் காத்திருக்கணும். ஆனா, உங்களுக்கு அப்படி இல்லை இல்லையா?

**அசோக்:** மூணு மணி நேரத்துல தெரிஞ்சிடும். ரசிகர்கள் கச்சேரி நடுவுல எழுந்து போனா, அப்பவே கூடத் தெரிஞ்சிடும். இந்த டிசம்பர் சீஸன்ல நீங்க ஒரு லெக்-டெம் நிகழ்ச்சி நடத்தறீங்க போலிருக்கே?

**பரத்வாஜ்:** ஆமா! சினிமா இசைன்னா என்ன? அது எப்படி உருவாகுதுன்னு விளக்கி ஒரு ஸ்பீச் தரேன். இது பத்திப் பேச நிறைய விஷயம் வெச்சிருக்கேன். ஒரு தியாகராஜ கீர்த்தனையை லேசா சாயல் மாத்தி, ராகம் மாத்தாம, நவீனமா புது மெட்டுல ஒரு தெலுங்கு படத்துல தந்தேன். ஜேசுதாஸ் பாடி, சூப்பர் ஹிட் ஆச்சு அந்தப் பாட்டு. ஆனா, என்ன பேசினாங்க தெரியுமா? தியாகராஜர் கீர்த்தனையை ஜேசுதாஸ் பாடியிருக்கார். அதுல பரத்வாஜோட பங்கு என்ன இருக்குன்னு கேட்டாங்க! சிரிப்புதான் வந்தது. சினிமா இசையமைப்பாளரோட பணி என்னன்னே பலருக்குத் தெரியலை. இன்னிக்கு ஒரு படத்தோட வெற்றி தோல்வியே மூணு பேரைச் சேர்ந்ததுதான்! நடிகர்-இயக்குநர்-இசையமைப்பாளர். இதுல யார் ஒருத்தர் சொதப்பினாலும் படம் கெட்டுடும். இந்த சூட்சுமத்தைப் பத்திப் பேசப் போறேன்.

**அசோக்:** நல்லா பண்ணுங்க சார். நான் அவசியம் அந்த ப்ரோக்ராமுக்கு வரேன். எனக்குக்கூட ஒரு முழு படத்துக்கு இசையமைப்பாளரா வொர்க் பண்ணணும்னு ஆசை இருக்கு.

**பரத்வாஜ்:** சபாஷ்! யு ஆர் வெல்கம்!

தொகுப்பு: **கிருஷ்ணன்**
படங்கள்: **வெங்கடேஷ்**



# கலைஞனுக்குள்ளே மனிதனைத் தேடி...

'கலைஞனுக்குள் ஒரு மனிதன்'– பழங்கால சிறுகதைத் தலைப்பு மாதிரி தெரிகிறதா?

இந்த இசை சீஸனில் நடக்கும் ஒரு செமினாரின் சப்ஜெக்ட் இது! 'The Human in an Artist' செமினார் டிசம்பர் 11ம் தேதி சென்னை பாரதிய வித்யாபவனில் நடத்தியது 'முத்ரா'.

"கலை, மனிதனின் மேலான வெளிப்பாடு. கலைஞர்களுக்கு மனிதத்தை விளக்க வேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டு விட்டது?" என்று முத்ராவின் செயலர் பாஸ்கரிடம் கேட்டோம்.

"இந்த செமினாரின் நோக்கம் மிகத் தீவிரமானது. இசையைத் தொழிலாகக் கொள்பவர்கள் அதற்கேற்பத் தம்மைத் தயார் படுத்திக் கொள்வதற்கான உத்திகளை விளக்குவது ஒரு பக்கம். தொழில் ரீதியில் இசையை அணுகுவதைப் புரிந்து கொள்வது இன்னொரு பக்கம்.

நாங்கள் மாதந்தோறும் 'முத்ரா நியூஸ் லெட்டர்' ஒன்றை எல்லா கலைஞர்களுக்கும் அனுப்புவோம். வெற்றிகரமான கலைஞர்கள், அந்த வெற்றியை எவ்வாறு அடைந்தார்கள் என்பதைத் துல்லியமாக வெளிப்படுத்தும் விதமானதொரு விரிவான பேட்டி அதில் இருக்கும். இதன் மூலம் குறிப்பிட்ட ஒரு கலைஞரின் 'கேரக்டர்' முழுவதுமாக வெளிப்பட்டு விடும்.

"இந்த அனுபவம்தான் இப்படியொரு கருத்தரங்கின் அவசியத்தை எங்களுக்கு உணர்த்தியது. இசைத் துறையில் இங்கே பல மகா வித்வான்கள் உள்ளனர். உயர்ந்த சங்கீதம் அவர்களுக்கு வசப்பட்டிருக்கலாம். ஆனால் ஒரு மனிதனாக அவர்கள் சறுக்குவதை அருகே சென்றால் காணலாம். கலை மனிதத்தனத்தை நசுக்கிவிடுமா என்ன? ஆனால் கலையின் மூலம் வந்து சேரும் புகழும் செல்வமும் அதைச் செய்யக்கூடும். இது பற்றிய ஒரு மனோதத்துவ ஆராய்ச்சியும் தீர்வும் தருவதுதான் எங்கள் கருத்தரங்கின் நோக்கம்."

"சிறந்த மனநல வல்லுநர்களையும் நிர்வாகவியல் அறிஞர்களையும் நடத்தச் சொல்லியிருக்கிறோம். ஈகோ, பொறாமை, உயர்வு மனப்பான்மை, தாழ்வு மனப்பான்மை, மனிதத் தன்மை, வாழ்வின் நகைச்சுவை அம்சங்கள், ஒத்துழைப்பு, சேர்ந்து பணியாற்றுதல், புரிந்து கொள்ளுதல் இப்படி பல்வேறு அம்சங்கள் குறித்தும் கருத்தரங்கம், கலந்துரையாடல். ஒரு முழுமையான மனிதனாகவும் கலைஞனாகவும் தம்மைத் தயார் படுத்திக் கொள்வது எப்படி, எப்படி கமர்ஷியலாகவும் வெற்றி காண்பது என்கிற இரு கோணங்களில் இது ஆராய்ந்து உதவக் கூடியதாக இருக்கும்."

"கலைஞர்கள் தரப்பில் இந்த கருத்தரங்குக்கு வரவேற்பு எப்படி?"

"வெளிப்படையாக ஆதரிக்காதவர்கள் கூட இதன் முக்கியத்துவத்தை உணராமல் இருக்க மாட்டார்கள். 'முத்ராவின்' முந்தைய பல கருத்தரங்குகளுக்கு நல்ல வரவேற்பு இருந்தது போலவே இதற்கும் இருக்கும் என்று நம்புகிறேன். வராதவர்களுக்குக் கூட நாங்கள்தான் நியூஸ் லெட்டர் மூலம் முழு விவரங்களும் அனுப்பிவிடுவோமே!"

சந்திப்பு: கிருஷ்ணன்
படம்: வெங்கடேஷ்




மீனா ஒரு ஜமீன்தார் மகள். முதல் காட்சியிலேயே, ஒரு வழக்குக்காகச் சென்னைக்கு வரும் ஜமீந்தார் இறந்துவிட, பார்த்திபனின் டாக்ஸியில் ஏற்றி எடுத்துப் போகிறார் மீனா. ஊரில் ஜமீந்தாருக்கு ஏகக் கடன். போதாக்குறைக்கு அவரது உடன்பிறப்பு, நயவஞ்சகமாக வீட்டையும் அபகரிக்க, கடன்களைத் தீர்க்காமல் காரியம் செய்ய விட மாட்டேன் என்று வில்லத்தனம் செய்யும் ஆனந்த்ராஜ். பார்த்திபன் தன் டாக்ஸியை அடகு மாதிரி வைத்து, ஜமீந்தாரை 'வழி'யனுப்பி வைக்க, டாக்ஸியை மீட்டுத் தரும் பொறுப்பு மீனாவுக்கு. டாக்ஸி மீளும் வரை மீனாவுடன் இருக்க வேண்டிய பொறுப்பு பார்த்திபனுக்கு. இறுதியில் டாக்ஸி கிடைக்கும்; டாக்ஸியுடன் வேறென்ன கிடைக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை.

நீண்ட நாட்களுக்குப் பிறகு ஒரு சிறுகதையின் இறுக்கமும் கட்டுக்கோப்பும் ஒரு சினிமாவுக்குக் கிடைத்திருக்கிறது. யானை கட்டிப் போரடிக்கிற கதையாகப் பார்த்திபனைப் போட்டுவிட்டு, ஆழ்ந்த சோகப் பின்னணியுள்ள கதைக்கு 'ஹ்யூமரஸ் டச்' கொடுக்க இயக்குநர் செல்வா பட்டிருக்கும் பாடு கொஞ்ச நஞ்சமல்ல. அதில் முழு வெற்றி கண்டிருப்பது தான் ஹைலைட்.

சாதாரணமாகப் பேசுகிற வசனங்களையே புரட்டிப் புரட்டி, முக பாவத்தை மறைத்துக் குரலில் மட்டுமே ஏற்ற இறக்கங்களைக் காட்டி, படம் முழுக்க பேசிக் கொண்டே இருக்கிறார் பார்த்திபன். ஓரிடம்கூட அலுப்பூட்டவில்லை என்பதுதான் ஆச்சர்யம்.

சராசரி டிரைவர், ரம்பா ரசிகர், பொள்ளாச்சி ஜமீன் பங்களாவைச் சுற்றிய கதை என்பதாலேயே பின் பகுதியில் சேர்த்திருக்கும் அந்த ஷூட்டிங் காட்சிகள் இறுக்கமான கதைக்கொரு இழுவைத்தனத்தைத் தந்து விடுகின்றன. ரம்பாவுக்காகப் பார்த்திபன் உருகுவதும் மீனா பொறாமை கொள்வதும் க்ஃ கமார் அரை மணி நேரம் வளர்த்துவது அலுப்பூட்டுகிறது. செல்வா, தம் தாடியைப் போலவே இந்தப் பகுதிகளையும் 'ட்ரிம்'மாக்கியிருக்கலாம்.

கௌரவ வேடமென்றாலும் ரம்பா அல்லவா? ஆகவே ஒரு கனவுப்பாடல். குலுக்கு நடனம். இசை - யாரது? தேவாவா! அடி மடியிலேயே கை வைப்பதுபோல புகழ் பெற்ற 'கபி கபி மேரே தில் மே'வையே இம்முறை ஜெராக்ஸ் எடுத்து விட்டார்!

ஜமீந்தாருக்கு ஏன் அத்தனை கடன், அவர் என்ன செய்தார், ரேஸுக்குப் போனாரா, காக நோட்டில் கப்பல் செய்து விட்டாரா என்பது பற்றி அரை வரிக் குறிப்பாவது இருந்திருக்கலாம்.

ஆனால், வழக்கமான திருப்பங்கள், அடிதடி, சென்டிமென்ட் உருகல்களை முற்றிலுமாகத் தவிர்த்துவிட்டு, அதிகபட்ச நேர்த்தியுடன் ஒரு படத்தைத் தர முயன்றிருக்கும் இயக்குநர் செல்வாவுக்கு ஒரு சபாஷ். மாறுபட்ட பாத்திரத்தைத் திறம்படச் செய்திருக்கும் பார்த்திபனுக்கு ஒரு சந்தோஷமான கைகுலுக்கல்.

— ஔரங்கசீப்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

